## (1) தேர்வு

இன்று அஜிதனுக்கு பத்தாம் வகுப்பு தேர்வு முடிவுகள். நாலைந்து நாட்களாகவே அருண்மொழி பதற்றமாக இருந்தாள். பதற்றத்தை எனக்கும் தொற்றவைக்க முயன்றாள். நான் பதற்றப்படக்கூடாது என்ற எண்ணத்துடன் இருந்தாலும் மெல்லமெல்ல மாறிக் கொண்டிருப்பதாகவும் எனக்கு ஓர் எண்ணம்.

காலையில் அருண்மொழி எழுந்துவந்ததும் நான் என் வழக்கமான உபதேசத்தை ஆரம்பித்தேன். "இதோ பார் அருணா, அவன் என்ன மார்க் வாங்கிறானோ அதான் அவன்... அவன் எப்டி இருந்தாலும் அவன் நம்ம புள்ளை...அந்த மார்க் இந்த மார்க்னு அனாவசியமா நீ எதிர்பார்ப்புகளை வளத்துக்காதே..அதை அவன் மேலே சுமத்தி அவன் மனசில கவலைய வளர விடக்கூடாது... தயவு செஞ்சு நான் சொல்றதைக் கேள். மார்க்கைப்பத்தி நீ அலட்டிக்கிடாதே...அவன் வாங்குற மார்க்கை அவனே வந்து சொல்லட்டும்...நல்ல மார்க்கா இருந்தா சந்தோஷப்படுவோம்...இல்லேண்ணா விட்டிருவோம்..."

"இல்ல ஜெயன், ஒரு நாநூறாவது இல்லாட்டி அவன் ·பஸ்ட் குரூப் எடுக்கமுடியாது...சரி, உனக்கு எல்லாரையும் தெரியும்.....ஆனா முந்நூத்தி எழுபத்தஞ்சாவது எடுக்கணும்ல?" நான் எரிச்சலுடன் "ஏன் ·பஸ்ட் குரூப் எடுக்கணும்னு ஏதாவது வேண்டுதலா? மத்த குரூப்லயும் பிள்ளைங்க படிக்குதுல்ல? பேசாம இரு... பாஸ் ஆனாபோரும்... அதுகூட எதிர்பார்ப்பா இல்ல..." அவள் சோகமாக "நான் அதுக்காச் சொல்லல்லை"என்றாள். "...நீ எதுக்காகவும் சொல்லவேண்டாம்..." "நல்லாத்தான் எழுதியிருக்கான்னு சொன்னான்..." "அது அவன் சொல்றது. அவன் கையெழுத்தைப்பத்தி உனக்குத்தான் தெரியுமே"

எல்லா சிக்கல்களும் ஆரம்பித்தது அங்கிருந்துதான். அதற்கு முக்கியமான காரணமும் நானே. முதிரா இலட்சியவாதங்கள். அப்போது தருமபுரியில் வேலைபார்த்தோம். எல்.கெ.ஜியில் பையனைச் சேர்க்க முனைந்தபோது "...நல்ல ஸ்கூல் அது இதுண்ணு சொல்றதெல்லாம் சும்மா டுபாக்கூர்... ஏதாவது ஒரு ஸ்கூலிலே போய் எழுத்து கத்துக்கிடணும்... அவ்வளவுதான்...இது இப்ப என்ன? எந்த ஸ்கூல் வீட்டு பக்கத்துல இருக்கோ

அதுல சேக்கணும்.அதான் நல்லது.சும்மா குழந்தைகளை அங்க இங்கன்னு வேன்லயும் ஆட்டோலயும் போட்டு அலைக்கழிக்கக் கூடாது...” என்றேன்

அதை அவளும் ஏற்றுக் கொள்ளவே அவனை அருகே செந்தில்நகரில் ஒரு பள்ளியில் சேர்த்தோம். அங்கே கூலிவேலைக்கு ஆளெடுப்பதுபோல வீட்டில் சும்மா இருக்கும் பெண்களை வைத்து வகுப்பு எடுத்தார்கள். ”இப்பவே படிப்பு அது இதுண்ணெல்லாம் ஓவர் எக்ஸைட் ஆகவேண்டாம்... பிள்ளை அவன் பாட்டுக்கு வளரட்டும். கொஞ்சம் தெளிஞ்சதுக்குப் பிறகு அவனே படிப்பான்”என்றேன். சதா குழந்தைகள் படிப்பை பற்றியே பேசும் சக ஊழியர்கள் மேல் இருந்த கசப்பும் ஏகத்தாளமும் அப்படிச் சொல்லவைத்தன. அவனுடன் இரவு பகலாக விளையாடுவதில் காட்டிய உற்சாகத்தை அவன் என்ன படிக்கிறான் என்பதில் செலுத்தவில்லை.

யு.கெ.ஜி முடித்து ஒன்றாம் வகுப்பு குமரி மாவட்டத்தில் பத்மநாபபுரம் பள்ளியில். அங்கேசென்றபோது அவர்கள் சொன்னார்கள், பையன் சராசரிக்கும் மிகக் கீழே, அவனுக்கு எழுதவே வரவில்லை என. சோதித்துப் பார்த்தால் அது உண்மை. அவனுக்கு ஒன்றுமே தெரியாது. மெல்லமெல்ல அவனை பயிற்றுவிக்க முயன்றபோதுதான் மெல்லமெல்ல அதன் உள் விஷயங்கள் எனக்குத் தெரிந்தன. அஜிதனுக்கு சிறுவயதிலேயே இடது கைப்பழக்கம். அதை பொதுவாகக் கவனித்திருந்தோம் என்றாலும் பெரிதாக எடுத்துக் கொள்ளவில்லை. அடிதடி,நுட்பமான வேலை என்றால் மட்டும்தான் இடது கை. அவன் பள்ளியில் அவனை முரட்டுத்தனமாக வலது கைக்குப் பழக்கியிருக்கிறார்கள். அவன் அதற்கு ஒத்துவராதபோது அவனை தொடர்ந்து அடித்திருக்கிறார்கள். அந்தப் பள்ளி பாதிரிமார்கள் நடத்துவது. ”டிசிப்ளின் இருந்தா எல்லாம் வந்திரும்சார்.. ”என்பார் அந்த பாதிரியார். கூட எப்போதும் கையில் கம்புடன் ஒரு கன்யா ஸ்தீரீ.

சின்ன வயதில் மழலையர் பள்ளிக்குப் போகமாட்டேன் என்று அவன் தொடர்ந்து அடம்பிடிப்பான். அது சிறுவயதில் என் வழக்கமும் கூட. நான் ஐந்தாம் வகுப்புவரை அடம் பிடித்தவன். ”நீ இப்டி ராப்பகலா அவன்கிட்டே கொஞ்சி குலவினா அவன் எப்டி ஸ்கூலுக்குப் போவான்..?”என்று அருண்மொழி சொல்வாள். அதற்காக அவனைக் கொஞ்சாமல் விடமுடியுமா? நான் அவனிடமிருந்து புதிதாகக் கற்றுக் கொண்டே இருந்த நாட்கள் அவை. ”இப்டி பையன் கிட்டே பேசிட்டே இருக்கக் கூடாது சார்... அப்றம் அவங்க செல்லம் கொஞ்ச ஆரம்பிச்சிருவாங்க”என்றார் பக்கத்து

வீட்டுக்காரர். 'கொஞ்சிட்டுப்போறான் சார்!" .அதை அப்போது அப்படித்தான் எடுத்துக் கொண்டிருந்தேன். ஆனால் அவன் மனதில் பள்ளிக் கல்வி பற்றி மிக ஆழமான ஒரு கசப்பை, எதிர்ப்புணர்வை அந்த மழலையர் பள்ளி உருவாக்கியிருந்தது.

நான் அவனை மீண்டும் இடது கைக்கு மாற்ற முயன்றேன். அது இன்னும் சிக்கலை உருவாக்குகிறது என்று தோன்றவே விட்டுவிட்டேன். வலது கைக்கு பழகிவிட்டிருந்தான். ஆனால் எழுத்துக்கள் மிக மிகச் சிக்கலாக இருக்கும். ஆச்சரியமாக சிலசமயம் அப்படியே கண்ணாடிப்பிம்பம் போலவே முழு வார்த்தையையும் எழுதிவிடுவான். அவனை பயிற்றுவிக்க முயலும் தோறும் அவனுக்கு பீதியும் விரக்தியும் ஏற்பட்டது. முதல் பத்து நிமிடங்களுக்குப் பின் அப்படியே மூளை ஸ்தம்பித்து விடும். அதன் பின்னர் ஒரு சொல் கூட கற்பிக்க முடியாது.

சுந்தர ராமசாமியிடம் இதைப்பற்றிச் சொன்னேன். "நீங்க டீச் பண்ணாதீங்கோ...பிள்ளைகளை டீச் பண்றதுக்கு சுத்தமா தகுதியில்லாத ஆள் அவங்க அப்பாதான்...இப்ப உள்ள தேவை ஏபீசீடீ சொல்லிக் குடுக்கிறது. நீங்க அவன் எதிர்காலத்தைப் பத்தி கவலைப்பட்டு அவன்மேல ஏறி உக்கார டிரை பண்ணுவீங்க...டியூஷன் வைங்க...அப்டியே விட்டிருங்க... செடிகள்லாம் பாறையையே மீறி வளந்திருது..குழந்தைகளுக்கு எல்லாத்தையும் தாண்டி வளரக்கூடிய உயிர்ச்சக்தி இருக்கு..." என்றார்.

அப்போது ஆரம்பித்த டியூஷன். ஆனால் டியூஷன் ஆசிரியர்கள் என்னை தெருவில் பார்த்தால் புலம்புவார்கள். "இ-ங்கிற எழுத்தை மட்டும் ஒரு ரெண்டாம் கிளாஸ் பையனுக்கு ஒரு வாரமாச் சொல்லித்தாறேன் சார்...என்ன சார் சொல்றது?" அவன் எப்படியோ ஒன்றைக் கற்றுக் கொண்டான். மூளை வளர்ச்சி இல்லாத குழந்தைகளின் சில பாவனைகள். இதை எங்கோ அவன் கவனித்திருக்க வேண்டும். ஆசிரியைகள் எது சொன்னாலும் வாயை ஒருமாதிரி காட்டுவான். மண்டையை உருட்டுவான். அவர்கள் மெல்லமெல்ல அவனை அடிப்பதை நிறுத்தவே அதை தொடர ஆரம்பித்தான். ஆனால் இது வெளியேதான். வீட்டில் அவன் அசாதாரணமான சுட்டி. அவனுடைய நகைச்சுவை உணர்வையும் சாகசத்தன்மையையும் நான் ஒவ்வொரு கணமும் வியந்துகொண்டிருந்தேன்.

இரண்டாம் வகுப்பு ஆசிரியை என்னிடம் சொன்னாள் "சார் பையனுக்கு எதாவது டிரீட்மெண்ட் எடுங்க சார்... பொறவு சொல்லலேண்ணு

சொல்லப்பிடாது"  அடிவயிற்றைக் கவ்விய அச்சத்துடன் "என்ன மேடம்?" என்றேன். "அவனுக்கு பிரெய்ன் குரோத்ல என்னமோ பிரச்சினை இருக்கு சார்...". நான் கடும் சினத்துடன் "... சும்மா எதாவது சொல்லி அவன் வாழ்க்கைய கெடுத்திராதீங்க...அவனுக்கு ஒண்ணுமில்லை. கைமாறி எழுதவச்சதினால கொஞ்சம் எழுத்து மோசமா இருக்கும்..அதுக்காக?"என்றேன். எனக்கு கண்ணீரே வந்துவிட்டது. "நாங்க சொல்லியாச்சு..இனி எங்கமேலே பழி சொல்லக்கூடாது..." " ஏய், இனி இந்தபேச்சை எவளாவது எடுத்தீங்கண்ணா வெட்டிப் போட்டிருவேன்..." என்று தெருவில் நின்று கூவினேன். பையனை அணைத்தபடி கிட்டத்தட்ட ஓடினேன்.

அருண்மொழியிடம் சொன்ன போது அவள்  கதறி விட்டாள். ஒன்றும் தெரியாமல் அஜிதனும் அழுதான். அவனையே பார்த்தேன். உண்மையிலேயே மூளைத்திறனில் ஏதாவது சிக்கலா? வீடு முழுக்க புத்தகங்கள். இரவுபகலாக புத்தகம் பார்க்கும் புத்தகப் பிரியன் அவன். அந்தவயதிலேயே நான் அவனுக்கு பலநூறு கதைகளைச் சொல்லியிருந்தேன், கணிசமான கதைகளை அவனே மீண்டும் சொல்வான். மொத்த ராமாயண, மகாபாரதத்தையே அவனுக்கு நான்கு நான்கு மணிநேரம் வீதம் சொல்லி கேசட்டில் பதிவு செய்து வைத்திருந்தேன் [அதில் "தசரதனுக்கு நாலு மனைவி...மனைவீண்ணா..." என நான் இழுக்க " ...எங்க அம்மா உனக்கு மனைவிதானே..மேலே சொல்லு'  என அவன் மழலையில் சொல்லும் இடம் என் நண்பர்களால் மிக விரும்பபட்டிருந்தது] மந்தபுத்தி என்று சொல்லும்படி என்ன இருக்கிறது? ஒருவேளை வளர வளந்த்தான் தெரியுமோ? ஒன்றும் புரியவில்லை.

சிலநாட்கள் கழித்துதான் அவன் பள்ளியில் அப்படி நடிப்பதை கண்டுபிடித்தேன். ஆனால் அது அவனுக்கே தெரியாது. அவனுக்கு எல்லா மிஸ்ஸூம் 'கெட்டமிஸ்', 'தடிச்சி மிஸ்' தான். ஆசிரியர்கள் அவனை மனமார வெறுத்தார்கள். அவனது கல்வி வாழ்க்கையில் அவனை விரும்பிய ஒரு ஆசிரியரை ஒன்பதாம் வகுப்பு வரை அவன் காண நேர்ந்ததில்லை. எல்லா பாடங்களிலும் அவனுக்கு சிவப்பு மைதான். எப்போதோ ஒருமுறை எழுபது மதிப்பெண் கணிதத்துக்கு வாங்கியது தவிர்த்தால் அவன் எப்போதுமே தேர்வுகளில் வென்றதில்லை. அவனது வகுப்புப் பாட நூல்கள் எழுதப்படாமலிருக்கும். அவற்றை ஆசிரியர்கள் அவனை அடித்து வதைத்துப்

பார்த்தபின் வேறு பையன்க¨ளை  வைத்து எழுத வைப்பார்கள். அந்த எழுத்துக்களை இவனது எழுத்துக்களுடன் ஒப்பிட்டுப் பார்த்து அருண்மொழி கண்ணீர் விட்டு அழுவாள்.

ஆனால் மூன்றாம் வகுப்பு முதல் அவன் பெரும் வாசகன். ஒரே இரவில் சிவகாமியின் சபதத்தை வாசிக்கும்போது அவன் ஐந்தாம் வகுப்பில் படித்துக் கொண்டிருந்தான். அப்போது தமிழுக்கு அவனுக்கு நூற்றுக்கு பூஜ்யம் மதிப்பெண் அளித்தாள் ஆசிரியை. சோவியத் ருஷ்ய வெளியீடுகளான அறிவியல்நூல்களை இரவு பகலாக படிப்பவனுக்கு அறிவியலில் ஒரே பாடத்தில் ஒரே வினாவைக்கூட எழுதத் தெரியவில்லை. முனைவர் ஏ.கெ.பெருமாளின் அத்தனை வரலாற்று நூல்களையும் ஆறாம் வகுப்புக்குள் அவன் வாசித்திருந்தான், வரலாற்றில் ஒருபோதும் இரட்டை இலக்க மதிப்பெண் வென்றதில்லை.

வீட்டுக்கு வந்திருந்த நண்பர் பாவண்ணனிடம் புலம்பியபோது அவர் சொன்னார், ''தம்பிக்கு அறிவில்லைன்னா அறிவான பிள்ளைகளே உலகத்திலே இல்லைண்ணு அர்த்தம்..அவனுக்கு சொல்லிக்குடுக்க டீச்சர்களால முடியலை. கவலைப்படாதீங்க.. அவனே படிப்பான்...''. முதல் பிரச்சினை எழுத்துதான். ·பூக்கோ சொல்லியிருக்கிறார் என்று நினைவு, நம் பண்பாட்டில் முதலில் குழந்தையின் விரல்களுக்கு ஆக்ரோபேடிக்ஸ் சொல்லிக் கொடுக்கிறோம் என. அதைக் கற்காமல் உலகமே அவனுக்கு இல்லை. எழுத முடியாமையில் இருந்து உருவான கசப்பு காரணமாக பள்ளிமேலேயே கடும் துவேஷம்.

அதன்பின் நகர்கோயிலில் புகழ்பெற்ற கிறித்துவ பள்ளியில் அவனைச் சேர்த்தோம். அவன் வாழ்க்கையை நரகமாக்கியது அந்தப் பள்ளி. கூடவே என் வாழ்க்கையையும். அனேகமாக தினமும் எனக்கான கட்டளைகள். அதன்படிப் பள்ளிக்குச் சென்றால் கொலைக்குற்றவாளியை நடத்துவது போல நடத்துவார்கள். மணிக்கணக்காக யார் யாருக்காகவோ காத்திருக்க வேண்டும். முதலில் ·பாதர். அவரிடம் அனுமதி பெற்றபின் ஸிஸ்டர். அவர் சொன்னபின் வகுப்பு ஆசிரியை. அதன் பின் பாட ஆசிரியை. ஒவ்வொருவரும் எனக்கு உபதேசங்கள் அளிப்பார்கள். வசைபாடுவார்கள். மிரட்டுவார்கள். என் இது நாள் வரையிலான வாழ்க்கையில் நான் மிக அதிகமாக எங்காவது அவமானமும் சிறுமையும் பட்டிருக்கிறேன் என்றால் அந்தப் பள்ளியில்தான்.

அஜிதனை அவன் ஒரு உதவாக்கரை என்றும், முட்டாள் என்றும் முழுமையாக நம்பச் செய்தது அந்தப் பள்ளி.  அந்தப் பள்ளி அளித்த அழுத்தம் காரணமாக நானும் அக்காலத்தில் அவனிடம் சற்றே கடுமையாக நடந்து கொண்டேன். நாலைந்துமுறை அவனை அடித்திருக்கிறேன். 'முன்னேற்ற' சீட்டை தூக்கி வீசியிருக்கிறேன். புத்தகங்களை கிழித்து  எறிந்திருக்கிறேன். அதன் பின் அவனை அணைத்து கண்ணிருடன் சமாதானம் செய்வேன். இரவில் தூங்கும் அவனைப் பார்த்தபடி நிற்பேன். என் தந்தைக்கு நான் கடுமையான மன உளைச்சல்களை அளித்திருக்கிறேன். ஆன்மீகத்தேடல் அது இது என்று வீட்டை விட்டு ஓடியிருக்கிறேன். என்னைப் பிரிந்தபோது அவர்  மனம் உடைந்து பலநாட்கள் ஆஸ்பத்தியிரில் கிடந்திருக்கிறார். அந்தப் பாவம்தான் என்னைத் தொடர்ந்து வந்து கொண்டிருக்கிறதா என மனம் ஏங்கும்

அவன் ஆறாம் வகுப்பு படிக்கும்போதுஒருநாள் என் கழுத்துவலிக்காக காயத்திருமேனி எண்ணையை போட்டு நீவி விட அவனிடம் சொன்னேன். நான் குப்புறக் கிடக்க அவன் என் மீது அமர்ந்திருந்தான். அருண்மொழி அவ்வழியாகசென்றாள். என்னிடம் "ஏன், சொல்லியிருந்தா நான் போட்டுவிடமாட்டேனா?" என்றாள். "இதில போட்டிருக்கு…உலகத்திலேயே நமக்கு யாரை ரொம்ப பிடிக்குமோ அவங்கதான் போட்டு விடணும்ணு…" என்றேன்.

சட்டென்று முதுகில் கண்ணீர் சூடாக விழுவதை அறிந்தேன். எழுந்து பார்த்தால் அழுது கொண்டிருந்தான். "என்னடா? என்னடா?"என்றேன். பதில் சொல்லாமல் குறுகி அமர்ந்து அழுதான். "என்னடா?" என்று கேட்டபோது "உனக்கு நெஜமாவே என்னைய ரொம்ப பிடிக்குமா?"என்றான் "என்னடா இது முட்டாத்தனமா கேட்டுட்டு…அப்பாக்கு உலகத்திலேயே உன்னைத்தான் ரொம்பப் பிடிக்கும்… இதுகூட தெரியாதா உனக்கு?" என்றேன். அப்படியே சீறல்போன்று ஒலி எழுப்பி அழுதான். "நான் நெனைச்சேன், உனக்கு என்னை பிடிக்கல்லேண்ணு…நீ பெரிய ஆளு…புக்கெல்லாம் எளுதறே…காலேஜ் சாரெல்லாம் உன்னை தேடி வராங்க..நான் மக்குதானே..எனக்கு ஒண்ணுமே தெரியல்ல… அதான் நீயும் அம்மாவும் என்னை அடிக்கிறீங்க…நான் இனிமே ஸ்கூலுக்கு போகல்லை..என்னைய ஓட்டலிலே சேத்துவிடு..நான் கஷ்டப்பட்டு வேலை செஞ்சு ரூபா கொண்டுவந்து அம்மாட்ட குடுப்பேன்…."

அந்த நிமிடத்தில் என் நெஞ்சு பொங்கியதை இப்போதும் கை நடுங்காமல் எண்ண இயலவில்லை. எப்போதோ அந்த ஓட்டல் பேச்சு அருண்மொழி வாயில் வந்திருக்கிறது– படிக்காவிட்டால் ஓட்டல் வேலைக்குத்தான் போக வேண்டும் என்று. அப்படியே அவனை அணைத்துக் கொண்டேன்.

"நீ மக்குண்ணு யாருடா சொன்னா? " "எங்க மிஸ் எல்லாருமே சொல்றாங்க…அம்மாவும் சொன்னாங்க..நீ கூட சொன்னே..''நான் அவனை அணைத்து "நீ மக்குன்னா உலகத்திலே யாருமே புத்திசாலி இல்லை…அப்பா உன் மேல உள்ள ஆசையிலதானே அப்டி சொன்னேன்" என்றேன்.

அன்று அவனிடம் வெளியே கூட்டிப்போய் பேசினேன். நான் ஒரு மாணவனாக எத்தனை கொடுமைபடுத்தப்பட்டேன் என்று சொன்னேன். என்னை பெரும்பாலான ஆசிரியர்கள் வெறுத்தார்கள். அடித்தார்கள். எனக்கு கணக்கு கொஞ்சம்கூட வரவில்லை. என் அப்பா என் விருப்பத்தை மீறி என்னை வணிகவியல் பாடத்தில் சேர்த்தார். நான் அதில் ஒரு முறைகூட தேர்ச்சி பெறவில்லை, படிப்பை முடிக்கவும் இல்லை.

"எங்க அப்பாட்ட பணம் இல்லை. அதனால பயப்பட்டார். நான் அப்டி இல்லை. பணம் வேணும்ணா அதை நான் சம்பாதிப்பேன். அதனால் நீஇனிமே உனக்கு பிடிச்சதை மட்டும் படி… உனக்கு வேண்டிய பணத்தை நானே சம்பாதிக்கிறேன்" என்றேன். "…இனி மூணுமாசம். இந்த பள்ளிகூடத்திலே இருந்து உன்னை கூட்டிட்டுபோய் கவர்மெண்ட் ஸ்கூலிலே சேக்கிறேன்..அங்க உங்கிட்ட யாருமே படிக்கச் சொல்ல மாட்டாங்க… நான் இனி ஒருமுறைகூட உங்கிட்ட படிக்கச் சொல்லமாட்டேன்..மார்க் என்னன்னே கேட்க மாட்டேன்..இனிமே உன்னை யாருமே படிப்பு விஷயமா திட்ட மாட்டாங்க…போருமா?"

மறுவருடம் அரசினர் பள்ளியில் சேர்த்தபோது நண்பர்கள் எதிர்த்தார்கள். நீலகண்டன் அரவிந்தன் "நீங்கள் உணர்ச்சிவசப்படுறீங்க….இதெல்லாம் அப்டி முடிவுசெய்ற விஷயம் இல்லை" என்றார். வசந்தகுமார் மட்டும்தான் "சேர்த்து விடுங்க ஜெயன் படிப்பு வரலேண்ணா என்ன, போராடி ஜெயிக்கிற புத்தி வரட்டும்"என்றார்

ஏழாம் வகுப்பு முதல் அரசாங்கப் பள்ளி. அப்பள்ளி அவனுக்குக் காட்டிய உலகமே வேறு. வீட்டில் சாப்பாடு இல்லாமல் பையன்கள் மதியம் சாப்பிடாமல் பசித்திருபபர்கள் என்ற தகவல் அவன் உலகையே பல நாட்கள்

பல மாதங்கள் கொந்தளிக்கச் செய்திருக்கிறது. தனிமையில் அதை எண்ணி அவன் கண்ணீர் விட்டிருக்கிறான். அவனது சக மாணவர்கள் சனி ஞாயிறில் கூலிவேலைக்குச் சென்று வருவார்கள் என்பதை ஏற்றுக் கொள்ளவே அவனுக்கு கஷ்டம் இருந்தது. பெரும்பாலான நாட்களில் அவன் கொண்டுபோகும் சாப்பாட்டை பையன்கள் சாப்பிட அவன் சத்துணவாக அளிக்கப்படும் உணவை உண்பான். மீன் , இறைச்சி கொண்டுபோகும் நாட்களில் பெரிய டிபன் கேரியர் நிறைய கொண்டுசென்றாக வேண்டும். எங்கே முத்தாரம்மன் கோயிலில் கஞ்சி ஊற்றினாலும் பையன்களுடன் சேர்ந்து போய் சாப்பிட்டு விடுவான். அவனைப்போன்ற பையன்கள் வளரும் பருவத்து வயிற்றின் தீவிரத்தால் அலைவதை அவனே அவர்களுடன் வாழ்ந்து கற்றான்.நானே ஒருமுறை அவனை ஒரு அன்னதான வரிசையில் அமர்ந்திருப்பதைக் கண்டேன்.

புதிய பள்ளி அவனுக்கு நண்பர்களை அளித்தது. நண்பர்கள் அவனுக்கு தன்னம்பிக்கையையும் உற்சாகத்தையும் அளித்தார்கள். பள்ளிக்கு மகிழ்ச்சியாகச்செல்லும் அஜிதனை முதல்முறையாகக் காண ஆரம்பித்தோம். அவன் படித்த கிறித்தவப் பள்ளியில் பள்ளிக்குள் நுழைந்த மறு கணமே வரிசை உருவாகிவிடும். எப்போதும் ஆசிரியர்களின் கண்காணிப்பு இருக்கும். விளையாட்டுகூட விளையாட்டு ஆசிரியரால் அளிக்கப்படும் ஒரு பயிற்சி மட்டுமே. ஒருவரோடு ஒருவர் பேசுவதும் சிரிப்பதும் கடுமையான குற்றம் அங்கே. அத்தனை வருடங்கள் அத்தகைய பள்ளிகளில் படித்தும்கூட அவன் நட்பு என்றால் என்ன என்று அறிந்தது இல்லை. அதைவிட மோசமான விஷயம், நட்பு என்றால் தவறு என்றே கற்பிக்கப்பட்ட குழந்தைகள் அங்கே படித்தார்கள். அந்தஸ்து , சாதி, மதம் நோக்கி கணக்கிட்டே நட்பு கொள்ள வேண்டும் என்று அங்குள்ள குழந்தைகளுக்குச் சொல்லப்பட்டிருந்தது.

இதை ஒரு கொள்கையாகச் சொல்லவில்லை. இப்போதெல்லாம் எனக்கு கொள்கை என்றாலே பயமாக இருக்கிறது. பள்ளிக்கல்வியை இப்போது நேர் பாதிக்கு மேல் நாம் பாதிரிமார்கள் அல்லது துறவியர் கையில் ஒப்படைத்திருக்கிறோம். அவர்கள் அதற்கான தகுதி கொண்டவர்கள் தானா என்றே எனக்கு ஐயமாக இருக்கிறது. பொதுவாகவே அவர்கள் உலக நிராகரிப்பை இயல்பாகக் கொண்டவர்கள். உற்சாகம், உயிர்துடிப்பு அனைத்தையும் அவர்கள் மீறல்களாகவே காண்கிறார்கள். கொஞ்சம்கூட

படைப்பூக்கம் அவர்களிடம் இருப்பதில்லை. அவர்களின் உலகம் 'கூடாதவற்றின்' தொகை. அவர்களின் ஞானம் என்பது விலக்குகளின் பட்டியலே. அவர்களிடம் புத்துலகம் நோக்கி உற்சாகமாக மலர்ந்தெழ வேண்டிய குழந்தைகளை நாம் ஒபப்டைக்கலாமா? அவர்களின் பள்ளியில் பயின்ற மாணவர் ஒரு 'பயிற்றுவிக்கப்பட்ட' மூளையாக ஆகலாம். லௌகீகமாக வெல்லலாம். ஆனால் அவன் இழப்பவை அவன் அடைவனவற்றை விட பல மடங்கு அதிகம் அல்லவா?

இப்போது அந்தப்பள்ளியில் ஆசிரியை வகுப்பில் இல்லாதபோது மாணவர்களை கண்காணிக்க 'குளோஸ்டு சர்க்யூட் ' காமிராக்களை பொருத்தியிருப்பதாகவும், அதைச் சொல்லியே பெற்றோர்களை கவர்வதாகவும் சொன்னார்கள். நம்பவே முடியவில்லை. கண்காணிப்பின் அடக்குமுறையைப் பற்றி எழுதிய ஃபூக்கோ இங்கேவந்து கற்றுக் கொள்ள வேண்டும்.

இந்த அரசுப்ப்பள்ளியில் எல்லமே கட்டற்றுதான். சட்டை கிழியாமல் அஜிதன் பள்ளி விட்டு வரும் நாட்கள் குறைவு. சண்டைகள் சச்சரவுகள். அதைவிட தீவிரமான நட்புகள். பரீட்சைக்கு முந்தையநாள் இரவில் கூப்பிட்டு பொங்கும் பேரார்வத்துடன் ஸிலபஸ் என்ன என்று கேட்கும் சக மாணவன் அஜய்குமார் தான் அஜிதனின் உயிர்நண்பன். ஒருவனின் பையில் இருந்து பணத்தை பிடுங்கி இன்னொருவன் சாப்பிடலாம். "எங்க வீட்லே அம்மை தேங்காத்தொவையலையே போட்டு கழுத்தறுக்கிறாடா. பணமில்ல பாத்துக்கோ...உங்கம்மைட்ட நல்ல கோளியா குடுத்தனுப்பச் சொல்லு' என்று எந்தவிதமான கூச்சமும் இல்லாமல் சொல்லியனுப்பலாம். இந்த உலகமே வேறு. அஜிதனுக்கு அழுக்கில்லா சீருடை அணிந்து போகும் 'கான்வெண்ட்' பையன்கள் மேல் உள்ள இளக்காரமும் நக்கலும் சாதாரணமல்ல. "என்னடா பண்ணுவீங்க?" "கொடுமைல்லாம் ஒண்ணும் பண்றதில்ல அப்பா...டேய், இங்கவாடான்னு கூப்பிட்டு மண்டையிலே ஒரு தட்டு தட்டி அனுப்பிருவோம். முறைச்சான்னா மட்டும்தான் அடி"

ஆனால் நான் அவனை கைவிட்டுவிட்டதாக நண்பர்கள் சொன்னது தவறு என நானறிவேன். அவனுடன் எப்போதும் பேசிக் கோண்டே இருந்தேன். அவன் பேசுவதைக் கேட்டுக் கோண்டே இருந்தேன். அது ஒரு கடமையாக அல்ல. உண்மையிலேயே பையன்களின் உலகம்போல உற்சாகமான ஓர் உலகம் வேறு இல்லை.நகைச்சுவை உணர்வு கொண்ட அஜிதனைப்போன்ற

ஒரு பையனின் உலகம் குமிழியும் கொப்பளிப்புமான ஒன்று [ ஒரு டீம் பையன்க அவனுகளுக்குள்ள பேசறது வேற லேங்வேஜ் அப்பா.. அதில ஒருத்தனை தனியா கூப்பிட்டேன். சின்னப்பையன். 'டேய் என்ன பாசைடா பேசறீங்க?'ன்னு கேட்டேன். அதுக்கு அவன் 'தெலுங்குடப்பிங் அண்ணா' ன்னு சொல்றான்]

மேலும் அவனிடம் நான் எதைவேண்டுமானாலும் பேசலாம். அத்வைதத்துக்கும் விசிஷ்டாத்வைதத்துக்கும் உள்ள வேறுபாடு. தல்ஸ்தோய் ரயில் நிலையத்தில் இறந்ததில் உள்ள குறியீட்டு அர்த்தம். வீட்டுக்கு தொடர்ந்து வந்துகொண்டே இருக்கும் பேராசிரியர்கள், விமரிசகர்கள், ஆய்வாளர்கள் அனைவருக்கும் அவனை தெரியும். அவர்கள் பேசுவது அவனுக்குப் புரியும் என்று அவர்கள் அறிவார்கள். அவன் கேட்டு அறிந்து வளர்வது ஓர் அறிவார்ந்த உலகம். அவனது மோகமே அதில்தான். "தோளுக்குமேலே வளர்ந்தா தோழன்னு சொல்றாங்களே அப்பா" "ஆமாடா. அது ரைட்டுதான்.." "அப்றம் சொல்லு மச்சி..." என்பது அவன் பாணி. "என்னடா சினிமாக்கு போனியா?"என்று ஒருநாள் விளையாட்டாக கேட்டேன் "இந்த பார். நான் போனா உன்னால இந்த ஜென்மத்திலே கண்டுபிடிக்க முடியாது... நீயே ஒரு தத்தக்காபித்தக்கா எங்க போனாலும் நான் கூட்டிட்டுபோகணும் உன்னை... சினிமாவுக்குப் போகல்லை. தெரியாம போக மாட்டேன் போருமா?"

ஒரு கட்டத்தில் அஜிதனுக்கு புனைகதைகளில் ஆர்வம் போய் இயற்கையியலில் ஆர்வம் பிறந்தது. அதற்கு முதற்காரணம் . சு.தியடோர் பாஸ்கரன் .இரண்டாம் காரணம் அ.முத்துலிங்கம். அது தீயாக பற்றிக் கொள்ள அதிலேயே நாட்கள். பறவைகளை பார்ப்பது 'லை·ப் லிஸ்ட்' தயாரிப்பது [117] அதைப்பற்றிய நூல்களை சேகரிப்பது என ஒரு உக்கிரமான பொழுதுபோக்கு பற்றிக் கொண்டது. 'நேஷனல் ஜ்யாக்ர·பிக்' சேனலில் ஒரு நிகழ்ச்சிக்குப் பிறகு பெயர்கள் ஓடிக் கொண்டிருந்தன. "எவ்வளவு பேரு.."என்றேன். "அந்த லிஸ்டுல ஒரு நாள் ஜெ.அஜிதன் பேரும் இருக்கும்" என்றான். பிறகு சிறிய சிரிப்புடன் "..அந்த ஏரியால உள்ளவங்க யாருக்கும் ஜெயமோகன்னா யாருண்ணே தெரிஞ்சிருக்காது...அய்யாதான் பெரிய ஆளு அங்கே"

ஒரு கனவு உருவாகிவிட்டிருப்பதை நான் கண்டேன். வெற்றியும் தோல்வியும் காலத்தின் அளவிலா ஆட்டத்தில் எங்கோ எப்படியோ

தீர்மானமாகிறது.ஆனால் இதேவயதில் என்னை அலைக்கழித்தது இதேபோன்ற ஒரு பெருங்கனவுதான். உக்கிரமான மின்சாரம் ஓடும் கம்பிபோல என்னை அது தகிக்க வைத்தது அன்று. அந்த தகிப்பைக் கண்டேன். இளமைக்கு அழகு அத்தகைய கனவுதான்.

அவன் படிப்புமீது கவனம்செலுத்துவதாகவும் அதற்குக் காரணம் அந்த கனவே என்றும் அருண்மொழி சொன்னாள். வாக்குறுதியின்படி நான் மதிப்பெண்களைக் கவனிப்பதில்லை. சிலமாதம் முன்பு சொன்னான் "இப்ப நீ வேணுமானா மார்க்கைப் பாக்கலாம்". சிரித்தபடி "வேண்டாம்" என்று பேனாவை மூடினேன்.

ஒன்பது மணிக்கு இணையத் தொடர்பு மூலம் தேர்வு முடிவுகளைப் பார்த்தேன். அருண்மொழி பதற்றமாக இருந்தாள். அவனும் பதற்றமாகவே இருந்தான். நான் பதற்றமில்லை என்று சொல்லிக் கொண்டேன். மதிப்பெண்கள். ஐநூறுக்கு நாநூற்று அறுபது. 92 சதவீதம். கணிதத்தில் 99. அறிவியலில் 97. மதிப்பெண்கள் குறைந்தது தமிழில்தான், கையெழுத்து காரணமாக. "அப்பா உன் மூஞ்சியிலே கரிய அள்ளி பூசிட்டேன்ல?"என்றான் சிரித்தபடி. "ஆமாடா"என்றேன். "சும்மா ஜாலியாச் சொன்னேன்பா....உனக்காகத்தானே நான் படிச்சதே"

சாயங்காலம் அ.கா.பெருமாள் வந்தார். "நல்ல மார்க்..இனி எதுக்கு சர்ககர் ஸ்கூல்? பேசாம கான்வெண்டிலே சேருங்க" என்று பல பக்கங்களில் இருந்தும் உபதேசங்கள் வந்தன என்பதை அவரிடம் சொன்னேன். "அதுபின்னே நம்மாளுக புத்தி அப்டித்தானே போகும்?" என்றார்.

ஆனால் இப்போது இதெல்லாம் நாம் சொல்லும் இடத்தில் இல்லை. அஜிதன் அவனே போய் அரசுப்பள்ளியில் தலைமையாசிரியரை பார்த்து விண்ணபப படிவமே வாங்கிவந்துவிட்டான். "·பஸ்ட் குரூப் கெடைக்குமா? " என்றான். "கெடைக்குமாவா? கூப்பிட்டு உக்கர வச்சு குடுப்பாங்க..." என்றார் அ.கா.பெருமாள். "பிள்ளைகளுக்கு மார்க் இருந்தாலே பெத்தவங்களுக்கு ஒரு கெத்துதான்"

நாளை மறுநாள் மதிப்பெண் அட்டை கிடைக்கும். அதற்கு அடுத்த நாள் சேர்த்துவிடவேண்டும். நான் "நீ போனால் போதாதா

அருணா?"என்றேன்.அஜிதன் "இல்லப்பா நீ வரணும்..நீ தான் வரணும்..." என்றான்.

## (2) கொட்டடிகள் வேதபாடங்கள்: தேர்வு குறித்து

' தேர்வு ' கட்டுரை பற்றி வந்த முதல் குறுஞ்செய்தி நண்பர் மனுஷ்யபுத்திரன் அனுப்பியது– கண்ணீருடன் அதை வாசிக்கிறேன் என்று.. தந்தைமை பற்றி தமிழில் எழுதப்பட்ட மிகச்சிறந்த கட்டுரை என்று அவர் வாசித்து முடித்த பின் அதைப்பற்றி மேலும் எழுதினார். அதன்பின் தொலைபேசி அழைப்புகள் குறுஞ்செய்திகள் நூற்றுக்கணக்கான மின்னஞ்சல்கள். பல கடிதங்கள் பிரமிக்கச்செய்தன. பெரும்பாலும் அனைத்து கடிதங்களுக்கும் பதில் போட்டிருப்பேன். எண்ணிக்கை பெருக்கம் காரணமாக தவறுதலாக சில விடுபட்டிருக்கலாம். எவை அந்தரங்கமானவை எவற்றை பிரசுரிகலாமென என்னால் முடிவுகட்ட முடியவில்லை. ஆகவே அக்கடிதங்களின் சாரம் பற்றி என் கருத்துக்களை சொல்கிறேன்.

### பள்ளி யந்திரம்

நம் சமூகத்தில் சாரமான ஒரு பகுதியினர் மனதில் பள்ளி பற்றி இருக்கும் கசப்பான மனப்பதிவு கடிதங்களில் தெரிந்தது.. இந்த அளவு நான் எதிர்பார்க்கவே இல்லை. பலர் கல்விகற்று பெரும்பதவிகளில் இருக்கிறார்கள். சொந்த நிறுவனங்களை நடத்துகிறார்கள். ஆனால் பள்ளிநாட்களில் அவர்கள் தண்டனைக் கைதிகளை விட கொடூரமாகக் கொடுமைப்படுத்தப்பட்டிருக்கிறார்கள். இன்றும் அவர்கள் நெஞ்சில் அந்த கசப்பு எஞ்சியிருக்கிறது.

அவர்கள் கண்டிப்பாக அறிவுத்திறன் குறைந்தவர்கள் அல்ல. ஏன், சாதாரணமானவர்கள் கூட அல்ல. அப்படியானால் அவர்கள் கொடுமைக்கு ஆளானது அவர்களின் தனித்திறனால்தான். கற்பனை ஆற்றல், கேள்விகேட்கும் ஆற்றல், புதிய கோணத்தில் சிந்திக்கும் ஆற்றல், ஒரு துறையில் மட்டும் அதீத ஆற்றல் போன்ற இயல்புகளினால்தான் அவர்கள் வதைக்கப்பட்டிருக்கிறார்கள். அவர்களைக் கற்பித்த பள்ளி என்ற நிறுவனம் ஒரு மாபெரும் இயந்திரம் போன்றது. அது அதற்காகன அளவுகளுடன் உள்ள கச்சிதமான சராசரிகளை மட்டுமே கையாளகூடியது. மீறும் மற்றவர்களை அது நசுக்கும்.

அதன் ஆற்றலுக்குத் தப்பி மேலெழுந்தவர்கள் இவர்கள். மேலெழாமல் அழிந்தேபோன எத்தனையோ பேர் இருக்கலாம். அவர்கள் நமக்கு எழுதப்போவதேயில்லை. உதாரணமாக ஒரு வாசகர் இப்போது ஐரோப்பாவில் முக்கியமான மருத்துவராக இருப்பவர் எழுதியிருந்தார். எட்டாம் வகுப்பில் மதிப்பெண் குறைவாகப்பெற்றதனால் கடும் தண்டனைக்கு வீட்டிலும் பள்ளியிலும் ஆலாகி வீட்டைவிட்டே ஓடிப்போனாராம். ஒருவருடம் ஓட்டல்களில் பணியாற்றினார். கடும் பாலியல் கொடுமைகளுக்கு ஆளானார். தினமும் மூன்றுஙற்ற் வரை அவரை புணர்ந்திருக்கிறார்கள். ஆனால் அப்போதும் வீடு திரும்பவில்லை. அந்த அளவுக்கு பள்ளியை பயம்,வெறுப்பு.

பின்னர் கண்டுபிடிக்கப்பட்டு வீட்டுக்குக் கொண்டுசெல்லப்பட்டபின் அவரை அவரது அப்பா தண்டிப்பதை நிறுத்தினார். அவரைச் சாதாரண பள்ளியில் சேர்த்து முற்றிலுமாக கைவிட்டார். ஆனால் அதன் பின் அவர் மேலெழுந்து தன் ஆற்றல் வெளிப்படும் இடத்தை அடைந்தார். அவர் ஒரு ஓட்டல் தொழிலாளியாக, குற்றவாளியாக ஆகிவிட்டிருப்பதற்கான வாய்ப்பே அதிகம். எத்தனை அபாயகரமான விளிம்பில் வாழ்கிரது நம் மாணவர் உலகம்! இந்த வகையிலான தனிப்பட்ட வாழ்க்கைச் சித்தரிப்புகளை பன்னிரண்டு வாசகர்கள் அனுப்பியிருந்தார்கள்! பள்ளியில் முழுநாளும் குனிந்தே நிற்க வைக்கப்பட்டவர்கள், நான் ஒரு முட்டாள் என்று கழுத்தில் போர்டு மாட்டியபடி பள்ளிவாசலில் நின்றவர்கள், சகமாணவர்களின் கையில் பிரம்பு கொடுக்கப்பட்டு அடிக்கப்பட்டவர்கள்…

### பள்ளிகளும் பாலியல் கொடுமைகளும்

பலரும் சொன்ன விஷயம், பாதிரிமார்கள் மற்றும் துறவியருடனான அவர்களின் இருண்ட அனுபவங்கள். என் கட்டுரையில் நான் பொதுவாக துறவியர்களின் குரூரமான ஒழுங்குமுறை மோகத்தையே குறிப்பிட்டிருந்தேன். அவர்கள் நகைச்சுவை உணர்ச்சியோ மனமலர்ச்சியோ அற்றவர்களாகவே பொதுவாக இருப்பது வழக்கம்– என் மொத்த வாழ்நாளில் அபப்டி இல்லாத ஒரே ஒரு பாதிரியாரையே கண்டிருக்கிறேன். ஆனால் எனக்கு வந்த கடிதங்கள் அவர்களின் மனவக்கிரங்கள் விடுதிகளில் வெளிப்படும் விதம் சார்ந்தவை. அதிர்ச்சி அடையச் செய்பவை அவை.

தமிழ்நாட்டின் புகழ்பெற்ற பள்ளிகளில் நிகழ்ந்தவை. மிக்க குரூரமான பாலியல் வதைகள். அவமதிப்புகள்....

ஒரு கான்வெண்டில் கன்னியா ஸ்த்ரீ ஒருவர் தன்னை இரண்டுவருடங்கள் தொடர்ந்து கீழ்த்தரமான பாலியல் வன்முறைக்கு ஆளாக்கியதை ஒர் இளம் வாசகி விரிவாக எழுதியிருந்தார். அந்த நிறுவனத்தில் அது மிக மிக சாதாரணமாக நிகழ்ந்துவருவது என்று அவர் எழுதி பலருடைய அனுபவங்களையும் சொல்லியிருந்தார். இம்மாதிரி நிறுவனங்களில் மாணவியரின் தற்கொலைகள் தொடர்ந்து நிகழ்கின்றன என்று நாளிதழ்களில் காண்கிறோம். சிறிய செய்தியலைக்குப் பின் அவை 'பேசித் தீர்க்கப்படுகின்றன'. இந்துத் துறவியர் மடத்தில் நடந்ததாக ஒரு நிகழ்ச்சியையும் ஒருவர் எழுதியிருந்தார். தொலைபேசியிலும் சொன்னார். விடுதிகளில் இளம் மாணவர்களை மூத்த மாணவர்கள் பாலியல் கொடுமைக்கு உள்ளாக்குவது மிக சாதாரணமாக நடக்கிறது என்று கடிதங்கள் வழியாக அறிந்தேன்.

நான் இப்போது உணர்வது இதைத்தான். ஒருபோதும் பத்தாம் வகுப்புக்கு கீழே உள்ள குழந்தைகளை நாம் விடுதிகளில் விடக்கூடாது. குறிப்பாக துறவிகள், பிரம்மசாரிகள் நடத்தும் விடுதிகளில். விடுவது தெரிந்தே ஆபத்தை வரவழைப்பது. இக்கடிதம் எழுதியவர்களின் உள்ளத்தில் உள்ள கடும் வலிகளும் சுயவதைமனநிலையும் மிக மிக மனத்தொந்தரவு அளிக்கின்றன. இம்மாதிரி எத்தனையோ வாசித்து அறிந்திருக்கிறேன். நமக்கே அவற்றை அந்தரங்கமாக ஒருவர் எழுதும்போது அது மிகவும் அச்சுறுத்துகிறது. தூக்கமில்லாமல்செய்துவிடுகிறது.

**சிறைக்கொட்டடிகள்**

நாமக்கல், திருச்செங்கோடு முதலிய இடங்களில் தொடங்கி இப்போது பாளையங்கோட்டை கோவை என எல்லா இடங்களிலும் பரவியுள்ள தனியார் சிறப்பு கல்வி நிலையங்களைப்பற்றி வந்த கடிதங்கள் பல பயங்கரமானவை. இந்நிறுவனங்களைப்பற்றி நானும் அறிவேன். சென்ற சில வருடங்களாக என் மகன் அஜிதனை இத்தகைய பள்ளிக்கு அனுப்பும்படி என் நண்பர்களும் சக ஊழியர்களும் பரிந்துரைத்திருந்தார்கள். சராசரி திறன் கொண்ட மாணவர்களை உயரிய மதிப்பெண் பெறவைக்கும் தனிப்பயிற்சி பள்ளிகள் இவை. தொடக்கத்திலேயே ஒரு லட்ச ரூபாய் வரை

செலுத்த எவெண்டும். பின்னர் ஒரு லட்ச ரூபாய் வரை படிப்படியாக செலவாகும். இவை உறைவிடப்பள்ளிகள்.

இது ஒருவகை சிறைக்கொட்டடியேதான். காலை நான்குமணிக்கு சைரன் ஊதியதுமே குழந்தைகள் எழுந்துவிடவேண்டும். எழாத குழந்தைகள் முதலிலேயே கடுமையாக தாக்கப்பட்டு சித்திரவதைக்கு உள்ளாக்கப்படுவதனால் பெரும்பாலான குழந்தைகள் சிறு ஒலிக்கே பாய்ந்து எழுந்துவிடுவார்கள். அரைமணிநேரம் குளியல், பிரார்த்தனை, மற்றும் டீ. பிறகு நாலைந்து பேர் கொண்ட குழுக்களாக அமரச்செய்யப்பட்டு படிக்கச் செய்கிறார்கள். ஒரு குழுவுக்கு ஒரு ஆசிரியர் கூடவே இருப்பார். எட்டரை மணிக்கு படிப்பு முடியும். பின்னர் அரை மணிநேரம் உடையணிந்து தயாராவதற்கு. ஒன்பதரைக்கு பள்ளி ஆரம்பிக்கும். பள்ளியிலும் அதே ஆசிரியர்கள்.

மாலையில் ஐந்துமணிவரை பள்ளி. மாலை டிபன். ஐந்தரைக்கு மீண்டும் அதேபோல படிப்பு. இரவு பத்தரை மணிவரை. அதன் பின் இரவுணவு. பதினொரு மணிக்கு தூக்கம். பெரிய ஹாலில். கூடவே ஆசிரியரும் படுப்பார். மாணவர்கள் தூங்கி குரட்டைவரும்வரை ஆசிரியர் விழித்திருக்கவேண்டும். சில பள்ளிகளில் காலையில் மாணவனின் படுக்கை மற்றும் கால்சட்டையை ஆசிரியர் சோதனை செய்வார்– சுய இன்பம்செய்துகொண்டிருக்கிறானா என்று அறிவதற்காக. அதைச் செய்தால் கண்பார்வை மழுங்கும், படிக்கும் கவனம் சிதறும் என்று ஒரு நம்பிக்கை. ”ஒரு நிமிசம் கூட பையன் மேலே கண் இல்லாம இருக்காது சார்”

படிப்பு என்பது நெட்டுருப்போடுதல். ஒன்பதாம் வகுப்பிலேயே பத்தாம் வகுப்பு பாடத்தை ஆரம்பித்துவிடுவார்கள். பிளஸ் ஒன்னிலெயே பிளஸ் டூ பாடங்கள். இரண்டுவருடம் புத்தகத்தை மீண்டும் மீண்டும் மீண்டும் கையொடிய எழுத வைப்பார்கள். ஒருநாளில் குறைந்தது எட்டு மணிநேரம் எழுத்து! கைவிரல்களுக்கு இரவில் எண்ணை போட்டு நீவுவார்கள். மீண்டும் மறுநாள் எழுத்து. கணிதத்தில் புத்தகங்களிலும் பழைய கேள்வித்தாள்களிலும் உள்ள நூற்றுக்கணக்கான கணக்குகளை அப்படியே செய்யுள் போல மனப்பாடம் செய்யவைக்கிறார்கள். அதிலிருந்துதான் கேள்விகள் வரும். அப்படியே அச்சுஅசலாக எழுதிவிடவேண்டியதுதான். மதிப்பெண்கள் எடுத்துவிடலாம்.

உண்மையிலேயே பிரமிக்கத்தக்க விளைவுகளைக் காட்டுகிறார்கள். 99 சதவீத மதிப்பெண் என்பது மிக மிகச் சாதாரணம். ஆனால் மாணவர்களில் அனைவருக்குமே ஆழமான குணச்சீர்கேடுகள் உணாகிவிடுகின்றன என்று சில் வருடங்கள் கழிந்து பல பெற்றோர் சொல்லியிருக்கிறார்கள். எனக்கு பரிந்துரைத்து, தன் மகனைச் சேர்த்த பேராசிரியருக்கே அந்த்தகைய அனுபவம்தான். தூக்கமின்மை போன்ற நோய்கள். பய்ந்தாங்குள்ளித்தனம் அல்லது அதீத முரட்டுத்தனம். சிலசமயம் இரண்டும் கலந்து. மனசோர்வு மிகச் சாதாரணமாக ஏற்படுகிறது. அங்கே செல்லும் குழந்தைகளில் 80 சதவீதம்பேரும் மதிப்பெண் பெற்று மீள்கையில் மீதிபேர் படிக்கவே முடியாத நிலையை அடைந்துவிடுகிறார்கள்.

ஒரு பள்ளிக்கு நானே சென்று இதையெல்லாம் பார்த்தேன். கடும் தண்டனைகளை. ஓயாத கண்காணிப்பை. அச்சுறுத்தலை. "ஒரு நிமிஷம் கூட வீணாக விடுறதில்லை சார்"என்று சொல்லி அந்த தலைமை ஆசிரியர் எல்லாவற்றையும் அவரேதான் சொன்னார்.– வெற்றிக்கதைகளை மட்டும். உண்மையைச் சொல்லப்போனால் அங்கே நேரில்செல்லாமல் இருந்திருந்தால் நானே அஜிதனை அங்கே விட்டிருப்பேன்.

என் நண்பர் இளங்கோ அத்தகைய பள்ளிகளின் நடைமுறைகளைப் பற்றிச் சொன்னார். அவர் நல்ல மாணவராக இருந்தார். அவரது அப்பா அதற்கு மேல் ஆசைப்பட்டு அத்தகைய ஒரு பள்ளியில் அவரைச் சேர்த்தார். விளைவாக இளங்கோ மிகமுரட்டுத்தனமானவராக ஆனார். படிப்புகளை விட்டார். அலைமோதினார். இன்றும் நீங்காத பதற்றச் சிக்கல்களுக்கு ஆளானார். அவரே ஒருவழியாக ஆங்கில இலக்கியம் படித்து ஒரு நிறுவனத்தில் வேலைபார்க்கிறார். என்னுடைய மிகமிக நுண்ணிய வாசகர்களில் ஒருவர்.'இண்ணைக்கும் அதுக்காக என் அப்பாவை என்னால மன்னிக்க முடியலை ஜே" என்று ஒருநாள் இளம் போதையில் சொன்னார்.

நான் அறிந்து ரவிக்குமார் எம்.எல்.ஏ மட்டுமே இந்தப் பள்ளிகளை தடைசெய்ய வேண்டும் என வெளிப்படையாகப் பேசியிருக்கிறார். சட்டச்சபையிலும் சொல்லியிருக்கிறார்.ஆனால் எந்த அரசும் இதன் மீது கையை வைக்கமுடியாது. காரணம் பெற்றோர்களே விரும்பிச் செய்யும் ஒரு காரியம் இது. 'முன்னேற்றத்துக்'கான பாதை. இதை தடைசெய்தால் தமிழ் சமூகமே கொதித்து எழும். குறிப்பாக

நுழைவுத்தேர்வுகள் ரத்து செய்யப்பட்டு எல்லாமே பிளஸ் டூ மதிப்பெண்ணை நம்பி இருக்கும் இன்றைய நிலையில்.

இதில் உள்ள மனித உரிமை மீறல் எவர் கண்களுக்கும் படுவதில்லை. ஒரு ஆயுள்தண்டனையை நாம் எப்படி நம் குழந்தைகளுக்கு அளிக்கலாம்? அதற்கான தகுதியும் உரிமையும் நமக்கு உண்டா என்ன? பெற்றோர் விரும்பினால் பிள்ளைகளை கொல்லவும் உரிமை உண்டா?

**வேதபாடசாலைகள்**

இந்த பத்தாம் வகுப்புத்தேர்வில் முதலிடங்களைப் பிடித்த குழந்தைகளின் பேட்டிகளை கூர்ந்து கவனித்தேன். 'சென்ற மேமாதத்துக்கு முன்னரே படிக்க ஆரம்பித்து விட்டேன், ஒருநாளில் எட்டு மணிநேரம் படிப்பேன், விடுமுறைநாட்களில் பன்னிரண்டு மணிநேரம்' என்று அவர்கள் மீண்டும் மீண்டும் சொல்கிறார்கள். கணிதம் ஆங்கிலம் அறிவியல் பாடங்களில் அவர்கள் பெற்ற மதிப்பெண் என்பது பெரும்பாலும் அஜிதன் பெற்ற மதிப்பெண்கள் அளவுக்கே. ஆனால் தேர்வுக்கு மூன்றுமாதம் முன்பு இவன் பொறுமையாக அமர்ந்து படித்து நான் கண்டதே இல்லை. ஏதாவது குளத்தின் அருகே நோட்புக், பைனாகுலருடன் பறவைகளைப் பார்க்க அமர்ந்திருப்பான். 'ஹாய் அப்பா!' என்று வெயிலில் சுண்டிய முகத்துடன் சிரிப்பான். இரவு பனிரண்டுமணிவரை ஏதேதோ புத்தகங்களை ஒரேசமயம் கலந்து போட்டு படிப்பான். அதன் பின் எழுந்து கொடூரமான கொலைக்குரலில் பாட்டுகள் பாடுவான். கிட்டத்தட்ட இவனளவுக்கே மதிப்பெண் பெற்ற சமீர் என்ற இன்னொரு பையன் கிரிக்கெட் பைத்தியம். தேர்வுநாளிலும் கிரிகெட் பார்த்துவிட்டுதான் படித்திருக்கிறான்.

அப்படியானால் இந்த முதலிட மாணவர்கள்[ அதிகமும் பெண்குழந்தைகள்] என்னதான் படித்தார்கள்? வருடக்கணக்காக நாள்தோறும் முழுநாளையும் செலவிட்டு? மீண்டும் மீண்டும் மீண்டும்.... முன்னர் வேதபாடசாலைகளில்தான் இப்படிப்பட்ட படிப்பு உள்ளது என்று படித்திருக்கிறேன். இ.எம்.எஸ் அவரது சுயசரிதையில் மிகநக்கலாக எழுதியிருக்கிறார். வேதங்களை உச்சரிப்பு மாறாமல், இடைவெளிகள் ஒலிகள் கூட மாறாமல், அப்படியே படிக்க வேண்டும். பொருள் தெரியாமல். பத்துப்பன்னிரண்டு வருடம் அப்படிப் படித்து முடித்தால் மூளைக்குள் சிறிய விஷயங்கள் கூடப் போய்ச் சேராது. சுத்தமான மக்கு ஆத்மாக்களாக ஆகிவிடுவார்கள். அதன் பின் வேத பண்டிதர்களின் 'களங்கமற்ற'

தன்மையை அனைவரும் ரசிப்பார்கள். ‘அம்மா வந்தாள்’ நாவலில் தி.ஜானகிராமனும் இந்த வேதக்கல்வியை பற்றி பேசியிருக்கிறார். இது கல்வியே அல்ல. மைனாக்களை பழக்குவது போன்ற ஒரு வித்தை. இதைத்தான் நம் பிள்ளைகளும் பயில்கின்றனவா?

**தரையில் நட்சத்திரங்கள்**

‘தாரே ஜமீன் பர்’ படத்தைப் பார்க்கும்படி பலர் எழுதியிருந்தார்கள். நண்பர் அதை முன்னரே கொடுத்திருந்தார். சைதன்யாவும் அருண்மொழியும் மட்டும்தான் பார்த்திருந்தார்கள். நான் பார்க்கவில்லை. படம் பார்க்கும் மனநிலையே இல்லை. அது தத்துவம் சார்ந்த வாசிப்பின் பிரச்சினை. அவ்வகை வாசிப்பு முடியவே முடியாது. ஒரு நூல் இன்னொன்றுக்கு இட்டுச் செல்லும். நான் கடைசியாகப் பார்த்த படம், ‘காளை’. திருவாரூர் பேருந்தில். தாரே ஜமீன் பர் படத்தில் ஆசிரியை மாணவனின் பரீட்சைத் தாள்களை பெற்றோர் முகத்தில் விட்டெறியும் காட்சி அப்படியே என் வாழ்க்கையில் நடந்திருப்பதாக அருண்மொழி சொன்னாள். ஆச்சரியமாக இருந்தது.

## (3) கல்வி,புராணம்

அன்பு ஜெயமோகன் அவர்களே!!

நூறு நாட்களுக்குள் ஏதோ ஓர் அடிப்படைத் தேவையை பூர்த்தி செய்துத் தர உறுதி பூண்டது போல அவசர அவசரமாய் "சமச்சீர் கல்வி" (அப்படியென்றால் என்ன?!) எனும் கல்வி முறையினை நாடெங்கும் பரப்ப எத்தனிக்கும் மனிதவள மேம்பாட்டுத் துறையின் நோக்கம் தான் என்ன? எதற்கிந்த அவசரம்?

அன்புள்ள கார்த்திகேசன் அவர்களுக்கு,

நம் சூழலில் கல்விச்சீர்திருத்தங்கள் மிக அவசியமாக தேவைப்படுகிறதென்றே எண்ணுகிறேன். ஆனால் அவை நடைமுறை யதார்த்தத்தில் இருந்து ஆரம்பிக்கப்படவேண்டும். அதற்குப்பதில் மேலிருந்து அவை திணிக்கப்படுகின்றன. இந்தியாவின் சாபக்கேடே இந்த மனநிலைதான். அறிவுஜீவி மையவாதம். அறிவுஜீவி என்பவன் ஆங்கிலம் பேசத்தெரிந்தவன் சில ஆங்கில நூல்களை வாசித்தவன், அவ்வளவுதான். அவனுக்கு இந்திய யதார்த்தத்தைப் பற்றி எளிய நடைமுறை அறிதல்கூட இருக்க வேண்டியதில்லை. ஆனால் இந்தியாவையே தன் கைகளில் போட்டு உருட்டிவிடமுடியும் என்ற அபாரமான தன்னம்பிக்கையுடன் இருப்பான்.

இவர்களில் நம் அதிகாரிகள், இதழாளார்கள்,பேராசிரியர்கள் அடக்கம். இவர்களில் பலரை நான் நேரில்சந்தித்திருக்கிறேன். வடிகட்டிய முட்டாள்கள் என்றே பலரைப்பற்றி என் மனம் கணக்கிட்டிருக்கிறது. ஒரே ஒரு பரீட்சை எழுதி வென்று இந்திய ஆட்சிப்பணியில் ஒருவன் அமர்ந்தால் இந்தியாவின் எந்தத்துறையிலும் அவனே துறை நிபுணர் என்பதுபோன்ற ஓர் அசட்டுத்தனம் வேறெந்த நாட்டிலாவது உண்டா என்று தெரியவில்லை

நமது கல்விமுறையில் வரவேண்டிய சீர்திருத்தம் என்பது மாணவர்களின் சுயமான வாசிப்பை வளர்க்ககூடியதாக இருக்க வேண்டும். நம் மாணவ்ர்களுக்கு ஒரு நூலை தாங்களே வாசிக்கவும் அதை புரிந்துகொண்டு ஒரு சுருக்கமான கருத்தை தெரிவிக்கவும் அடிப்படைப் பயிற்சியே இல்லை. நம் சூழலில் ஒருவன் உயர்கல்விகற்றிருந்தால்கூட ஒரு நூலை அவனே வாசிக்க முடியாது. ஒரே ஒரு நூலைக்கூட வாசிக்காமல் ஒருவன் இங்கே முனைவர் பட்டம் பெற்றுவிடமுடியும்

இரண்டாவதாக நம் கல்வித்துறை ஊழலில் சீரழிது கிடக்கிறது. மதிப்புக்குரிய துணைவேந்தர்கள் என மிகச்சிலர்கூட இன்று இல்லை. பணம்சுருட்டும் வணிகர்கள் நம் கல்விநிலையங்களை ஆள்கிறார்கள். ஆகவே கல்வித்துறைக்குள் தகுதிக்கு இடமில்லை என்ற நிலை நிலவுகிறது . ஒன்று சொல்கிறேன், இன்று சிறந்த கல்லூரி ஆசிரியர்களாக விளங்க முடியும் என நான் எண்ணும் ஒரு பதினைந்து இளம் அறிஞர்கள் உண்டு. அவர்கள் முழுமையான கல்வித்தகுதி கொண்டவர்கள். ஆனால் அவர்கள் எவருக்குமே ஆசிரியர் வேலை கிடைக்கவில்லை. காரணம் லட்சக்கணக்கில் லஞ்சம் கொடுக்க முடிவதில்லை. லஞ்சம் கொடுக்கும் வடிகட்டிய மடையர்களால் நிறைந்துள்ளன நம் கல்லூரிகள்

பள்ளிகள் தொழிற்சங்க அரசியலாலும் ஊழலாலும் நிறைந்துள்ளன. ஆத்மார்த்தமாகக் கற்பிக்கும் ஆசிரியர்கள் பத்துசதவீதம்தான். ஆகவே அரசுப்பள்ளிகளுக்கு கொஞ்சம் பணவசதி உடையவர்கள்கூட குழந்தைகளை அனுப்புவதில்லை. இந்தச் சூழலை சீர்செய்ய எந்த முயற்சியும் எடுப்பதில்லை நம் அரசு. பத்து ஆசிரியர்கள் தேவையான சூழலில் எங்குமே ஏழுபேர்தான் இருக்கிறார்கள் . என் மகன் படித்த பள்ளியில் பாதி ஆசிரியர்கள் பெற்றோர் ஆசிரியர்கழகத்தில் சொற்கக்கூலிக்கு நியமிக்கப்பட்டவர்கள். சென்ற வருடம் பெற்றோர் ஆசிரியர் சங்கம் நன்கொடை வாங்குவது தடைசெய்யப்பட்டது. இப்போது அரசுப்பள்ளிகளில் ஆசிரியர்கள் பாதிபேர்தான்

இந்தநிலையைச் சீர்செய்ய எந்த முயற்சியும் எடுக்காத அரசு கொண்டுவரும் சீர்திருத்தங்கள் அனைத்துமே மோசடிகள் என்றே நான் நினைக்கிறேன். 'கற்றல்கல்வி' என்ற மோசடி. எண்பது குழந்தைகளுக்கு ஒரு ஆசிரியர் வந்து என்ன தனிப்பட்ட ஆற்றலை வளர்க்கும் கல்வியை அளித்துவிட முடியும்? இதன் விளைவாக அரசுக்கல்வி என்பதே ஒரு மோசடியாக ஆன நிலையில் தனியார் அளிக்கும் உச்சவேகப் பயிர்ச்சி [அதை கல்வி என்றே சொல்ல முடியாது] ஒன்றே கல்வியாக உள்ளது. அதையும் சீரழிக்க, அதன்மேலும் தங்கள் ஊழலின் பிடியை இறுக்க மட்டுமே சமச்சீர் கல்வி கொண்டுவரப்படுகிறது. கல்வித்துறையின் ஊழல்பெருச்சாளிகளான அதிகாரிகள் தனியார் கல்விநிலையங்களில் ஏறி மேய்வதற்கான ஒரு வழி , அவ்வளவுதான். தனியார் கல்வித்துறையில் புழங்கும் கோடிக்கணக்கான ரூபாய் அவர்களை கவர்கிறது

இந்தச் சீர்திருத்தங்கள் எவையுமே நாமே உருவாக்குவதில்லை. ஆசிய வளர்ச்சி வங்கி போன்ற நிதியுதவி அமைப்புகளால் நம் மீது திணிக்கப்படுகின்றன. கேரளத்தில் ஏழாதாண்டுகளுக்கு முன்னர் அறிமுகம்செய்யப்பட்ட செயல்வழிக்கல்வித்திட்டம் ஆசிய வளார்ச்சிவங்கியால் கட்டாயப்படுத்தப்பட்டு திணிக்கப்பட்டது. அது பெரும் தோல்வி அடைந்தது. காரணம் நிதிவசதி இல்லாமல் போதிய ஆசிரியர் இல்லாமல் ஆசிரியர்களை கட்டுப்படுத்தும் நிர்வாகம் இல்லாமல் செய்யப்படும் அந்த முயற்சிகள் அபத்தமானவை என்பதே. ஆனால் அதன் பின் அதே ஆசிய வங்கியால் அதே திட்டம் தமிழகத்திற்கு கொண்டுவரப்பட்டிருக்கிறது. தமிழக அரசுக்கல்வியை சீரழித்துக்கொண்டிருக்கிறது அது

அக்கறை உள்ளவர்கள் இதைப்பற்றி ஆழமாக எழுதியிருக்கிறார்கள். தமிழினி மாத இதழில் எட்வின் பிரகாஷ் எழுதிய கட்டுரையை நினைவுகூர்கிறேன். தங்கள் குழந்தைகளின் கல்வியைக் காக்க தமிழக பெற்றோர் ஒன்று திரண்டு முயலாதவரை இதற்கு விடிவில்லை.

ஜெ

அன்பு ஜெ,

சமநிலைப் படுத்துதல் என்கிற பேரில் தரமான கல்வியை எல்லார்க்கும் அளிக்க வழி செய்யாமல் ஒரு mediocre கல்வியை அனைவருக்கும் தினித்தல் என்பது நம் சமூகத்தை இன்னும் பின்னிழுத்துச் செல்லும் என்றே நான் கருதுகிறேன்.

மேலும் இக்கல்வித் திட்டத்திற்கென பள்ளிக் கல்வித் துறையால் வெளியிடப்பட்டுள்ள பொதுப் பாடத்திட்ட வரைவு வேடிக்கையாகவும் வேதனை தருவதாகவும் இருக்கிறது (தமிழ் பாடத்திற்கானதை இணைத்துள்ளேன்).

“கம்பன்” என்கிற சொல்லை கேட்காமலே ஒரு மாணவன் 10ஆம் வகுப்பு முடித்து வெளியேறலாம் (முனைவர் பட்டம் கூட பெற்று விடலாம் போல).

******

அன்புள்ள காத்திகேசன்

இது உலகம் முழுக்க நடந்துகொண்டிருக்கிறது. பயனுள்ள கல்வி என்றபேரில் இலக்கியங்கள் வரலாறு போன்றவற்றை கற்பிப்பது தவிர்க்கப்படுகிறது. வரலாற்றுணர்வோ இலக்கிய அறிவோ பாரம்பரிய பிரக்ஞையோ இல்லாத வேலைபார்க்கும் இயந்திரங்களை உருவாக்கும் கல்வி உருவாக்கப்படுகிறது. ஆகவே அன்றாடத்தேவைக்கான மொழி மட்டுமே போதும் என்ற மனநிலை முன்வைக்கப்படுகிறது. அமெரிக்க கல்விநிலையங்களில் கூட அறிவியல் அல்லாத கல்வி பூரணமாக ஒழியும் நிலை வந்துகொண்டிருக்கிறது என்றார் ஜார்ஜ் எல் ஹார்ட்

ஜெ

அன்புள்ள ஜெயமோகன் சார்,

வெகு நாட்களாக உங்களிடம் கேட்க வேண்டும் என்று நினைத்துக்கொண்டிருந்தேன். கோயில்களின் ஸ்தல புராணங்கள் குறித்து தங்கள் கருத்து என்ன? ஏதேனும் எழுதியிருக்கிறீர்களா? எதுவும் நம்பும்படியாக இல்லை. குறியீடுகளாகவும் தோன்றவில்லை. யார் இதை உருவாக்கி இருப்பார்கள்?

அன்புடன்

இளம்பரிதி

அன்புள்ள் இளம்பரிதி

நம்முடைய கோயில்களில் பெரும்பாலானவை சிறிய கிராமிய கோயில்களாக இருந்து மன்னர்களால் விரிவாக்கிக் கட்டப்பட்டவை. பிற கோயில்கள் மன்னர்களால் அமைக்கப்பட்டவை. கோயில்கள் இன்றைய நிலையில் உருவானது பக்தி இயக்கத்தின்போதுதான். அப்போதுதான் புராணங்களும் உருவாயின. சைவ வைண சாக்த பெருமதங்களின் மைய ஓட்டத்துடன் பலநூறு தனிவழிபாட்டுமுறைகளை இணைப்பதற்காகவே புராணங்கள் உருவாயின. அதே மையச் சரடுடன் கோயில்களை இணைப்பதற்காகவே ஸ்தல புராணங்கள் உருவாயின

புராணங்கள் பலவும் தன்னிச்சையாக ஆங்காங்கே உள்ள மக்களின் கற்பனைக்கு ஏற்ப உருவானவை. நம் புராணங்களில் தொண்ணூறு விழுக்காடு அர்த்தமற்ற அசட்டுக்கற்பனைகள் மட்டுமே. ஸ்தலபுராணங்களில் அபூர்வமாகவே தத்துவ ஆழமும் கவித்துவமும் காணக்கிடைக்கிறது. பல ஸ்தலபுராணங்கள் கல்வியறிவற்ற பூசகர்களால் உருவாக்கப்பட்டவை. அவற்றுக்கான ஒரு தேவை இருந்திருக்கிறது என்று மட்டுமே அதற்கு பொருள்

நம்முடைய ஸ்தலபுராணங்களில் கணிசமானவை 18 ஆம் நூற்றாண்டில் உருவானவை. தத்துவஞானம் முக்கியத்துவமிழந்து இந்துமதம் தேங்கிநின்ற காலகட்டத்தில் . பிறந்தவை. கிராமவாசிகள் கவிராயர்களுக்கு ஊதியம் கொடுத்து ஸ்தலபுராணங்களை எழுதச்செய்தார்கள். உ.வே.சாவின் ஆசிரியர் மீனாட்சி சுந்தரம்பிள்ளையின் தொழிலே அதுதான். அந்தக் கவிராயரின் தகுதியைப்பொறுத்து ஸ்தலபுராணங்கள் மேலாகவோ கீழாகவோ இருக்கும்

உதாரணமாக குமரிமாவட்ட ஸ்தலபுராணங்களில் கன்யாகுமரி அம்மனின் ஸ்தலபுராணம் கவித்துவமானது. திருவட்டார் ஆலயத்தின் ஸ்தலபுரானம் கற்பனையற்ற எளிய நாட்டார் மனதால் உருவாக்கப்பட்டது. சிவாலய ஓட்டத்திற்கான புராணம் கேவலமான அசட்டுக்கற்பனை.

இவை ஒரு வரலாற்றுத்தேவைக்காக உருவானவை. தரம் பிரித்தறிவது நம் கடமை

ஜெ

அன்புள்ள ஜெயமோகன்,

உங்கள் நலம் அறிய ஆவல். சில நாட்களுக்கு முன்பு, கிட்டத்தட்ட ஒரு மாதம் இருக்கும் என்று நினைக்கிறேன், நீங்கள் ஒரு வலைப்பதிவிலேயோ அல்லது வேறொருவருக்கு பதில் அளிக்கையிலேயோ (அந்தப் பதிவை சரியாக சுட்ட முடியவில்லை), தற்போதுள்ள உபன்யாசகர்கள் ஞானத்தைப் பற்றி எடுத்துரைக்காமல் வெறும் பக்தியைப் பேசுகிறார்கள் என்று கூறி உள்ளீர்கள். அதற்கு நான் ஒப்புக் கொள்வேன். அதிலும் குறிப்பாக வைஷ்ணவ உபன்யாசகர்கள் பக்தியையே பிரதானமாக எடுத்துரைக்கிறார்கள். வைஷ்ணவம் சரணாகதத்தை முன்வைப்பதால்

அப்படி அமைந்து விட்டது என்று நினைக்கிறேன். இன்னொரு காரணம் விசிஷ்டாட்வைதத்தில், பக்தியோடு கூடிய ஞானத்திற்கு கொடுக்கப்பட்டிருக்கிற முக்கியத்துவம்.

மேலும், பழங்காலத்தைப் போல் இன்றைக்கு அத்வைத – விஷிஷ்டாத்வைத வாதப் போர்கள் இல்லாமையால், வைஷ்ணவ உபன்யாசகர்கள் விசிஷ்டாத்வைதத்தை ஒட்டிய ஞான மார்க்கத்தை பின்னுக்கு தள்ளி விட்டார்கள் என்று நினைக்கிறேன்.

காலக்ஷேபங்களில் இன்னமும் கற்றுக் கொடுக்கப்படுகிறது. ஆனால், அவை பொதுவில் நடப்பவை அல்ல. அவரவர் ஆசார்யன் வம்சத்தில் உள்ள காலாக்ஷேப அதிகாரம் உள்ளவர்களால் கற்றுக் கொடுக்கப்படுகிறது. பொதுவில் நடத்தப்படும் சொற்பொழிவுகளில் ஞான மார்க்கத்தை பேச முடியுமா என்பது ஒரு சந்தேகம். அப்படிப் பேசினால் கேட்க யாரவது இருப்பார்களா? தெரியவில்லை.

ஆனால், ஒரு விதத்தில் இந்த முறை ஸ்ரீவைஷ்ணவ பிராமணர் அல்லாதவர்களை தவிர்த்து விடுகிறதோ என்று ஒரு அச்சம் இருக்கிறது. இப்போதைக்கு ஸ்ரீவைஷ்ணவத்தை ஒட்டிய ஞான மார்கத்தை பிராமணர் அல்லாதவர் கற்றுக் கொள்ள சென்னை பல்கலைக்கழகத்தில் உள்ள வைஷ்ணவத் துறையில் முதுகலைப் பட்டப் படிப்பு படித்தால் உண்டு. வேறு வழி இருக்கிறதா என்று தெரியவில்லை.

நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?

– சீனு.

அன்புள்ள சீனு அவர்களுக்கு

ஹரிகதை, உபன்னியாசம் போன்றவை முழுக்க முழுக்க பக்தி இயக்கத்தால் பக்தியைப் பரப்புவதற்காகவே கண்டுபிடிக்கப்பட்ட கலைவடிவங்கள். பக்தி இயக்கம் பெருவாரியான கல்வியில்லா மக்களை உள்ளே கொண்டுவர இசையையும் கலையையும் பயன்படுத்தியபோது உருவானவை அவை. ஆகவே அவற்றில் இருந்து பக்தியை விலக்கவேமுடியாது.

ஆனால் பக்தி என்பதே இங்கே தத்துவத்துடன், மெய்ஞானத்துடன் இணைந்தே இருந்தது. நம் மாபெரும் பக்திநூல்கள் எல்லாமே மாபெரும் ஞானநூல்களுகூடத்தான். லௌகீகமான பக்தி என்பதை இந்து மரபில் மிகக்குறைவாகவே காணாமுடியும். எனக்கு அதைக்கொடு இதைக்கொடு என கடவுளிடம் பேரம்பேசும் பக்தி இந்து மதத்தின் கட்டமைப்புக்குள் அனேகமாகக் கிடையாது.

ஆனால் இன்று வெறும் லௌகீக பக்தி மட்டுமே எல்லா தரப்பில் இருந்தும் முன்வைக்கப்படுகிறது. எளிய ஸ்தலபுராணங்கள், தோஷ நிவர்த்திகள், வழிபாட்டுச்சடங்குகள், கதைகள் — அவ்வளவுதான். இது எது இந்துமதமோ அதை மெல்லமெல்ல இல்லாமலாக்கிக் கொண்டிருக்கிறது. இதையே நான் சொல்கிறேன்

ஞானம் குறித்துப் பேசினால் கேட்பார்களா? ஞானத்துடன் பேசினால் கேட்பார்கள். முக்கூர் ஶ்ரீனிவாஸாச்சாரியார் பேசியபோது கேட்கவில்லையா? வாரியார் பேசியபோது கேட்கவில்லையா? பேச ஆள் இல்லை

அந்தக்குறையை உணர்ந்தால் போதும் அது உருவாகும். வெறும் லௌகீக பக்தியைக் கக்கிக்கொண்டிருப்பவர்களை போற்றிப்புகழாமல், அவர்களே கடைசிப்புள்ளி என எண்ணாமல் இருந்தால் போது. தேவை எதையும் உருவாக்கி அளிக்கும்

## (4) ஆய்வு- ஒரு கடிதமும் விளக்கமும்

Greetings,

I've recently heard of your works through a friend but can't read Tamil myself so..well,that is a temporary barrier.But the way this friend spoke of you,I felt like writing to you.

I've just finished my bachelors in Applied Psychology and am realizing I'm very keen about studying.I want to do a masters in Anthropology.It's not that I'm interested in it.It's more that I have to know about this culture I live in.And that's the thing.I'm fascinated by the Universe and her potential.I really want to explore the deeper knowledge of human evolution.

I really hope you do reply.

Have a beautiful year ahead.

Regards,
Supriya Talupuru.

அன்புள்ள சுப்ரியா

உங்கள் கடிதம் கண்டேன்

தமிழகச்சூழலில் இன்று நிகழ்ந்துவரும் முக்கியமான ஒரு வீழ்ச்சி என்பது தொழில்நுட்பம் அல்லாத துறைகளில் படிப்புக்கும் ஆராய்ச்சிக்கும் தகுதியானவர்கள் வருவதில்லை என்பதே. ஒரு மானுடவியல் ஆய்வாளர் பத்தாண்டுகள் ஆராய்ந்து ஒரு பதவிக்கு வந்து சம்பாதிப்பதை விட இருமடங்கை சாதரண பட்டப்படிப்பை கொண்டு தகவல் தொழில்நுட்ப துறையில் உள்ளவர்கள் சம்பாதிக்கமுடியும். ஊதியத்தை வைத்தே மனிதர்களை அளவிடும் நடுத்தரச் சூழலில் பிந்தையவருக்கு மதிப்பு அதிகம். அதைவிட மோசம் அவரே தன்னைப்பற்றி அப்படி நினைத்தும் கொள்வார்.

ஆகவே அறிவியலிலும் சமூகவியல்துறைகளிலும் இரண்டம்நிலை மூன்றாம் நிலை மாணவர்களே வருகிறார்கள். அவர்களால் எதுவும் உருப்படியாகச்

செய்யமுடிவதிலை. கோவை பாரதியார் பல்கலை துணைவேந்தர் சென்ற ஆண்டு அறிவியல் முனைவர் ஆய்வுகளின் தரம் எந்த அளவுக்கு பரிதாபமாக உள்ளது என்று சொல்லியிருந்தார். வரலாறு, சமூகவியல், இலக்கியம் துறைகளின் தரவீழ்ச்சி பற்றி நானே நேரடியாக அறிவேன். நல்ல ஆய்வுகள் எனச் சென்ற முப்பதாண்டுகளில் மிகச்சிலவற்றையே சொல்ல முடியும். வரலாற்றாய்வே இல்லாத நிலை.

ஆகவே மானுடவியலில் ஆர்வத்துடன் நீங்கள் செயல்பட விரும்புவது மிகவும் முக்கியமானது. ஆனால் இன்றைய சூழலில், திறமையற்றவர்களின் நடுவே பணியாற்ற நேர்வதென்பது மிகுந்த சோர்வளிக்கக் கூடியது. அவர்களின் பாதுகாப்பின்மையுணர்வும் தாழ்வுணர்வும் உருவாக்கும் சிக்கல்களைச்சந்திக்க நேரும். அதைத் துணிவுடன் எதிர்கொண்டாக வேண்டும். உங்கள் திறனிலும் உறுதியிலும் நம்பிக்கை இருந்தால் அது எளிதே. சாதனையாளர்கள் அனைவருக்கும் அதுவே பாதை

மானுடவியல் போன்ற துறைகள் இன்று முழுக்கமுழுக்க அரசியல்மயமாக்கப்பட்டுள்ளன. அவற்றை அரசியல் நோக்குடன் செய்பவர்களே அதிகம். ஆகவே அந்தப் பொது அலைக்கு எதிராக முறைமை என்ற புறவயமான தர்க்கத்துக்குள் நின்றபடி செய்யப்படும் ஆய்வுகளுக்கே உண்மையான மதிப்பு. அத்தகைய ஆய்வுகள் மட்டுமே காலத்தின் போக்கில் நீடித்து நிற்க முடியும். அந்த திடம் உங்களுக்குள் உருவாகட்டும்

கடைசியாக, மானுடவியல் சமூகவியல் போன்ற துறைகளில் ஒரு மேலாதிக்கம் உள்ளது. அதை ஐரோப்பிய மேலாதிக்கம் என்றே சொல்லலாம். இங்குள்ள வாழ்க்கை இங்குள்ள வரலாறு குறித்து அவர்கள் ஒரு முன்வரைவு வைத்திருக்கிறார்கள். அதை ஒட்டி ஒருவர் ஆய்வுசெய்து அதற்கேற்ற முடிவுகளை அளித்தால் மட்டுமே அவர்களால் அவர் பொருட்படுத்தப்படுவார். அமெரிக்காவிலோ ஐரோப்பாவிலோ சமூகவியல் சார்ந்த துறைகளில் ஆய்வு செய்பவர்கள்,செய்து மீண்டவர்கள் பெரும்பாலும் அனைவருமே இந்த கருத்தியல் மேலாதிக்கத்துக்கு தங்கள் மூளையை விற்ற அடிமைகள்தான்

அதாவது இந்தியாவின் பண்பாட்டுக்கூறுகளை ஒன்றுடன் ஒன்று முரண்படக்கூடிய, ஒன்றை ஒன்று அழிக்கத்துடிக்கக்கூடியவை என்றே ஐரோப்பியமேலாதிக்க நோக்கு வரையறை செய்கிறது. அதற்கு மாறாக, அப்பண்பாட்டுக்கூறுகளை ஒன்றுடன் ஒன்று இணைந்து செயல்படக்கூடிய, ஒன்றை ஒன்று வளர்க்கக்கூடியவையாக உருவகித்து ஆராய்ச்சி செய்தால்

அதை ஐரோப்பிய அறிவுலகம் ஏற்பதில்லை. அதை அடிப்படைவாதம் என்பாகள். பழமைவாதம் என்பார்கள். அல்லது வேறேதாவது ஒரு முத்திரையை குத்துவார்கள்.

ஐரோப்பிய -அமெரிக்க ஆய்வுச்சூழலில் உள்ள இறுக்கமான மேட்டிமைவாதம் பற்றி இப்போது பலரும் பேச ஆரம்பித்திருக்கிறார்கள். நான் பத்து வருடங்களாக அதைச் சுட்டிக்காட்டி வருகிறேன். இரண்டாவது தரப்பு பிழை என்றே இருக்கட்டும். ஆனால் ஒரு கருத்துப்பரிமாற்றத்தில் அதுவும் ஒரு தரப்பு தானே? அது ஏன் முரட்டுத்தனமாக அடக்கப்படுகிறது?

மேலைநாட்டுப் பல்கலை ஆய்வுலகம் காட்டும் ஜனநாயக முகமும் , புறவயமான அறிவியக்கம் மீதான பற்றும் போலியானது. கிறித்தவ மதவாதத்தாலும் வணிகஏகாதிபத்திய சக்திகளாலும் உள்நின்று செலுத்தப்படும் கருத்தியல் கட்டுமானங்கள் அப்பல்கலைகள். நம்முடைய இந்தியப் பல்கலைகள் அந்தப் பல்கலைகளில் கற்றுவந்த அடிமைகளாலும் அப்பல்கலைகள் உருவாக்கும் நூல்களாலும் நூற்றுக்கணக்கான பண உதவி முறைகளாலும் முழுமையாகக் கட்டுப்படுத்தப்படுகின்றன.

ஆகவே நம்முடைய அறிவுச்சூழல் இன்று முழுமையாகவே அடிமைப்பட்டுள்ளது. பல்கலைகளுக்கு வெளியே தன் சொந்த முயற்சியால் செய்யப்படும் ஆய்வுகள் மட்டுமே நேர்மையானவையாக உள்ளன.

ஆய்வு என்பது நம்மையும் நம் பண்பாட்டையும் கண்டுகொள்ளும் பயணம் என நீங்கள் நம்பினால் அதை நேர்மையாக எதிர்கொண்டாக வேண்டும். அதன் போராட்டங்களை நிகழ்த்தியாக வேண்டும். உடனடி லாபங்கள் குறையலாம். ஆனால் சுதந்திரமும் நேர்மையும் அதற்கான பலன்களை அளித்தாகவேண்டும். அத்தகைய ஓர் ஆய்வுக்குரலாக நீங்கள் ஆக என் வாழ்த்துக்கள்

# (5) ஒரு தற்கொலை

*என் சாவு, அரசு பள்ளியில் சிறிய மாற்றத்தையாவது ஏற்படுத்த வேண்டும், இல்லையானால் என்னை மாதிரி எத்தனை உயிர்களை ஆசிரியர்கள் எடுக்கப்போகிறார்களோ தெரியவில்லை...*

*திறமையான ஆசிரியர்கள் பலர் வேலையில்லாமல் காத்திருக்கிறார்கள், அவர்களுக்கு வேலை கொடுக்க வேண்டும், மேல்நிலை வகுப்புகளுக்கு, நல்ல திறமையான ஆசிரியர்களை போடவேண்டும் என முதலமைச்சர் அவர்களைக் கேட்டுக்கொள்கிறேன்.*

பனைமரத்துப்பட்டி அரசுப்பள்ளியில் படித்த சீனிவாசன் என்ற மாணவன் தற்கொலை செய்துகொள்ளும் முன்னர் எழுதிவைத்துப்போன கடிதத்தில் உள்ள வரிகள் இவை. என்னைத் தனிப்பட்ட முறையில் மிகவும் அசைத்தது இது

ஓராண்டு முன் என் மகன் அரசுப்பள்ளியில் பிளஸ் டூ படிக்கும்போது சொன்னது நினைவுக்கு வருகிறது. 'ஒரே ஒரு வாத்தியாரைத்தவிர மத்தவங்க சுத்தமா கிளாஸே நடத்துறதில்லை அப்பா. பேசாம வாசிச்சு விட்டுட்டுப் போறாங்க. டியூஷன் வச்சுப் படியுங்கலேன்னு சொல்றாங்க. எங்க கிளாஸிலே பத்துப்பதினைஞ்சு பயக ரொம்ப ஏழைங்க. சனி ஞாயிறெல்லாம் கூலி வேலைக்குப் போவாங்க. மாடும் வாழையும் எல்லாம் வச்சிருக்காங்க. சொந்தமா சம்பாரிச்சுப் படிக்கிறவங்க. அவங்கள்லாம் பெரிய ஸ்கூலுன்னு நினைச்சு சேர்ந்தவங்க. எங்கிட்ட பேசின ஒரு பையன் அழுதான். இப்பிடி சொல்லிக்குடுத்தா நான் எப்டி ஜெயிக்கிறது, பேசாம வெஷத்தை சாப்பிடலாம்னு தோணுதுன்னு சொல்றான்.' சொல்லும்போதே அவனுக்குக் கண்ணீர் முட்டியது

அது இப்போது நடந்திருக்கிறது. யார் குற்றவாளிகள்? முதல் குற்றவாளி,தகுதிக்கு வேலை கொடுக்காமல் பணம் வாங்கிக்கொண்டு வேலைகொடுக்கும் கல்வித்துறை நிர்வாகமும்,அமைச்சகமும்தான். ஆனால் மிகப்பெரும்பாலான அரசுப்பள்ளி ஆசிரியர்கள் எந்தவிதமான பொறுப்பும் மனசாட்சியும் இல்லாத மானுடமிருகங்கள் என்பதே உண்மை.

காசுள்ளவர்கள் வேறு பள்ளிகளுக்குச் செல்கிறார்கள். இல்லாதவர்களே தங்கள் பிள்ளைகளை அரசுப்பள்ளிகளுக்கு அனுப்புகிறார்கள். [நான் என் பையனுக்குப் பள்ளிக்கல்விமுறையே பெரிதாக ஒத்துவராத காரணத்தால், அரசுப்பள்ளிகளில் பாடமே நடத்த மாட்டார்கள் என்ற காரணத்தாலேயே , அங்கே அனுப்பினேன். அவனுடைய இயல்பு,தானாகவே படிப்பது]அந்தத் தட்டிக்கேட்க முடியாத ஏழைகளை மனசாட்சியில்லாமல் வஞ்சகம்செய்து வாழ்கிறார்கள்.

வகுப்பு கூடுமான வரை வராமலிருக்க, வந்தாலும் எந்தப் பாடமும் நடத்தாமலிருக்க, முயல்பவர்கள் இந்தப் பொறுக்கிகள். அதை நியாயப்படுத்தும் இடதுசாரி தொழிற்சங்க அரசியலுக்குக் கப்பம் கட்டிவிட்டுத் தங்கள் பக்கவாட்டு வியாபாரங்களில் ஈடுபடுபவர்கள். இவர்களில் மிகப்பெரும்பாலானவர்கள் இந்த அடித்தள மக்களிடமிருந்தே வந்தவர்கள். சென்ற தலைமுறையின் ஆசிரியர்களுக்கு ஓரளவுக்கு இருந்த மனசாட்சியாலும் அர்ப்பணிப்பாலும் கல்வி கற்க முடிந்தவர்கள். அந்த அடிப்படை எண்ணமே இவர்களிடம் இருப்பதில்லை.

இவர்களுக்கு ஒரு மறைமுக அதிகாரம் உண்டு. தேர்தல்களில் பெரும்பாலும் வாக்காளமைய பொறுப்பாளர்கள் இவர்கள். தேர்தல்களில் இவர்களால் மோசடிகளில் ஈடுபடமுடியும். இதை பயந்தே பெரும்பாலான அரசுகள் இவர்கள் மேல் கை வைப்பதில்லை. கை வைக்கத்துணிந்தவர் ஜெயலலிதா. அதனால்தான் அவர் அம்முறை ஆட்சி இழந்தார் என்று சொல்லிக்கொள்கிறார்கள்.

சற்றுமுன் காலைநடை சென்றபோது ஓர் ஆசிரிய அற்பனிடம் பேசிவிட்டு வந்தேன். ‘ஏலே, துணிக்கும் சாராயத்துக்கும் காசு குடுக்குதேல்ல? காசுகுடுத்துப் படிலே..ஏன் கெவர்மென்டு பள்ளிக்கு வாறே? ’ என இறந்த மாணவனை வசைபாடினார் ‘வாத்தியரயா மாட்டிவிடுதே? அரெஸ்ட் பண்ணினானுகளாம். அரெஸ்ட் பண்ணி என்ன செய்வே? ஒரு மண்ணும் செய்யமாட்டே. நாட்டிலே இருக்க பெரிய யூனியன் எங்களுக்காக்கும். ஜெயலலிதாவுக்கு அதுக்க ருசி தெரியும்’ என்றான், அவர் ஒரு செந்தோழர்.

இந்தப் புல்லர்களை நம்பித்தான் இங்கே 'சமச்சீர்கல்வி' என்றெல்லாம் பெரிய பேச்சுக்கள் பேசப்படுகின்றன. இன்று நம் கல்விமுறையின் மிகப்பெரிய பிரச்சினையே இந்த மாஃபியாதான். இவர்களை நெறிப்படுத்த ஓர் அமைப்பு இங்கே இல்லை. அதைச்செய்ய மனம் இல்லை. கண்துடைப்புக்காக சமச்சீர் கல்வி என்கிறார்கள். இன்று சமச்சீர் கல்விக்காகப் பேசுபவர்களில் பெரும்பாலானவர்கள் இந்த ஆசிரியப் புல்லுருவிகள்தான்.

தனியார் பள்ளிகளில் இதே சம்பளத்தில் பாதியைப்பெற்றுக்கொண்டு இரட்டிப்பு நேரம் கற்பிக்கிறார்கள். அங்கே சென்று புகார்செய்ய ஓர் இடம் இருக்கிறது. பிடிக்காவிட்டால் மாற்றிக்கொள்ள முடிகிறது. விளைவைக் காட்டிப் போட்டியில் நின்றாக வேண்டிய வணிகக்கட்டாயமாவது அவர்களுக்கு உள்ளது. சமச்சீர் கல்வி என்ற பேரில் அதற்கும் வேட்டு வைக்க நினைக்கிறார்கள்.

இந்தத் தற்கொலை ஒரு சுவர் எழுத்து. இனிமேலாவது கட்சி அரசியலுக்கு அப்பாற்பட்டு இந்த யதார்த்ததை நாம் பார்க்க வேண்டும்

# (6) ஓர் ஆசிரியரின் கடிதம்

அன்புள்ள திரு ஜெயமோகன் அவர்களுக்கு,

நான் தங்களின் தீவிர வெறிநிலை கொண்ட வாசகன். அவ்வாறு கூறிக்கொள்வதில் பெருமையும் கொண்டவன். தங்களின் கட்டுரைகளை இணையத்தில் ஒன்றுவிடாமல் படித்துவருபவன். இந்நிலையில் தங்களின் 'ஒரு தற்கொலை' என்ற தலைப்பில் ஜுன் 28இல் வெளியிடப்பட்ட கட்டுரையினைக் கண்டு பெரிதும் அதிர்ச்சி அடைந்தேன். பிறரைக் குறை கூறியபடி டீக்கடை பெஞ்சுகளில் செய்தித்தாள் வாசிப்பவன் ஒரு கருத்தினைக் கூறினால் அது எப்படி இருக்குமோ அவ்வாறே உங்கள் கட்டுரையும் இருந்தது. நீங்கள் அடிக்கடி கூறுவதுபோல் தங்களின் நேரடி அனுபவத்தினைத் தவிரப் புனைவாக ஒரு கருத்தினை வெளியிடமாட்டீர்கள் என்ற கருத்தினை ஐயம்கொள்ள வைத்துவிட்டது.

தாங்கள் குறிப்பிட்ட பனைமரத்துப்பட்டியில் சராசரி தேர்ச்சி விகிதம் பற்றித் தங்களுக்குத் தெரியுமா? அரசுப்பள்ளிகள் சரிவினைச் சந்தித்துவரும் காலத்தில் அப்படி ஒரு நல்ல சதவிகிதத்தினை அளிக்கப் பள்ளியின் ஆசிரியர்கள் வகுப்பறை நேரத்தினைத் தவிரவும் பாடுபட்டால் ஒழிய அப்படி ஒரு தேர்ச்சி சதவிகிதத்தினை நிகழ்த்திக் காட்ட இயலாது. இந்தச் சூழலில் படிப்பில் அக்கறையற்றும் , பிற மாணவர்களைத்தூண்டிவிட்டும் கெடுக்கும் மாணவர்களை எந்த வகையில் கையாளமுடியும். திட்டுவதைத் தவிர வேறு வழியில்லை. ஆனால் அது அவர்களின் முன்னேற்றத்திற்குத்தான் என்பதை அந்த மாணவனும் சரி, பெற்றோரும் சரி, தங்களைப் போன்றோரும் சரி ,துரதிருஷ்டவசமாகப் புரிந்துகொள்ள இயலவில்லை என்பதே உண்மை.

உங்கள் கட்டுரையில் உள்ளது போல் “.....வகுப்பு கூடுமான வரை வராமலிருக்க, வந்தாலும் எந்தப் பாடமும் நடத்தாமலிருக்க, முயல்பவர்கள் இந்தப் பொறுக்கிகள். அதை நியாயப்படுத்தும் இடதுசாரி தொழிற்சங்க அரசியலுக்குக் கப்பம் கட்டிவிட்டுத் தங்கள் பக்கவாட்டு வியாபாரங்களில் ஈடுபடுபவர்கள்.....” என்பதைப் படிக்கையில் உங்கள் அறியாமையே வெளிப்படுகிறது.

காரணம் இடது,வலது, மேல், கீழ் சாரிகளெல்லாம் தங்களின் கன்னியாகுமரி மாவட்டத்தில் வேண்டுமானால் கோலோச்சிக் கொண்டு இருக்கலாம். ஆனால் தமிழகத்தின் எஞ்சிய பகுதிகளில் அவர்களின் நடவடிக்கை என்ன என்பது தங்களுக்கே தெரியும். இதில் எங்கிருந்து யார் யாருக்குக் கப்பம் கட்டுகிறார்கள் என்பது தெரியவில்லை. ஆசிரிய குண்டர்கள் தொழிற்சங்க ரவுடிகளிடம் மாமூல் தருவது போன்ற காட்சிகள் நடிகர் டாக்டர் இளையதளபதி வருங்கால முதல்வர் விஜய் அவர்களின் டப்பிங் படத்தில் வருவதுபோல் உள்ளது.

மேலும் தற்போதைய கெடுபிடியான கல்வி அதிகாரிகள்,பெட்டிஷன் போடும் சக நண்பர்கள்,மற்றும் ஊரில் உள்ள ஆளுங்கட்சியினைச் சார்ந்த எட்டாவது பாஸூம் பிறகு சமூக சேவையில் பின்னாளில் டாக்டர் பட்டமும் பெறும் தகுதியுடைய பெற்றோர் ஆசிரியப்பெருந்தகைகள் அவ்வாறு ஆசிரியர்களை மெத்தனமாக இருக்கவிடுவதில்லை. குறிப்பாக மேல் நிலை வகுப்புகள் நடத்தும் ஆசிரியர்கள்.

இதைவிடக் காமெடியான கருத்து,சென்ற தலைமுறை ஆசிரியர்களின் அர்ப்பணிப்பு உணர்வு இப்போது இல்லை என்று தாங்கள் கூறுவது. அதுவும் அதற்குக் காரணமாகத் ’தகுதிக்கு வேலை கொடுக்காமல் பணத்திற்கு வேலை தரும் கல்வித் துறையினை’ப் பற்றித் தாங்கள் கூறியிருப்பது,தங்களின் உச்ச கட்ட அறியாமையினையும், மேலும் யூகமாக உள்ளுணர்வின்படி கருத்துச் சொல்வது அனைத்தும் உண்மையாகவே இருக்கும் என்ற எண்ணத்தையுமே காட்டுகிறது.

டி.ஆர்.பி என்றழைக்கப்படும் ஆசிரியர் தேர்வு வாரியம் மூலமாகவே ஆசிரியர்கள் தேர்வு மூலம் தெரிவு செய்யப்படுகிறார்கள். கவனிக்க! தேர்வில் பெற்ற மதிப்பெண்கள் மட்டுமே முடிவானதாகக் கருதப்படுகிறது. இண்டர்வியூ போர்வையில் தகுதியற்றவர்களுக்கு இடமளிக்கும் செயல்பாடு இதில் இல்லை. மேலும் நாம் தேர்வில் எழுதிய பதில்களின் நகலும் தரப்படுகிறது பிறகு சரியான விடைகளும் இணையத்தில் வெளிவருகிறது. இதன் அடிப்படையில் சான்றிதழ் சரிபார்ப்பு நடைபெற்று வேலை தரப்படுகிறது. இதில் ஏதாவது ஐயம் இருப்பின் நீதிமன்றத்தினை அணுகலாம். எனவே இம்முறையில் முறைகேடு இல்லை. ஒரு பைசா செலவின்றி வேலை வாங்கலாம். (நான் 2002ல் இது போன்றே முதுகலை

ஆசிரியர் தேர்வில் தாவரவியலில் முதலிடம் பெற்று ஆசிரியரானவன்-பணம் கொடுத்து அல்ல)

தாங்கள் குறிபிட்டது போல் பணம் கொடுத்து வேலை வாங்கலாம் என்ற நப்பாசையில் பணத்தினைப் பறிகொடுத்த பலரினை நான் அறிவேன். மேலும் சென்ற தலைமுறை ஆசிரியர்கள், புதிதாக அர்ப்பணிப்பு உணர்வுடன் வருபவர்களைப் 'புது வெளக்கமாறு கொஞ்சநாளைக்கு நல்லாக் கூட்டும்' என்று நையாண்டி செய்வதை என் காதுபடக் கேட்டுள்ளேன்.

அரசுப்பள்ளிகளைப் படுமட்டமாகக் கருதும் நீங்கள், பத்தாம் வகுப்புத் தேர்வில் அதிக மதிபெண்கள் அரசுப் பள்ளி மாணவர்களாலேயே வாங்கப்படுகிறது என்ற உண்மையினை அறிவீர்களா?

பிறகு இந்த மாணவர்களை அப்படியே ஹைஜாக் செய்து சுய நிதிப் பள்ளிகள் +2வில் மார்க் வாங்க வைத்துவிடுகிறார்கள் (அங்கேயே 10ஆம் வகுப்பு படித்த மாணவர்கள் அவ்வாறு சோபிப்பது இல்லை). ஒவ்வொரு வருடமும் மாநில அளவில் +2வில் சிறப்பிடம் பெறும் மாணவர்களின் சிலரின் தாயகம் அரசுப் பள்ளிதான் என்ற செய்தி நிச்சயம் தங்களுக்குப் புதுமையாகவும் அதிர்ச்சியாகவும் இருக்கும்.

நீங்கள் கேட்கலாம் இவ்வளவு வீரப்பாகச் செயல்படும் ஆசிரியர்கள் +2விலும் சாதித்துக் காட்டலாமே என்று.ஆனால்,அரசுப் பள்ளிகளின் எல்லைகள் அவ்வாறு செயல்பட இடம் தருவதில்லை. உதாரணமாக +2 பாடத்தினை இரு வருடம் சுய நிதிப் பள்ளிகள் நடத்துகிறார்கள் அதாவது +1 பாடத்தினையே புறக்கணிப்பது. இதனைத் தனியார் பள்ளிகள் துணிச்சலாகச் செய்கிறார்கள் ஆனால் அரசுப்பள்ளிகளின் விதிகள் அவ்வாறு செய்ய இடம் தருவதில்லை. மீறி முயன்றால் சஸ்பென்ஷன், பெட்டிஷன் மற்றும் கல்வியாளர்களின் கடும் கவலைகளுக்கு ஆளாக நேரிடும்.

ஆனால் இதனையும் மீறி ஆண்டுப் பொது தேர்வு விடுமுறைகளில் அரசுப்பள்ளி ஆசிரியர்களால் சிறப்பு வகுப்பு (டியூஷன் அல்ல) நடத்தப்படுகிறது. ஆசிரியர்கள் எந்தவித வசூலும் மாமூலும் வாங்காமல் விடுமுறையினை அனுபவிக்காமல் பாடம் நடத்துகிறார்கள் (இது அனைத்து மாவட்டங்களிலும் நடைபெறுகிறது. சந்தேகமிருப்பின் ஏதேனும் அரசு மேல் நிலைப் பள்ளியினை அணுகித் தெரிந்து கொள்க). இதில் கொடுமை என்ன்வென்றால் யாருக்காக நட்த்துகிறோமோ அந்த மாணவர்கள்

அப்போது வருவதில்லை (பிறகு திட்டாமல் கொஞ்சவா முடியும் – ஒருவேளை கோவக்கார(?!) ஜெயமோகன் அண்ணன் ஆசிரியரானால் முடியுமோ என்னவோ).

ஆசிரியர்களின் மறைமுக அதிகாரம் பற்றிக் கூறியுள்ளீர்கள். அதாவது எலக்ட்ரானிக் ஓட்டு இயந்திரத்தின் வாக்குகளையே மாற்றும் சர்வக்ஞராக ஆசிரியப்பெருமக்கள் திகழ்கிறார்கள் என. என்னே தங்களின் கண்டுபிடிப்பு. எலக்ஷன் கமிஷன் தங்களிடம் விளக்கம் கேட்டால்தான் சரிவரும் போல.

பூத்தில் வேலை செய்யும் ஆசிரியர்கள் திருட்டுத்தனமாகக் கழ(ல)கத் தொண்டர்களை மீறி எப்படி ஓட்டுப்போடமுடியும் என்பதை விளக்கமுடியுமா? குறைந்தபட்சம் தேர்தலில் (எலக்ட்ரானிக்) பணியாற்றிய அனுபவம் தங்களுக்கு உண்டா? அப்படி இல்லையெனில் அந்த அனுபவம் இல்லாத தாங்கள் எவ்வாறு கண்மூடித்தனமாகக் கருத்துக்கூற இயலும்.

தேர்தல் கமிஷன் விட்ட சவாலில் கலந்து கொள்ளாமல் ஜகா வாங்கிய கட்சிகளாலேயே நிரூபிக்க இயலாததை தாங்கள் எப்படி நிருபிப்பீர்கள் எனத் தெரியவில்லை.

நான் 3 எலக்ட்ரானிக் தேர்தல்களில்,வாக்குச்சாவடி அலுவலராக இருந்தவன் என்ற முறையில் தாங்கள் குறிப்பிடும் மோசடிகளைச் செய்ய இயலாது என அனுபவபூர்வமாக உணர்ந்தவன். ஒரே ஒரு மோசடிக்கான வாய்ப்பு மட்டும் உள்ளது. அது வயதானவர்களை அலுவலரே அழைத்துப் போய் அவருக்குப் பதிலாக அலுவலரே ஓட்டுப் போடுவது. ஆனால் இதைச் செய்வதற்கு வாக்குச் சாவடி ஏஜண்டுகள் மடையர்களாக இருக்க வேண்டும்.

ஆனால் உலகத்தில் ஆசிரியர்களைத் தவிர வேறு யாரும் அவ்வளவு மடையர்களாக இருப்பதில்லை. சமுதாயத்தில் அவன் ' வாத்தியானாக' அடையாளம் கண்டு கொள்ளப்படுகிறான். தன் சொந்த மாணவர்களால் பட்டப்பெயர் வைக்கப்பட்டு, அதுவே ஆசிரியையாக இருந்தால் அந்தப் பெயர் கெட்டவார்த்தையுடன் சேர்க்கப்பட்டுப் பள்ளிக் கழிப்பறைகளிலெல்லாம் பறை சாற்றிக் கொண்டிருக்கும். தண்ணியடித்து விட்டுப் பள்ளிக்கு வரும் மாணவர்களைக் கண்டிக்கக் கூட அதிகாரமற்றவன். அப்படிக் கண்டித்தால் " தருமபுரி அருகே குடித்துவிட்டுப் பள்ளிக்கு வந்த மாணவனைக் கண்டித்த ஆசிரியருக்கு அடி உதை" என்று தினத்தந்தியில் செய்தியினைப் பார்த்திருக்கமாட்டோம். நான் பணியாற்றிய பள்ளியில்

ஆசிரியர் ஒருவர் 8ஆம் வகுப்பு படிக்கும் பீடி குடித்த மாணவனைக் கண்டித்து அனுப்பிய அடுத்தநாள் அவனின் அம்மா பிரேயர் நடக்கும்போது கெட்ட வார்த்தைகளால் அர்ச்சித்தது நினைவில் உள்ளது. மேலும் அவள் தன் கையைப்பிடித்து இழுத்ததாக ஆசிரியரை மிரட்டியதையும் மறக்கமுடியாதது.(தேவையெனில் இதை ஆதாரத்துடன் நிரூபிக்க இயலும்)

ஏன் என் சொந்த அனுபவத்தில் 2002ல் நான் பணியாற்றிய பள்ளியில் நான் தினமும் 8.30 மணிக்கு மாணவர்களை வரச்சொல்லித் தேர்வு எழுத வைத்த ஒரே காரணத்திற்காக ஒரு மாணவன் நான் அவனின் ஜாதிப் பெயரைச் சொல்லித் திட்டியதாக அபாண்டமாகப் பழிகூறினான், காலனியிலிருந்து ஒரு கூட்டத்தினையே கூட்டி வந்தான். நல்ல வேளை அதே பள்ளியில் இருந்த என் அன்பிற்குரிய தமிழய்யா (அதே காலனியில் வசிப்பவர்) அவர்களும் பிற மாணவர்களும் என் இயல்பினைக் கூறிக் கூட்டத்தினை விரட்டி அடித்தனர்.(பிறகு அதே மாணவனுக்குப் பிராக்டிகலில் 50க்கு 50 போட்டபோது அவன் என் காலில் விழுந்தது தனிக்கதை). ஆனால் இச்சம்பவம் ஒரு வித அச்சத்தினையும் பாடம் நடத்துவதற்கே வெறுப்பினையும் ஏற்படுத்தியது. தமிழய்யா மட்டும் அன்று இல்லை என்றால் என் பெயர் தினத்தந்தியில் அன்றே நாறியிருக்கும். இதில் கொடுமை என்னவென்றால் அந்த மாணவன் கூட்டி வந்த கூட்டத்தில் பாதிப்பேர் அதற்கு முந்தைய ஆண்டுகளில் என்னிடம் படித்த மாணவர்கள். இதுதான் ஓர் உண்மையான ஆசிரியனுக்கு இறுதியில் கிடைக்கும் பரிசு என அன்று தெளிந்து நொந்து கொண்டேன். பொதுமக்களிடையே இப்போதும் சரி கடந்த காலத்திலும் சரி ஏன் மன்னர்கள் காலத்தில்கூட மரியாதை கிடைத்ததில்லை. அதனால் நீங்கள் இதைவிட மகாகேவலமாக எழுதினாலும் எதிர்க்கத் தெம்பும்,திராணியும் அற்றவர்கள்தான் ஆசிரியர்கள்.

தனியார் பள்ளியையும் அரசுப்பள்ளியையும் என்றைக்குமே ஒன்றாகவைத்து ஒப்பீட்டு ஆய்வு செய்யமுடியாது. காரணம்,

1. 10ஆம் வகுப்பு மற்றும் 12 ஆம் வகுப்புப் பாடத்தினை இரு வருடம் தனியார் பள்ளிகள் நடத்தலாம். ஆனால் அரசுப்பள்ளிகளால் அது முடியவே முடியாது (அரசுப் பள்ளியில் பாடமே நட்த்துறது இல்லை,இதுல எங்க 2 வருசப் பாடம் எனத் தாங்கள் நக்கலடிக்கலாம்)

2. தனியார் பள்ளிகள் பாடத்தினை விளக்குவதில்லை.பதிலாக அதனை வரிவரியாக ( தங்கள் மகன் தங்களிடம் குறிப்பிட்டது போல்) மாணவர்களின்

மனதில் பதியவைக்கவும் அவ்வாறு பதியவைத்ததைத் தாளுக்கு மாற்றும் வித்தையினையும் கற்றுத் தருகின்றனர். அரசுப் பள்ளிகள் அவ்வாறு நினைத்த நேரத்தில் தேர்வுகள் வைக்கமுடியாது. ஏனெனில் கற்றல்-கற்பித்தலுக்கு மட்டுமே பாடவேளைகளை பயன்படுத்த வேண்டும் என்ற அரசின் விதி. இதற்காக அரசுப் பள்ளி ஆசிரியர்கள்,காலை 8.30 மணிக்கு மாணவர்களை வரவழைத்துத் தேர்வினை நடத்துகின்றனர் இதே போன்று மாலை பள்ளி முடிந்தவுடன் 10, 12 வகுப்பு மாணவர்களுக்குச் சிறப்பு வகுப்புகள் நடத்தப்பட்டு வருகின்றன. நான் கூறுவது எங்கள் பகுதிக்கு மட்டுமன்று. தமிழ்நாடு முழுவதும் இதே நிலைதான்.

இது புருடா அல்ல. தாங்களே நேரடியாகத் தங்கள் பகுதியில் உள்ள அரசுப் பள்ளிகளில் மாலை வேளைகளில் சென்று இதனை உறுதிப்படுத்தலாம். அப்படி வகுப்பு நடைபெறவில்லை எனில் முதன்மைக் கல்வி அலுவலரைத் தொடர்பும் கொள்ளலாம்.

3. தனியார் பள்ளிகளின் வேலை நேரம் 24மனி நேரம்.ஆனால் அரசுப் பள்ளிகளில் மாணவர்களைக் காலை 9 முதல் மாலை 5 மணி வரை மட்டுமே கட்டுப்படுத்த இயலும். மாலையில் படிக்கவைப்பது பெற்றோரின் கடமை.

ஆனால் தேர்வு நேரத்தில் 10,12 ஆம் வகுப்பு மாணவர்களை அரசுப் பள்ளிகள் சிலவற்றில் தங்கவைத்து பெ.ஆ.கழகத்தின் உதவியுடன் மாலைச் சிற்றுண்டி ,இரவு உணவு ஆகியவற்றினை அளித்து ஒரு ஆசிரியரின் மேற்பார்வையுடன் ( அதற்கு அவருக்கு ஏதும் பணம் அளிப்பது இல்லை. முற்றிலும் சேவை நோக்கம் மட்டுமே) மாணவர்கள் படிக்கவைக்கப்படுகின்றனர். எதிர்வரும் பிப்ரவரி, மே மாதங்களில் நாமக்கல் வாருங்கள்.நானே அழைத்துச் சென்று காண்பிக்கின்றேன்.

அரசுப் பள்ளி ஆசிரியர்களை எளிதாகக் கட்டுப்படுத்தக்கூடிய அமைப்பு,அரசிடம் உள்ளது ( தாங்கள் தவறாகக் குறிப்பிடுவது போல் தனியார் பள்ளி ஆசிரியர்களைத்தான் கட்டுப்படுத்த இயலாது. திறமையான மேல் நிலைத் தனியார் ஆசிரியர் மாதம் 50 ஆயிரம் சம்பாதிப்பது மட்டுமன்றி ஒரு பள்ளி பிடிக்கவில்லை என்றால் எளிதாக அடுத்த பள்ளிக்கு மாறலாம். 12ஆம் வகுப்பு விடைத்தாள் திருத்தும் போது ஏதேனும் தவறு அவர்களால் நேர்ந்தால் கூட அவர்களை ஒன்றும் செய்யமுடியாது. இதே அரசுப் பள்ளி ஆசிரியர் என்றால் தண்டனைகள்

எப்படி வேண்டுமானாலும் இருக்கலாம்) இதை மீறி எந்த ஆசிரியரும் நடந்து கொள்ளமுடியாது என்பதே உண்மை.

பிரச்சனை,நமது கல்வியமைப்பில் உள்ளது. தன்னம்பிக்கையினையும் இலட்சியத்தினையும் வலியுறுத்தாத கல்வியால்தான் இதுபோன்ற தற்கொலைகள் நிகழ்கின்றன. இறந்த மாணவன் எதிர்பார்க்கும் கல்வியினைத் தற்போதைய சூழலில் நம்மால் தர இயலாது. இதற்கு ஆசிரியர்கள் என்ன செய்ய இயலும். ( ஆனால் தற்போது பெரும்பான்மையான பள்ளிகளில் இது போன்ற மாணவர்களை ஒன்றும் சொல்வதும் இல்லை. அவர்களைப் படிக்கச் செய்வது, ரெக்கார்ட் வரையச் சொல்வது போன்ற எந்தப் பணியினையும் ஆசிரியர்கள் தருவதில்லை – நமக்கேன் வம்பு என இருந்து விடுகிறார்கள் – அந்த மாணவனை ஒதுக்கிவைத்துவிடுகிறார்கள் – அவன் இஷ்டம் போல் பள்ளி வந்து செல்லலாம் _ இதைச் சொல்வதற்கு மிகவும் வருத்தமாகத்தான் இருக்கிறது – என்ன செய்வது காலம் அப்படி உள்ளது – எந்த ஆசிரியன்,களி தின்பதற்கும் பேப்பரில் குடும்பத்துடன் அவமானப்படவும் விரும்புவான் – மேலும் முன் ஜாமீன் போன்ற சமாச்சாரங்கள் அவன் கேள்விப்படாதவை). ஒரு பிரச்சினை என வரும் போது சம்பந்தப்பட்ட ஆசிரியனுக்கு எந்த உதவியும் கிடைப்பதில்லை. ஒன்றாகப் பணியாற்றும் ஆசிரியர்கூடக் கண்டுகொள்வதில்லை. தொடக்கக் கல்வி ஆசிரியர்களின் சங்கம் தவிர்த்துப் பிற ஆசிரியர்களுக்கான சங்கங்கள் பெரிதாக ஒன்றும் சாதிக்க இயலாத ஒற்றுமையின்மையே இங்கு நிலவுகிறது. பிறகு எங்கு தாங்கள் தொழிற்சங்கம் போன்ற ஒற்றுமையைக் கண்டீர்கள் என தெரியவில்லை. இவ்வளவு ஏன்?ஒரு மாணவன் இறந்தால் அரசு அலுவலர்கள், மாவட்ட ஆட்சியர்கள், மந்திரிகள், மீடியா எனப் புடைசூழ வருபவர்கள் – 50 ஆண்டுகள் பணியாற்றிய ஓர் ஆசிரியன் இறக்கும்போது ஒரு நாய்கூட வருவதில்லை என்ற வேதனையான உண்மையினை உணர்வீர்களா?

மேலும் தாங்கள் சிலாகிக்கும் தனியார் பள்ளிகளில் ஒவ்வொரு ஆண்டும் வெளியில் தெரியாமல் எத்தனை தற்கொலைகள் நடக்கின்றன என விசாரித்துப் பாருங்கள். நிச்சயம் அதிர்ச்சி அடைவீர்கள். மிகத் திறமையாகப் படிக்கும் இயல்புடைய அந்த மாணவர்களே தற்கொலை செய்து கொள்கிறார்கள் என்றால் – அரசுப் பள்ளியின் நிலையினை என்னவென்பது?

இறுதியாக எதையும் பொத்தம்பொதுவாகச் சொல்லாமல் ஆதாரத்துடன் எழுதுமாறு தங்களை வேண்டுகிறேன். குறிப்பாக ஆசிரியர்களைப் பற்றித் தவறாகப் படத்தில்கூடச் சித்தரிக்கக் கூடாது எனும் சில நாட்டினரின் சிந்தனைப் பின்னணி பற்றிச் சிந்தித்துப் பாருங்கள். அதில் எக்காரணம் கொண்டும் மாணவர்கள் மற்றும் பெற்றோர்கள் மனதில் ஆசிரியரைப் பற்றி துளி அளவு கூட தவறான எண்ணம் ஏற்படக்கூடாது என்ற அக்கறையினை உணர்வீர்கள்.

ஆசிரியர்கள் அனைவரும் நூற்றுக்கு நூறு நல்லவர்கள் என வாதிடுவது என் நோக்கமல்ல. புல்லுருவிகள் எங்கும் இருப்பவர்கள். யானை வாழும் காட்டில்தான் எறும்புகளும் வாழ்கின்றன. அவை கண்ணுக்குத் தெரிவதில்லை. அறம் எழுதியவருக்கு நான் என்ன புதிதாகக் கூற முடியும்?

நீண்ட கடிதமாக அமைந்துவிட்டதற்குப் பொறுத்தருள வேண்டுகிறேன். தங்கள் மேல் கொண்ட அன்பினால் மட்டுமே நான் இவ்வளவு பெரிய கடிதம் எழுத நேர்ந்தது. வெறுப்பால் அல்ல. தங்களின் விலைமதிப்பற்ற நேரம் வீணாகி இருக்காது என நம்புகிறேன்.

மிகுந்த அன்புடன்

ந.மகேஷ்குமார்

நாமக்கல்

அன்புள்ள மகேஷ் குமார்,

நன்றி.அக்கட்டுரை ஓர் எதிர்வினை. அந்தத் தற்கொலையில் இருந்த கற்பனைக்கெட்டாத கையறுநிலை, அந்த நிலைக்கு ஆதரவாக ஒரு துரும்பைக்கூட எடுத்துப்போட முடியாத நம்முடைய அரசும் கல்வித்துறையும், அதற்கு எதிராக வெறும் அரசியலாக மட்டுமே அதைக் கண்டு ஆற்றப்பட்ட ஓர் எதிர்வினை ஆகியவை இணைந்து அந்த ஆழமான மனக்கசப்பையும் கொந்தளிப்பையும் உருவாக்கின.

கீழ்க்கண்ட பதிவை நான் 2003 ல் மரத்தடி இணையதளத்தில் ஒரு கேள்விக்குப் பதிலாக அளித்திருந்தேன்.

பள்ளிநாள்களிலேயே என்னை மிகவும் தூண்டிய முன்னுதாரண ஆசிரியர்கள் பலர் உண்டு. ஓய்வுபெற்றுவிட்ட சத்தியநேசன் அவர்களைச்

சமீபத்தில் தெருவில் பார்த்தேன். ஆற்றூர் ரவிவர்மா ஆசிரியர்தான். அத்தொழிலில் உள்ள மோகம் காரணமாக இந்தத் தள்ளாத வயதிலும் அவர் தனியார்பள்ளிக்குக் கற்பிக்கச் செல்கிறார். அவரது மாணவர்கள் கேரள இலக்கிய இதழியல் துறைகளில் சாதனை செய்தனர். அவர்கள் நினைவில் அவர் அப்பழுக்கற்ற ஒரு பேராசான். எம்.வேதசகாயகுமார் ஓர் ஆசிரியராக எடுத்துக் கொள்ளும் சிரத்தையும் உழைப்பும் பலசமயம் என்னைப் பிரமிக்கவைத்துள்ளன.

என் மாமனார் [அருண்மொழிநங்கையின் அப்பா] எஸ்.சற்குணம் அவர்கள் ஆசிரியராக நாற்பதுவருடம் முற்றிலும் அர்ப்பண உணர்வுடன் பணியாற்றியவர். தனிவாழ்க்கையிலும் திராவிட இயக்கப் பிடிப்புள்ள பொதுப்போராளியாக முன்னுதாரணமாக இருந்தவர். தன் குடும்பத்தில் உள்ள அத்தனை எளியவர்களுக்கும் நிழல் அவர். கடற்கரையோர ஆரம்பப் பள்ளி ஆசிரியயையாக இருந்த அருண்மொழியின் அம்மா தினம் பிள்ளைகளுக்கு வீட்டிலிருந்து பைநிறைய பூப்பறித்துக் கொண்டுசெல்லும் காட்சி என் மனதில் நிற்கிறது. என் நண்பரும் இலக்கிய வாசகருமான தங்கமணி [மொரப்பூர்] தன் பள்ளிக்கு ஆற்றும் உழைப்புக்கும் மாணவர்கள்மீது கொண்டுள்ள பற்றுக்கும் சமானமாக அதிகமான விஷயங்களைச் சொல்லிவிட இயலாது. நான் பட்டியலைப் போட்டுக் கொண்டே போகமுடியும்

ஆசிரியர்களில் மகத்தான மனிதர்கள் இன்றும் ஏராளமாக உள்ளனர். அருண்மொழியின் சக ஊழியையான மீனா என்பவரின் கணவரான ஆசிரியரைச் சென்றவாரம் இரவு எட்டுமணிக்குப் பேருந்தில் பார்த்தேன். ஏன் இவ்வளவு நேரமாயிற்று என்றேன். வேலைபார்ப்பது மிகச்சிறிய கிராமத்தில். அங்கே பையன்களுக்குக் கணக்கும் ஆங்கிலமும் ஏறவே ஏறாது, பத்தாவது தேர்வு வருகிறதல்லவா, ஆகவே நாங்கள் மூன்றுபேர் உபரிவகுப்பு நடத்துகிறோம் என்றார். பணம் தருவார்களா என்றேன். நல்ல கதை, கைக்காசுப்போட்டு டீ வாங்கித்தரவேண்டும், அவ்வளவு ஏழைப் பையன்கள் என்றார். காட்டுக்கத்தலாகக் கத்திப் பிரம்பால் விளாசி, டென்ஷன் ஏறி ராத்திரி தலைவலி வருகிறது என்று புலம்பினார். இன்றும் தமிழ்நாட்டில் பல அரசுப்பள்ளிகள் மிகச்சிறந்தசேவை ஆற்றிவருகின்றன என்பதை ஒவ்வொரு தேர்வுமுடிவுகளும் காட்டுகின்றன, இந்தப் பத்தாம்வகுப்பு முடிவுகளும். கிராமத்துப் பள்ளியில் நூறு பிற்பட்ட மாணவர்கள் கொண்ட வகுப்பில்

கத்திக் கத்தி அவர்களில் முக்கால்பங்கினரை வெல்லவைக்கும் அந்த ஆசிரியர்களைப் போகிறபோக்கில் சீரழிந்த கும்பல் என்று சொல்லிவிடமுடியுமா என்ன?

அந்த நம்பிக்கையில்தான் நான் என் மகனை அரசுப்பள்ளியில் சேர்த்தேன். தனியார்பள்ளிகளின் சிறைக்கொடுமைகள் அங்கே இருக்காது, நான் சந்தித்ததுபோல ஒருசில ஆசிரியர்களையாவது அவன் அங்கே சந்திக்க முடியும், அவர்கள் மேல் அவன் மரியாதையும் ஈர்ப்பும் கொள்ளமுடியும் என நினைத்தேன்.

ஆனால் 2004ல் அவனை நான்ந் ஆகர்க்கோயில் அரசுப்பள்ளி ஒன்றில் சேர்த்தது முதல் மெல்லமெல்ல என் நம்பிக்கைகள் சிதைந்தன. நான் கண்ட அந்த ஆசிரியர்கள் என்னுடன் தொடர்பில் இருப்பவர்கள்– ஆகவே ஏதோ ஒருவகையில் இலட்சியவாத நோக்குள்ளவர்கள். அவர்கள் மிகமிக குறைவானவர்களே. எஞ்சிய ஆகப்பெரும்பான்மைக்கு கற்பிப்பதில் மயிரிழை அளவும் ஆர்வமில்லை. நான் மீண்டும் மீண்டும் பள்ளிக்குச் சென்று மீண்டும் மீண்டும் வாதிட்டு தொடர்ந்து அவமானப்பட்டு கண்டுகொண்ட உண்மை இது

அன்புள்ள மகேஷ், நான் ஆய்வுக்கட்டுரை எழுதவில்லை. அனுபவத்தைச் சொல்கிறேன். ஆகவே விவாதங்களில் நான் பதிவு யந்திரத்தை பதுக்கி எடுத்துச்செல்லவில்லை. நான் உண்மை சொல்லவில்லை என நீங்கள் நினைத்தால் இதை முழுமையாக தவிர்த்துவிடலாம், அவ்வளவுதான்

நீங்கள் சொன்னதுபோல ஆத்மார்த்தமாக கற்பிக்கும் ஒரு ஆசிரியரைக்கூட என் மகன் அவனுடைய பள்ளி நாளில் சந்தித்ததில்லை. சுப்புலட்சுமி என்ற தற்காலிக ஆசிரியரைத்தவிர. பெற்றோர் ஆசிரியர் கழக சம்பளம் வாங்கிய அவரும் வேலை இழந்து தனியார்பள்ளிக்குச் சென்றுவிட்டார். என் மகனை நான் மிக மதிப்பவன். அவனுடைய அடிப்படை நியாய உணர்வை, கருணையை, என்னைப்போலன்றி எப்போதுமே நிதானத்துடன் இருப்பதை ஆச்சரியத்துடன் பார்ப்பவன். அவனிடம் அடிப்படை மரியாதையை ஈட்டிய ஒரே ஒரு ஆசிரியர் கூட இல்லை என்பது அவனுக்கு மறுக்கப்பட்டிருக்கிறது என்ன்ன என்பதை எனக்கு காட்டுகிறது. எவ்வளவு பெரிய ஒரு தனிப்பட்ட இழப்பு அது!

ஆறு வருடம் அரசுப்பள்ளிகளுக்குச் சென்றேன். நான் சொன்னதையே திருப்பிச் சொல்கிறேன். அரசுப்பள்ளிகளில் விதிவிலக்காக சிலர் தவிர எவருமே மாணவர்கள் மேல் அக்கறை கொண்டு சொல்லிக்கொடுப்பதில்லை. எல்லாவற்றையுமே ஒப்புக்கு தான் செய்கிறார்கள். அவர்களை நம்பி எந்த மாணவரும் தேர்வுகளைச் சந்திக்கமுடியாது. இதுவே நான் கண்ட உண்மை. நீங்கள் சொல்வதை நான் நம்புகிறேன், ஆனால் நான் பார்த்ததெல்லாம் நேர் எதிராக.

தேதல்களில் ஆசிரியர்கள் பல மோசடிகளைச் செய்ய முடியுமென நான் விரிவாகவே பேசமுடியும். தொழிற்சங்க சார்பில் தேர்தல் வேலைகளில் சம்பந்தப்பட்டபோது சாதாரணமாக நானே நேரில் சென்று கண்டிருக்கிறேன். சண்டைகள் போட்டிருக்கிறேன். மலைக்கிராமங்களிலும் சிற்றூர்களிலும் கள்ளஓட்டு நாடகங்களுக்கு ஆசிரியர்களே முழுமுதல் நடிகர்கள். இன்று தேர்தல் கமிஷனுக்கு அஞ்சி அவர்கள் சும்மா இருக்கிறார்கள். அரசு ஆசிரியர் வேலைவாய்ப்புகளில் ஒரு குறிப்பிட்ட சதவீதத்துக்கு வெளியே கணிசமான வாய்ப்புகள் லஞ்ச அடிபப்டையிலேயே செய்யபப்டுகின்றன. அதையும் நானே கண்டிருக்கிறேன். ஒருமுறை ஒரு உயர்தர ஓட்டலின் முகப்பில் இருக்கையில் ஏற்பாடு செய்பவர்களிடம் பேசியும் இருக்கிறேன். உங்கள் நம்பிக்கைகள் வாழ்க.

கடைசியாக, கப்பம். தெளிவாகவே கேட்கிறேனே. மாணவிகளிடம் செக்ஸ் வைத்துக்கொண்ட ஆசிரியர்கள் பிடிபட்டிருக்கிறார்கள். என்ன தண்டனை அளிக்கப்பட்டிருக்கிறது? அதிகபட்சம் இடம் மாற்றம். ஏன்? அதுதான் தொழிற்சங்க அரசியல். இடதுசாரிகள் இல்லாமலிருக்கலாம், வலதுசாரிகள் இருக்கலாம். ஆனால் எவரும் எதற்காகவும் தண்டிக்கப்பட முடியாது. அதற்கு அளிக்கப்படும் கப்பமே சந்தாப்பணம், போனஸ் முதலிய வற்றின்போது அளிக்கப்படும் நன்கொடைகள். அதை விஜய் படங்களில் நீங்கள் பார்க்கமுடியாது.

நான் பொதுமைப்படுத்துகிறேன். ஆனால் ஒரு நீண்டகால அனுபவத்தொடரின் விளைவான மனப்பதிவை அப்படித்தான் பொதுமைப்படுத்திச் சொல்லமுடியும். உங்களுக்கு ஏற்பட்ட அனுபவங்கள் வருந்தத்தக்கவை. ஆனால் அவை ஏன் என சிந்தித்துப்பாருங்கள். இன்று இதே நிலை டாக்டர்களுக்கும் உள்ளது. ஒரு பிரச்சினை என்றால் டாக்டரை

அடிக்க பாய்கிறார்கள் மக்கள். ஏன்? சென்ற தலைமுறை ஆசிரியர்கள், மருத்துவர்கள் எப்படி மதிக்கப்பட்டார்கள். இன்று என்ன ஆயிற்று? ஒட்டுமொத்தமாக நம் மக்களுக்கு ஆசிரியர்கள் மேல் மதிப்பு இல்லை. மருத்துவர்கள் மேல் மதிப்பு இல்லை. சோம்பெறிகள் கொள்ளையர்கள் என்ற மனப்பதிவே உள்ளது. அந்த மனப்பதிவை உருவாக்கும் பெரும்பான்மையினரே சிறுபான்மையினருக்கும் அவமரியாதையை தேடித்தருகிறார்கள்

மீண்டும் சொல்கிறேன். எனக்கு தெரியும், நல்ல ஆசிரியர்கள் இருக்கிறார்கள் என. நல்ல மருத்துவர்கள் பலர் நெருக்கமான நண்பர்கள். ஆனால் ஒரு தொழில்வற்கம் என்ற முறையில் இவ்விருவர் மேல் எந்த அடிப்படை மதிப்பும் எனக்கும் இல்லை. நான் பொதுமக்களில் ஒருவன் மட்டுமே. எதிலும் நிபுணன் அல்ல.

# (7) கல்வியும் பெற்றோரும்

அன்பின் அண்ணன் ஜெயமோகன் அவர்களுக்கு,

நெடுநாட்களாக எழுத நினைத்துள்ள ஒரு விஷயம் இது. கல்வி என்பது கற்றல் மற்றும் அறிவு வளர்ச்சிக்கான ஒரு விஷயம் – அதன் உபபலனாகக் கிடைப்பவை – வேலை மற்றும் மற்ற லௌகீக ஆதாயங்கள். அதே போல வேலை, பணம் இரண்டுமே இந்த உலகியல் வாழ்வை வாழ உதவும் சாதனங்கள் மட்டுமே. அவை நம் ஆளுமையை, ஆன்ம உணர்வை வளர்த்து மனதிருப்தியை தரும் விசயங்களைப் (ஒரு புத்தகத்தை வாங்க, கலையை ரசிக்க, உலகம் சுற்ற, நல்ல உணவை ரசிக்க) பெறுவதற்குப் பயன்படுத்திக் கொள்ளலாமே தவிர, அவற்றைப் (வேலை, பணம்) பெறுவதற்காக ஆன்மாவை அழித்துக் கொள்ளத் தேவையில்லை. ஆனால் இந்தச் சில்லறை உண்மையைப் புரிந்து கொள்வது யாருக்கும் அவ்வளவு எளிதானதாய் இல்லை.

இந்தியாவில் ஒட்டுமொத்த முட்டாள்களில் அறுபது சதவீதம் பேர் மென்பொருள் நிறுவனங்களில் பணிபுரிகின்றனர். (சற்றே கடுமையான வசைதான் – ஆனால் உண்மையும் கூட. பத்து வருட தொழில்நுட்ப வாழ்வில் வெவ்வேறு பொருளாதார, கல்வி, பண்பாட்டுப் பின்புலம் கொண்ட சகாக்களுடன் வேலை செய்ததில் அடிப்படை அறிவும், மனிதனாய் இருத்தலுக்கான முயற்சியும் கொண்ட பத்து நபர்களை என்னால் காட்டமுடியுமா என்பது சந்தேகம்தான்.) இது புலம்பலோ அடுத்தவரைக் குறை சொல்லவோ நினைக்கும் ஒரு விஷயம் அல்ல. இவர்களைப் பற்றிய விமர்சனங்கள் அவர்களைச் சென்றடையவே செய்யாது. நான் கவலைப்படுவது இவர்களின் குழந்தைகளைப் பற்றி. நான் சந்தித்த யாரும் குழந்தை என்பது தன்னுணர்வு கொண்ட ஒரு சக உயிர் என்பதை உணர்ந்தவர்கள் இல்லை. சகமனிதர்களின் இந்தத் தாக்குதல் ஒரு விதப் பதட்டத்தை உருவாக்குகிறது.

உலகப்புகழ்பெற்ற பாரிசின் லூவர் மியூசியத்தில், ஒரு 5 வயதான பெண் குழந்தை தரையில் அமர்ந்து ஒரு ஓவியத்தை நகல் எடுத்துக் கொண்டு இருந்தது. நான் மிகுந்த ஆச்சர்யத்துடன் அது வரைய முயல்வதைப் படம் எடுத்தபடி அருகே போனேன். நான் அந்தப் பெண்ணிடம் பேச முயன்ற

அடுத்தநொடி ஒரு நபர் என்னைக் கவனித்தபடி அருகே வந்தார். அது அவரின் பெண். கடந்த வருடம் வழக்கமான வார விடுமுறைக்கு அவளை அழைத்து வந்து விட்டு வீடு சென்றிருக்கிறார், மறுநாள் காலை அவர் எழும்போது, அவரிடம் அவள் கொடுத்தது, ஒரு பென்சிலால் வரையப்பட்ட அரைகுறை ஓவியத்தை. அன்றிலிருந்து ஒவ்வொரு ஞாயிறும் லூவருக்கு இருவரும் வந்துவிடுவார்கள். ம்யூசியம் மூடும் வரை ஏதேனும் ஒரு ஓவியத்தை அவள் வரைவாள். பின் வார நாட்களில் அவரவர் வேலையைத் தொடர்ந்தபடி அடுத்த வாரத்திற்காகக் காத்திருப்பார்கள்.

என்னுடன் வந்த நண்பர் அவரிடம் படிப்பு கெட்டுவிடாதா? என்று கேட்டார். அந்தக் கேள்வி அந்த நபரைக் குழப்பிவிட்டது. அவர் என் பெண்ணிற்கு எழுத, படிக்கத் தெரிந்தால் போதும், அதை அவள் செய்வாள் என்று நம்புகிறேன் என்றார். இல்லை அவளை MBA/MS படிக்க வைக்க வேண்டாமா என்று கேட்க, அவளுக்கு ஓவியம் பிடிக்கிறது, இன்னொருநாள் அதை எறிந்துவிட்டு வேறேதேனும் படித்தால் அது அவள் விருப்பம், நான் ஏன் அவள் படிப்பை முடிவு செய்ய வேண்டும் என்று கேட்டார். மகளுக்காக ஒருநாள் முழுவதும் காத்திருக்கும், அவள் வாழ்வை வாழவிடும் ஒரு தகப்பனை – மேய்ப்பனைக் கண்ட திருப்தியுடன் நான் கிளம்பினேன்.மீண்டும் சில மாதம் கழித்து, லூவர் செல்லும் போதும் நான் அந்தத் தந்தையையும் மகளையும் சந்தித்தேன். என் பார்வையில் இது ஒட்டுமொத்த ஐரோப்பிய சமூகமனநிலை. அங்கே இருக்கும் நம் மக்கள் இங்கே செய்யும் கொடுமைகளை மாற்றமே இல்லாமல் அங்கேயும் பிள்ளைகளுக்குச் செய்கிறார்கள்.

இங்கே, ஒரு வயதுக் குழந்தைக்குப் பாடம் சொல்லும் குறுவட்டு, 2 வயதில் ஆரம்பிக்கும் கல்வி, 3 வயதில் முறைப்படுத்தப் படாத கல்வி, 4 வயதில் ஆரம்பிக்கும் முறைசார் கல்வி, நான்காம் வகுப்பில் இருந்து IIT நுழைவுத் தேர்வுப் பயிற்சி, நடனம், ஓவியம், பாட்டு, கம்ப்யூட்டர் – இதில் எங்கேயும் வாசிப்போ, அரசியல், இயற்கை சார்ந்த விசயங்களோ இருக்கவே செய்யாது. இவை அற்ற எந்த விசயமும் கல்வி என்று சொல்லத்தகுதி அற்றவை.

சென்னையில், என்னுடன் வேலை செய்யும் ஒருவரிடம், எதற்காக உங்கள் குழந்தையை இவ்வளவு செலவு செய்து (ஒரே பையன் – இரண்டாம் வகுப்பு – மாதம் 15000 ரூபாய், இது தவிர வருடம் 3 லக்ஷம் ரூபாய் கட்டணம்) கொடுமைப்படுத்துகிறீர்கள் என்று கேட்டேன். என் மகனுக்கு சொத்து எதுவும் சேர்த்து வைக்க முடியாது, சிறப்பான கல்வியை மட்டுமே கொடுக்க

முடியும் என்று சொன்னார். அவரின் மாத வருமானம் இருபது லட்சத்திற்கும் மேல். இவ்வளவு பணம் கொண்ட இவர்கள் தங்கள் குழந்தைகளையாவது சுதந்திரமாக வளர்க்கலாம் இல்லையா? இது ஒரு விதமான நிழலுடனான யுத்தம் போல் இருக்கிறது.இவர்கள் யாரும் தன் குழந்தையை ஒரு இலக்கிய/கலை நிகழ்விற்கோ, சிற்பக் கூடத்திற்கோ, அரும்பொருள் கூடத்திற்கோ அழைத்துச் செல்பவர்கள் இல்லை.

இவர்களிடம் கேட்டால் பின் வரும் காரணங்களில் ஒன்றைத்தான் சொல்வார்கள்:

· ஐன்ஸ்டீனை உருவாக்குதல். (பேரறிவைத் தொடர் பயிற்சியால் உருவாக்குதல் – எல்லோரும் ஐன்ஸ்டீன்கள் ஆவது எப்படி? போன்ற பயிற்சிகளைப் பெறுவதன் மூலம்.) :)
· பில்கேட்ஸ், அம்பானிகளை உருவாக்குதல் (தொழில் அதிபனாக அல்ல – பணக்காரனாக மட்டும் வர- I IT இல் சேர்ந்து நல்ல சம்பளத்தைப் பெற்றுப் பெரும் பணத்தைக் குவித்தல் J, ஒரு போதும் ஒரு புதுப்பொருளை/சிந்தனையைக் கண்டுபிடித்தலோ, நிறுவனத்தை ஆரம்பித்தாலோ இவர்கள் நோக்கமாக இருக்காது)
· தன் சக ஊழியருக்குப் போட்டியாக – கௌரவம் நிலை நாட்டுதல் (இருப்பதிலேயே நல்லவர்கள் இவர்கள்தான்)

மேல்கண்ட நோக்கங்களால்தான் குழந்தைகளை இந்தத் திருட்டுப்பள்ளிக்கூடங்களில் சேர்க்கிறார்கள்.

இந்தப் பள்ளிகளில் நுண்ணுணர்வு, கலை, அறம் குறித்து யோசிக்கும்/போதிக்கும் ஆசிரியர்கள் யாரும் கிடையாது. மதிப்பெண் வாங்கி, நல்ல (?) கல்லூரிகளில் சேர்ந்து, நல்ல (?) நிறுவனத்தில் பெரும் சம்பளத்தில் சேர்ந்து, வெளிநாடு போய், சம்பாரித்து, இரண்டு படுக்கை வீடு வாங்கி, எங்கும் வெளியே செல்லாமல் குடித்து, இதே வட்டத்தில் மற்றொரு தலைமுறையை – மனித சக்கையை – உருவாக்கிச்சாகிறார்கள்.

ஒரு கண்டுபிடிப்பாளனாகவோ, தொழிலதிபனாகவோ, எழுத்தாளனாகவோ, தனித்த வெற்றியாளனாகவோ, ஏன் ஒரு முழு மனிதானாக ஆவதற்குக் கூட மேல்கண்ட முறைகள் உதவாது. அது இப்போது பிரச்சனையாகத் தெரியாது. இன்னும் பத்து வருடத்தில், சாரமற்ற ஒரு சமூகம் உருவாகி வரும்போது என்ன மாதிரியான விளைவுகள் ஏற்படும் என்று நினைக்கிறீர்கள்?

இவற்றை ஒப்புநோக்கும்போது, அரசுக் கல்வி நிறுவனங்கள் இப்படிப்பட்ட கொடுமைகளைச் செய்வதில்லை. அங்கிருந்துதான் சவால்களைச் சந்திக்கும் மனிதர்கள் உருவாகிறார்கள். அதே சமயம், மசனாபூ ஃபுகொஹா சொல்லிய இந்த விஷயம் குழந்தைகளை வளர்ப்பதில் உதவும் என்று தோன்றுகிறது. ஆரஞ்சு மரத்தை வெட்டாமல் அப்படியே விடுவதல்ல இயற்கை விவசாயம். கிளைகளை சீரமைக்க வேண்டும். ஆனால் இயற்கையின் ஒரு பங்காகச் செய்யவேண்டும். ஆனால் இப்போது பெற்றோர் உருவாக்குவது போன்சாய் மரங்களையே. ஒரு நல்ல வழிகாட்டியாக, பெற்றோராக நீங்கள் – ஒரு சரியான "மனிதனாகத்" தன் குழந்தையை உருவாக்க பெற்றோர் என்ன செய்யவேண்டும் என்று நினைக்கிறீர்கள்?

இந்தக் கேள்வி இந்த வலைத்தளத்தைப் படிக்கும் ஒவ்வொருவருக்கும் இருக்கும் என்றே நினைக்கிறேன்.

இப்படிப்பட்ட பள்ளிகளும், மனிதர்களும் மட்டுமே நம்பிக்கையை விதைக்கிறார்கள்.

நன்றி.

என்றும் அன்புடன்,
பா.சரவணன்

உதாரணங்களை மென்பொருள் பணியாளர்கள் சார்ந்து சொன்னது என் அனுபவத்தை விளக்க மட்டுமே. இந்தப் பிரச்சனை எல்லோருக்கும் பொதுவானதே.

அன்புள்ள பா சரவணன்,

கல்வி குறித்த நோக்கில் மேலைநாட்டினருக்கும் கீழைநாட்டினருக்கும் பெரிய வேறுபாடுகள் உள்ளன.இன்று பொதுவாக கீழைநாட்டினர் கல்வியைக் கடுமையான ஒரு பயிற்சி என்றே எடுத்துக்கொள்கின்றனர். நம்மைப்போலத்தான் சீனர்களும் என்று கேள்விப்பட்டிருக்கிறேன்.

இது ஏன் என்று பார்த்தால் எனக்குத்தெரியும் விடை இதுதான். நெடுங்காலமாக நம்மிடம் இருவகைக் கல்விகள் இருந்துள்ளன. ஒன்று

வாழ்க்கைத்தொழில் கல்வி. அதைப் பயிற்சி எனலாம். இன்னொன்று ஆளுமை மலர்வுக்கான கல்வி.

இங்கே பெரும்பாலான கல்வி முதல்வகையைச் சேர்ந்ததாகவே இருந்துள்ளது. சென்ற காலத்தைய ஒரு தச்சன் குழந்தை மூன்று வயதில் உளி எடுத்து மரத்தைச் செதுக்கச் செய்யப்படும். எட்டு வயதில் கொட்டுவடி கையில் இருக்கும். பதினெட்டு வயதில் தேர்ந்த ஆசாரியாக ஆகும். இதுதான் வேதபாடக் கல்விக்கும் வழக்கம்.

இந்தவகையான கல்வி, தொழில்சார்ந்த பயிற்சிகளுக்கு பெரிதும் உகந்ததாக இருந்தது. இது சார்ந்த ஒரு முன்னுதாரணமே நமக்குக் கல்வி என்றால் பொதுவாகக் கிடைக்கிறது. இன்று கோடீஸ்வரர்கள் கூடத் தங்கள் குழந்தைகளுக்கு அளிக்க நினைக்கும் கல்வி இதுதான்

இன்னொரு வகைக் கல்வி இருந்தது. அது குருவிடமிருந்து ஞானத்தைப்பெற்று அறிவிலும் ஆளுமையிலும் ஆன்மீகத்திலும் மலர்தல். அதுவே கலைகளுக்குரிய கல்வியாக இருக்கமுடியும். தத்துவத்திற்கும் இலக்கியத்திற்கும் உரிய கல்வியாக இருக்க முடியும்.

ஆனால் அந்தக் கல்வி அன்றும் மிகமிகச் சிறுபான்மையினருக்குரியதாகவே இருந்தது. அந்தக் கல்விக்காக உலகியல்சார்ந்த பிற அனைத்தையும் உதறிச் செல்லக்கூடிய சிலருக்கு மட்டுமே அளிக்கப்பட்டது அது. அதை சாதாரண மக்கள் அறிய மாட்டார்கள்.

ஆகவே நம் சாதாரண மக்களின் மனதில் இன்றும் கல்வி என்றால் முதல்வகையான கடும் பயிற்சியே இருக்கிறது. இங்கே பொறியியல் முதல் ஐஐம் வரை கற்கும் நம் இளைஞர்கள் அடைவது இந்தக்கல்வியைத்தான். இவர்கள் திறன் மிக்க உழைப்பாளிகளாக ஆகி உலகியல் வெற்றிகளை ஈட்டுவார்கள். அதுவே பெற்றோரின் கனவு.

உண்மையில் நம்முடைய இளைஞர்களில் லட்சத்தில் இருவர் தவிர மற்றவர்களும் இதே கனவைத்தானே கொண்டிருக்கிறார்கள். ஆகவே அந்தக்கல்வி அவர்களுக்கு அளிக்கப்படுவதுதானே முறை? அப்படி அளிக்கப்படாவிட்டால்தான் அவர்கள் பிற்காலத்தில் பெற்றோரைக் குறை சொல்வார்கள்.

நம் இளைஞர்களில் அனேகமாக அத்தனைபேருமே உலகியல் தளத்தில் நல்ல உழைப்பைக் கொடுக்கக்கூடிய இயந்திரங்கள்தான். அவர்களைக் கலைஞர்களும் சிந்தனையாளர்களுமாக ஆக்க முயல்வது வீண்.

எனக்கு என்ன தோன்றுகிறதென்றால் விதிவிலக்கான அந்த லட்சத்தில் இரண்டுபேருக்காக நாம் ஏன் ஒட்டுமொத்தக் கல்விமுறையை மாற்றவேண்டும் என்றுதான். அந்த இரண்டுபேரும் அவர்களைக் கட்டுப்படுத்தும் கல்விமுறையின் இரும்புத்தளைகளை முடிந்தால் மீறி வந்து கற்கட்டுமே. அப்படித்தானே நேற்று உலகியல் வெற்றிகளைத் துறந்து ஒரு குருவைப் பின் தொடர்ந்து சென்றார்கள்?

## (8) சோற்றுக்கல்வியும் சரியான கல்வியும்

அன்புள்ள ஜெயமோகன் அவர்களுக்கு வணக்கம்

பெற்றோரும் கல்வியும் கேள்வி-பதிலைப் படித்தேன். கல்விமுறைகளை இருவகைகளாக வேறுபடுத்தி ஆளுமை வளர்ச்சி சார்ந்த கல்வி முறை பற்றிப் பேசுகையில் அதை மேம்படுத்த வழிமுறை தருவீர்கள் என்று எதிர்பார்த்தால் ஏமாற்றம். லட்சத்தில் இருவர் என்ற விகிதத்தில்தான் கலை ஆளுமை சார்ந்த கல்வி தேவைப்படுகிறது; அதற்காகத் தற்போதைய கல்வி முறையை மாற்றவேண்டாம் என்ற விளக்கத்தில் எனக்கு உடன்பாடில்லை.

என்னைப் பொறுத்த மட்டில் கல்வியைத் தன்னிறைவுக்கான கல்வி, மனித வளர்ச்சிக்கான கல்வி என்று பிரிக்கலாம். தன்னிறைவுக்கான கல்வி வேலையையும் பணத்தை கொடுத்து அதன் மூலம் அடிப்படை தேவைகளைப் பூர்த்திசெய்ய உதவுகிறது. காலம் காலமாக தன்னிறைவு அடையாமல் போராடி வந்த நடுத்தர மற்றும் அடிமட்ட மக்களுக்கு, கடந்த 50 ஆண்டுகளில் கிடைத்த கல்வி வாய்ப்புகளால் 1st generation கல்வி கற்றோர் வளர்ந்துள்ளனர். இவர்களுடைய பார்வையில் கல்வி பணம் சம்பாதிக்க உதவும் ஒரு அந்தஸ்தைத் தரும் கருவி மட்டுமே. சமூகப் பார்வை, மனிதம், கலை பற்றி இவர்களுக்குக் கவலை இல்லை ( அவர்களின் வாழ்வியல் போராட்டம் அவர்களை ஒரு survival machine ஆகா மாற்றி உள்ளது). இந்த survival உணர்வுகள் ஒரு வகையில் அவர்களின் மரபணுக்களில் ஊறி விட்டதுபோல் தம் பிள்ளைகளையும் பணத்தைக் குறிக்கோளாய்க் கொள்ளும் பொருளாதார அடிமைகளாக மாற்றுகின்றனர். இதனால் வாழ்கையின் பயன் பணம் மட்டுமே என்ற தவறான புரிதல் வந்துவிடாதா?

லட்சத்தில் பெரும்பாலோர் உழைக்கப் பிறந்தவர்கள் மட்டுமே என்பது ஏற்புடையதல்ல. ஒரு முறை ஒரு அதிகாரியைக் காண அவர் அலுவலகத்துக்குச் சென்றிருந்தேன்; அறையில் அவர் இல்லை; அவரின் 6 வயது மகன் தாளில் வரைந்து கொண்டிருந்தான். சிறிது நேரம் கழித்து வந்த அதிகாரி 'என் இப்படித் தேவையில்லாமல் paper ல கிறுக்கிட்டு இருக்க... அதுக்கு பதில் 2 maths problem போடலாம்ல' என்று கண்டித்தார். இதுவே நிதர்சன உண்மை. ஒவ்வொரு குழந்தைக்கும் ஒரு சிறப்பம்சமும் திறமையும் உண்டு. பெரும்பாலான பெற்றோர்கள் அதைக் கண்டறிய முயல்வதில்லை.

சிறு வயதிலிருந்தே பொருளாதரத்துவ கல்வி முறைகளைத் திணித்து வருவதின் விளைவே இன்றைய இளைஞர்களின் தட்டையான சமூக புரிதல். தவறு கல்வி முறையில் இல்லை; அவை தன்னிறைவை அடைய விரும்பும் 1st generationகு ஏற்றதே. ஆனால் ஒரு பரம்பரை அடுத்த நிலைக்கு வளர – முழுமையான மனிதர்களாக ஒவ்வொருவரும் மலர பெற்றோர்களின் கல்வியின் மீதான பார்வை மாற வேண்டும். குறைந்தது தன்னிறைவை அடைந்த பெற்றோர்களாவது இதைச் செய்யவேண்டும்.

அன்புடன்
அருண்

அன்புள்ள அருண்

முந்தைய பதில்களிலும் உரைகளிலும் நான் உண்மையான கல்வியைப்பற்றி நீங்கள் இக்கடிதத்தில் சொல்லியிருப்பனவற்றை இன்னும் விரிவாகப் பேசியிருப்பதை நேரம் இருந்தால் வாசிக்கலாம். குறைந்தது முப்பது கட்டுரைகள் இந்தத் தளத்தில் உள்ளன. சென்ற கட்டுரையிலேயே இணைப்புகள் இருந்தன.

ஆளுமை உருவாக்கக் கல்வியே உண்மையான கல்வி என்பதிலும் அதுவே ஒரு தேசத்தை அறிவார்ந்த அடித்தளம் கொண்டதாக ஆக்குமென்பதிலும் எந்தவிதமான ஐயமும் இல்லை.

ஆனால் சிக்கல் அந்த உண்மையான கல்வியை ஆர்வமில்லாதவர்களுக்கு எவரும் மேலிருந்து செலுத்தமுடியாதென்பதே. அந்தக்கல்விக்கான நாட்டமும் அதற்கான மனநிலையும் சமூகத்தில் இருக்கவேண்டும். அது இல்லாத நிலையில் கல்விமுறைச்சீர்திருத்தத்தால் எந்தப் பயனும் இல்லை. அதுதான் இந்தியாவில் திரும்பத்திரும்ப நிரூபணமாகிறது.

இந்தியாவில் பல கல்விநிறுவனங்கள் உண்மையான ஆர்வமும் திறமையும் கொண்டவர்களைத் தேர்ந்தெடுப்பதற்காக விதவிதமான தேர்வு முறைகளை முன்வைக்கின்றன. அந்தக் கல்விநிறுவனங்கள் அளிக்கும் கல்விக்கு வணிக மதிப்பு உருவாகுமென்றால் உடனே அந்தத் தேர்வுமுறையை உக்கிரமான மனப்பாடப் பயிற்சிமூலம் வென்று கைப்பற்றுகிறார்கள். அதற்குள்

சென்றமர்ந்து மனப்பாடம் செய்து 99.9 சத மதிப்பெண் வென்று மண்ணாந்தைகளாக வெளியேறுகிறார்கள்.

இந்தியாபோன்ற பிரம்மாண்டமான மக்கள்தொகை கொண்ட தேசத்தில், தனிப்பட்ட நேர்மை மிகமிகக் குறைவாக இருக்கும் தேசத்தில் இந்தத் தேர்வை ஆசிரியர்களின் தனிப்பட்ட முடிவுக்கு விட முடியாது. இங்கே நேர்மையற்றவர் என்ற பெயரை எவரும் ஓர் அவமதிப்பாக நினைப்பதில்லை. குறிப்பாகப் பேராசிரியர்கள். ஆகவே புறவயமான தேர்வுமுறைகளை, அதற்கான அமைப்புகளை உருவாகவேண்டியிருக்கிறது. அந்த முறைகள் இம்மாதிரி 'பயிற்சி' பெற்றவர்களால் கைப்பற்றப்பட்டு அவற்றின் நோக்கம் அழிகிறது.

இதுதான் நிகழ்ந்துகொண்டிருக்கிறது. ஆகவே உண்மையான பண்பாட்டு மாற்றம் ஏற்படாமல் கல்விச்சீர்திருத்தமெல்லாம் நடக்கக்கூடிய விஷயமே அல்ல. அதாவது கல்விமுறை மாற்றம் மூலம் பண்பாட்டுமாற்றம் வராது, பண்பாட்டுமாற்றம் மூலம் மட்டுமே கல்விமுறை மாற்றம் வரமுடியும்.

அந்தப்பண்பாட்டுமாற்றம் எப்படி வரும்? நாம் பொருளியல்தன்னிறைவை ஓரளவேனும் அடையும்போது பொருளியல்தகுதி பெறுவதற்காக மட்டுமே கற்கும் மனநிலைமீது சலிப்பு உருவாகலாம். அதற்கும் அப்பால் தேடிச்செல்லும் ஒரு சிறு குழுவினர் உருவாகலாம். அவர்களின் வெற்றி முன்னுதாரணமாக அமையும்போது படிப்படியாக அந்த திசை நோக்கிச்செல்பவர்கள் அதிகரிக்கலாம்.

அதுவரை இன்றுபோல சோற்றுக்கல்விதான் இயல்பான பொதுவழியாக இருக்கமுடியும். அதுதான் நடைமுறைச்சாத்தியம்

# (9) ஆய்வும் மேற்கும்

திரு. ஜெயமோகன் அவர்களுக்கு:

சுப்ரியாவுக்கு நீங்கள் அளித்த பதிலில் "மேலைநாட்டுப் பல்கலை ஆய்வுலகம் காட்டும் ஜனநாயக முகமும் , புறவயமான அறிவியக்கம் மீதான பற்றும் போலியானது" என்று குறிப்பிட்டீர்கள். மேலும், "அமெரிக்காவிலோ ஐரோப்பாவிலோ சமூகவியல் சார்ந்த துறைகளில் ஆய்வு செய்பவர்கள்,செய்து மீண்டவர்கள் பெரும்பாலும் அனைவருமே இந்தக் கருத்தியல் மேலாதிக்கத்துக்கு தங்கள் மூளையை விற்ற அடிமைகள்தான்" என்றும் சொல்லியுள்ளீர்கள்.

அமெரிக்காவின் பல்கலைக்கழகங்களில், குறிப்பாகக் கலையின் வரலாற்றுத்துறையில் (History of Art) இந்தியக்கலைகள் குறித்து, இந்திய நாகரிகம் குறித்தும் பெருமதிப்பு கொண்டுள்ள பலரை நான் சந்தித்திருக்கிறேன். நான் அறிந்த வரையில் Orientalism வகுத்துள்ளபடி மேற்கத்திய மேலாதிக்கத்தோடு, இந்தியாவை இழிந்த நோக்கோடு காண்பவர்களாய் எனக்குப் புலப்படவில்லை.

முனைவர் பட்டம் பெற்ற என் அமெரிக்க மனைவியின் ஆராய்ச்சி வழிகாட்டி ஆதிகாலத்து இந்து, மற்றும் புத்த மத சிற்பங்களின் ஆய்வில் நாற்பதாண்டு காலங்களாய் ஈடுபடுபவர்; புத்தரின் சிற்பங்களை வடிக்க இந்தியர்கள் கிரேக்கர்கள் மூலமே கற்றறிந்தனர் எனும் மேற்கத்திய வாதத்தைத் தகர்த்தெறிந்தவர். மற்றொரு நண்பர் தர்மசாத்திரங்களையும், சைவ சித்தாந்தத்தையும் இருபது வருடங்களாய் ஆராய்பவர். என் மனைவியின், மதுரை மீனாட்சியம்மன் கோவிலையும், சிதம்பரத்தின் நடராஜர் கோவிலையும் எவ்வாறு திருமலை நாயக்கர் திருவிளையாடற்புராணம் துணை கொண்டு திறமையாக ஒருங்கிணைத்தார் என்பதான ஆய்வு இவ்வூர்ப் பல்கலைக்கழகத்தின் பாராட்டைப் பெற்றது.

இவ்வுதாரணங்களை நான் கொடுப்பது, இங்குள்ள பல்கலைக்கழகங்களில் பலர் இந்தியா, மற்றும் இந்தியக்கலாச்சாரம் குறித்தும் நடுநிலையோடு அணுகுகிறார்கள் என்பதுதான். கீழை நாடுகள் குறித்து மதிப்பேதும் இல்லா

ஆராய்ச்சியாளர்கள் கண்டிப்பாக இருக்கலாம், ஆனால் அவர்கள் பெரும்பான்மையில் இல்லை என்பது என் கருத்து.

மேலும் பல்கலைக்கழகங்களில் கிறித்துவ மதவாத சக்திகள் ஆதிக்கம் செலுத்துகின்றன என்பது குறித்து என்னால் உடன்பட முடியாது. அமெரிக்க பல்கலைகழகங்களில் நாத்திகர்களே அதிகம். பள்ளிகளிலும், கல்லூரிகளிலும் மதங்களுக்கு முக்கியத்துவம் இல்லாத காரணங்களினால் கிறித்துவ மதவாதிகள் தங்கள் பிள்ளைகளுக்கு “home-schooling” முறையில் கல்வி கற்பிக்கும் நிலையில் உள்ளனர்.

இங்கு குறிப்பிடவேண்டிய விஷயம் இந்தியாவை ஆராய்பவர்களிடம் இந்திய அரசு கொண்டுள்ள அணுகுமுறை. இந்தியா, மற்றும் அதன் கலாச்சாரம் பற்றிய ஆராய்ச்சிகளுக்கு நம் அரசு எந்த ஊக்கமும் அளிப்பதில்லை என்பது தான். சீன அரசு அமெரிக்கா முழுவதும் சீன மொழியைக் கற்பிப்பதற்காகப் பல கலாச்சார மையங்களை அமைத்துள்ளது. ஆனால் இங்கு தமிழையும், சமஸ்கிருதத்தையும் கற்பிக்கும் பணி கோயில்களாலேயே செய்யப்படுகின்றது, நம் அரசின் எவ்வொத்துழைப்பும் இல்லாமல்.

சீனப்பொருளாதார வளர்ச்சியினால் சீனக்கலைகள் குறித்தும், அதன் கலாச்சாரம் குறித்தும் மேலையில் உருவாகியுள்ள கவனம், சிறிது காலத்தில் இந்தியா குறித்தும் ஏற்படவேண்டும் என்பதே என் ஆவல்.

அன்புடன்,

கார்த்திகேயன் வாழ்க்குடை

அன்புள்ள கார்த்திகேயன்,

நான் ஒருபோதும் ஐரோப்பாவோ, அமெரிக்காவோ இந்தியப் பண்பாட்டை சாதகமாக நோக்கியதே இல்லை என்று சொல்லவில்லை. ஒரு கருத்தை எப்போதும் அதன் மறு எல்லைக்குக் கொண்டு செல்ல வேண்டம் என்று கோருகிறேன். இந்தியவியலில் பல முக்கியமான ஆய்வுகளைச் செய்த ஐரோப்பிய, அமெரிக்க அறிஞர்கள் உள்ளனர்.நானே அவர்களில் பலரை மேற்கோள் காட்டியும் வருகிறேன்.

நான் இந்திய மரபிலக்கியம்,வரலாறு, நாட்டுப்புறவியல் குறித்த ஐரோப்பிய, அமெரிக்க ஆய்வுகளைத் தொடர்ச்சியாகக் கவனித்து வருபவன்.நான் சொல்வது அவ்வகையில் நான் அடைந்த பொதுவான ஒரு புரிதல். இதற்கு விரிவான புள்ளி விவரங்கள் தேவை என்றால் சிலமாதங்கள் அவற்றைக் கணக்குப் போட வேண்டும். போட்டு எழுதினாலும் வேறு புள்ளிவிபரங்கள் கொடுத்து மறுத்து விடலாம்.

ஒருவருக்கு மேற்குலகம் எந்தவித அரசியலும் இல்லாத சமநிலையான அறிவியல் பூர்வமான பண்பாட்டாய்வுகளை மட்டுமே நிகழ்த்துகிறது என்ற நம்பிக்கை இருக்குமென்றால் அது மதநம்பிக்கை போன்றது. அதனுடன் விவாதிப்பதில் அர்த்தமே இல்லை.

மற்றபடி மேற்கு நம் மீது வைக்கும் முன்முடிவுள்ள பண்பாட்டு-வரலாற்று ஆய்வுகளை இரு தளங்களில் ஒரு வாசகன் அடையாளம் கண்டுகொண்டே செல்லலாம். தொடர்ச்சியாக இந்தியாவின் பண்பாட்டுத்தேசியம், தேசிய மையச்சரடு, பண்பாட்டு உரையாடல்மூலம் உருவான சமரசம் போன்றவற்றுக்கு எதிரான கருத்துக்கள் கொண்ட ஆய்வுகள்தான் வந்தபடியே இருக்கும்.

அவர்களின் நோக்கில் இந்தியா உக்கிரமான முரண்பாடுகள் மட்டுமே கொண்ட ஒரு நிலப்பரப்பு. இனமுரண்பாடுகள்,பண்பாட்டு முரண்பாடுகள். இந்தியாவின் கடந்த காலம் சுரண்டலால் ஆனது, அதன் பண்பாடு அந்தச் சுரண்டலின் விளைவு. இந்தியாவின் பண்பாடும் வரலாறும் தேக்கநிலை கொண்டவை. அந்தத் தேக்கநிலைக்கு இந்துமதமும் இந்துப்பண்பாடும் அடிப்படைக் காரணங்கள்.

நான் சற்று அப்பட்டமாக ஆக்கிச் சொல்கிறேன். பெரும்பாலான ஆய்வுகள் கடைசி முடிவாக சுற்றிச்சுற்றி இந்தப் பார்வையையே முன்வைக்கும். ஒவ்வொரு பகுதியிலும் இந்த மேனாட்டு ஆய்வுகள் முரண்பாடுகளை மட்டுமே கண்டு கொள்வதைக் காணலாம்

நான் சமீபத்தில் கண்டு மனச்சோர்வடைந்த விஷயத்தை இங்கே சொல்கிறேன். சமணத்துக்கும் இந்துமதத்துக்குமான முரண்பாட்டை ஒருவகை ரத்தக்களரியான போராட்டமாகவே அனேகமாக எல்லா ஐரோப்பிய அமெரிக்க ஆய்வுகளும் காட்டுகின்றன. மாறான ஆய்வு ஏதாவது வந்திருந்தால் எனக்குத் தகவல் கொடுங்கள்.

ஆனால் நடைமுறையில் சமணம் தொடர்ந்து இந்துமதத்துடன் குறிப்பாக வைணவத்துடன் ஓர் உரையாடலில்தான் இருந்துள்ளது. மெல்லமெல்ல வைணவத்தை சமணம் உள்ளிழுத்துக்கொண்டது. சமணத்தின் பல பண்பாட்டுக்கூறுகளை வைணவம் உள்ளிழுத்துக்கொண்டது. ஒரு கட்டத்தில் அவை இரட்டை மதங்களாகவே ஆயின. ஒருவர் ஒரே சமயம் தத்துவார்த்தமாக சமணராகவும், வழிபாட்டுரீதியாக வைணவராகவும் இருக்க முடியுமென்ற நிலை வந்தது.இன்றுகூட நாம் சமண ஆலயங்களில் இந்த இணைப்பைக் கண்கூடாகக் காணலாம். வைணவ தெய்வங்கள் இல்லாத சமண ஆலயங்களே இல்லை.

முரண்பாட்டை மட்டும் விரித்துரைக்கும் மேனாட்டு ஆய்வாளர்கள், இல்லாத முரண்பாடுகளைத் தேடி அலையும் அறிஞர்கள் இந்த உரையாடலையும், இணைப்பையும் கூடவே சொன்னால் என்ன என்பதுதான் எளிமையான வினா. ஆனால் இந்த வினாவை முன்வைக்கும் ஓர் இந்திய ஆய்வாளரை ஏளன நோக்கில் 'தேசியவாதி' என்று தள்ளி விட்டுச் சென்று விடுவார்கள்.

இன்னொரு உதாரணம். சமீபத்தில் அஜந்தா குகைகள் பற்றிய ஒரு வாசிப்பை மேற்கொண்டேன். மிச்சிகன் பல்கலை ஆய்வாளரான Walter M. Spink என்பவரின் ஆய்வுகள் சிக்கின. அவரது ஆய்வுகளை பௌத்தப் பண்பாடு மீதான கீழ்த்தரமான தாக்குதல்கள் என்றே நான் எடுத்துக்கொள்வேன். எந்தவகையான அறிவியல் நோக்கும் இல்லாத, வரலாற்றுப் பார்வையும் இல்லாத அதிரடிக் கருத்துக்கள் அவை.

ஸ்பிங்க் அஜந்தா குகைகளுக்கும் பௌத்த வழிபாட்டுக்கும் சம்பந்தமில்லை என்கிறார். அவை வணிகர்கள் தங்கிப் போவதற்காகக் கட்டப்பட்ட கேளிக்கை மையங்களாம். அந்த ஓவியங்கள் வணிகர்களின் மனமகிழ்ச்சிக்காக வரையப்பட்டவை. மன்னர்கள் அந்த குகைகளை வணிகர்களை குஜால்படுத்த செதுக்கிக் கொடுத்தார்களாம். மொத்தக் குகைகளும் வெறும் இருபதாண்டுக் காலத்தில் வாகாடகர் ஆட்சிக்காலத்தில் [கிபி 460 முதல் 480 வரை] செதுக்கப்பட்டவை என்கிறார்

அப்படிச் சொல்லக் கூடாதென்றில்லை, அது ஒரு தரப்பு. ஆனால் அந்தத் தரப்பு மேனாட்டுப் பல்கலைக்கழகங்களில் பெற்ற வரவேற்பு போல எரிச்சலூட்டுவது வேறில்லை. இன்று அஜந்தா பற்றிய எந்த மேனாட்டு ஆய்வேட்டிலும் ஸ்பிங்தான் முதன்மையாக மேற்கோள் காட்டப் படுகிறார்.

ஏன் விக்கிப்பீடியாவையே பாருங்கள், அஜந்தாவை உருவாக்கியவரே அவர்தான் என்ற வகையில் மேற்கோள் மழை தெரியும்

இந்தியாவின் சுவரோவிய மரபை அடிப்படையாகக் கொண்டு, அஜந்தாவின் சிலைகளையும் ஓவியங்களையும் அடிப்படையாகக் கொண்டு வால்ட்டர் ஸ்பிங்கின் கூற்றுக்களை முழுமையாக மறுத்திருக்கிறார்கள். இந்தியாவில் எங்கும் கேளிக்கைக்கூடங்களில் தெய்வச்சிலைகள் இருப்பதில்லை.அது அடிப்படையான இந்திய வாழ்க்கை நோக்குக்கே எதிரானது. அதைச்சொன்ன அனைவருமே தேசியவாதிகள் என எள்ளிப் புறமொதுக்கப்பட்டார்கள்.

வால்ட்டர் ஸ்பிங்க் வழியாகவே இனி உலகம் அஜந்தாவைப் பார்க்கும். பார்த்துக்கொண்டே இருங்கள் கால்நூற்றாண்டுக்குள் சர்வதேச ஆவணங்கள் அனைத்திலும் அவரது அரைவேக்காட்டுக்கருத்துக்களே பதிவாகியிருக்கும். இந்தியாவின் கூலி ஆய்வாளர்கள் எல்லாரும் அதைத்தான் மேற்கோள் காட்டுவார்கள்

நம் பண்பாட்டைப்பற்றி நம்மிடமே திரித்துச் சொல்லி அதைப்பரப்ப நம்மிடையே கூலிப்படையை உருவாக்குவதன் உண்மையான நோக்கம் என்ன என்பதே என்னுடைய கேள்வி. தேசியவாதி என்ற முத்திரைவழியாக இந்த ஏகாதிபத்தியவாதிகள் உருவாக்கும் இளக்காரம் பற்றியதே என் கேள்வி.

அந்த முத்திரைக்குக் கண்மூடித்தனமான நம்பிக்கை கொண்டவர், அறிவியல்ரீதியான நோக்கு இல்லாதவர் என்று பொருள். அந்த ஆய்வாளரின் ஆய்வுகள் அதன்பின் எங்குமே அதிகாரபூர்வமானதாகக் கருதப்படாது. என்னிடம் தனிப்பட்டமுறையில் இதைச்சொல்லிக் குமுறிய பத்து மூத்த ஆய்வாளர்களையாவது நான் அறிவேன்.

இந்த ஒட்டு மொத்தப்போக்கு ஆராய்ச்சிக்காகச் செல்லும் இளம் மாணவர்களை அடிமையாக்கி விடுகிறது. அதற்கு அடிமையானாலொழிய ஆய்வுக்கு அங்கீகாரம் கிடைக்காது என்ற கட்டாயம் சிலரை வீழ்த்துகிறது. பெரும்பாலானவர்கள் அதுதான் அறிவியல்ரீதியான அணுகுமுறை என்ற மாயைக்குள் சிக்கி மெல்லமெல்ல அதன் பிரச்சாரகர்களாக ஆகிவிடுகிறார்கள்

நான் கேட்பது பிரசுரமான ஆதாரங்களை. கைக்குச்சிக்கும் ஆய்வுகளை. எந்த ஒரு களத்தில் ஆராயப் புகுந்தாலும் என் கைக்குச்சிக்கும் ஆய்வுகளில் நூற்றுக்குத் தொண்ணூறு பங்கு இந்தியா பற்றியும் இந்து மதம் பற்றியும் எதிர்மறையான முன்முடிவுகளை மட்டுமே முன்வைப்பவையாக இருக்கும் யதார்த்தத்தைப்பற்றி நான் பேசுகிறேன். அதற்கு அங்கே ஒருவர் அப்படிச் சொல்கிறார், இங்கே ஒருவர் இப்படி எழுதியிருக்கிறார் என்பதல்ல பதில்.

இதை அமெரிக்க-ஐரோப்பியப் பல்கலைகள் அறியாமல் செய்கிறார்கள் என்று நம்ப நான் தயாராக இல்லை. அப்பல்கலைகள் செயல்படும் விதம் அனைவருக்கும் தெரிந்ததே. தொழில்நுட்ப ஆய்வு உட்பட அனைத்துத் தளங்களிலும் தனியார்நிதி சார்ந்தே ஆய்வுத்துறைகள் செயல்படுகின்றன. அந்த நிதிகளை அளிப்பவர் யார், ஏன் அளிக்கிறார்கள் என்று ஆராயும் ஒருவர் மிக எளிதில் அதன்பின்னுள்ள மத அரசியலையும் ஆதிக்க அரசியலையும் கண்டு கொள்ளலாம். கண்களை மூடிக்கொள்வது அவரவர் விருப்பம்

என்னளவில் நான் என்னுடைய தர்க்க புத்திக்கு நிறைவளிக்கும்படி இவ்விஷயங்களைத் தேடி ஆராய்ந்திருக்கிறேன். அமெரிக்க பண்பாட்டு மானுடவியலாளரான Cora Du Bois அமெரிக்க பல்கலைகளில் மானுடவியல் ஆய்வுகள் எப்படி திடீரென்று பெருகின, அதற்குப்பின்னால் இருந்த நிதியூட்ட அரசியல் என்ன என்பதைப்பற்றி எழுதிய விரிவான அறிக்கை ஒன்றை 1987ல் நான் மொழியாக்கம் செய்திருக்கிறேன். சுருக்கமாகத் தமிழிலும் பிரசுரமாகியிருக்கிறது.

என்வரையில் நான் எனக்கு உறுதியாகத் தெரியும் விஷயங்களையே சொல்கிறேன். இந்தியப்பண்பாடு, இந்துமதம் பற்றிய ஐரோப்பொ-அமெரிக்கப் பல்கலை நோக்குகளை, அவர்களின் நிதி பெற்று அவற்றை அங்கே விழுங்கி அப்படியே இங்கே கக்கும் நம்மூர்க்காரர்களைக் கொஞ்சம் கவனிக்கும் எவருக்கும் கண்ணெதிரே பாறைபோல நிற்கும் இந்த உண்மை தெரியவரும்.

வேண்டுமென்றால் நீங்கள் இந்தியாவில் ஆங்கிலத்திலும் தமிழிலும் எழுதிக்கொண்டிருக்கும் மேனாட்டுப்பல்கலைகளின் தொடர்புள்ள ஆய்வாளர்கள் என்று ஒரு நூறுபேரை எடுத்துக்கொள்ளுங்கள். அத்தனைபேரும் கிட்டத்தட்ட அரசியல்கட்சியின் தொண்டர்களைப்போல ஒரேகுரலில் பேசக்கூடியவர்கள்.

அத்தனைபேரும் சுதந்திரமாக ஆய்வுசெய்து அந்த ஒரேகுரலை அடைந்திருக்கிறார்கள், காரணம் அவர்கள் சொல்வது புறவயமான கல்தூண்போன்ற உண்மை என்று சொல்லமாட்டீர்கள் என நினைக்கிறேன்.

# (10) கல்விக் களைகள்

இன்று காலை [12-5-2014] தினத்தந்தியில் ஒரு செய்தியை வாசித்தேன். பின்னணி இதுதான். தமிழகத்தில குமரிமாவட்டத்துக்கும் நெல்லைக்கும் கல்வியில் முதன்மையான இடம் இருந்த ஒரு காலகட்டம் இருந்தது. சென்ற பலவருடங்களாக அதில் சீரான சரிவு உள்ளது. அதற்கு முதன்மைக்காரணமாக இருப்பது புகழ்பெற்ற கிறித்தவக் கல்விநிறுவனங்களின் தரவீழ்ச்சி. உள்ளரசியல், ஆசிரியர் நியமன ஊழல் ஆகியவற்றால் அவை சீரழிந்துகொண்டிருக்கின்றன.

இன்னொரு பக்கம் இங்குள்ள வீரியம்மிக்க தொழிற்சங்க அரசியலின் பாதுகாப்பு காரணமாகவும் உபதொழில்களில் ஈடுபடுவதற்கான வாய்ப்புகள் காரணமாகவும் நம்பமுடியாத அளவுக்கு பணவரவுள்ள டியூஷன் கொள்ளை காரணமாகவும் அரசுப்பள்ளி ஆசிரியர்கள் அனேகமாக எதையுமே கற்பிப்பதில்லை என்பது. [விதிவிலக்காக மிகுந்த அர்ப்பண உணர்வுடன் செயல்படும் பல பள்ளி ஆசிரியர்களையும் நான் நன்கறிவேன். அவர்களின் சேவை பற்றிய மதிப்பை பலமுறை பதிவும் செய்திருக்கிறேன்]

குமரிமாவட்டத்தில் அரசுக்கல்வியின் தரத்தை மேம்படுத்த தொடர்ச்சியாக சில உண்மையான முயற்சிகளை ஆட்சியர் நாகராஜன் மற்று முதன்மைக்கல்வி அதிகாரி ராதாகிருஷ்ணன் ஆகியோர் செய்துவருகிறார்கள். ஆசிரியர்களை கடுமையாகக் கண்காணித்து முழுமையாக வகுப்புக்கு வரச்செய்வதுதான் முதல் பணியாக எடுத்துக்கொள்ளப்பட்டது. குமரிமாவட்ட மாணவர்கள் இயல்பாகவே படிக்கும் மனநிலை கொண்டவர்கள். குடும்பச்சூழல்களும் படிப்புக்கு சாதகமானவை.

அம்முயற்சிக்கான விளைவுகளும் ஓரளவு கைகூடியது. 2011-12 ஆம் வருடத்தில் மாநில அளவில் பத்தாம் வகுப்புத்தேர்வில் ஐந்தாவது இடத்திலிருந்த குமரிமாவட்டம் 2012-13 ஆம் வருடத்தில் முதலிடத்தை பிடிக்க முடிந்தது. பிளஸ் டூ தேர்வில் 2011-12 ஆம் ஆண்டு 13 ஆவது இடத்தில் இருந்த குமரிமாவட்டம் 2012-13 ஆம் வருடத்தில் ஆறாவது இடத்தைப்பிடித்தது. இன்றைய சூழலில் அதிகாரிகள் இப்படி தனிப்பட்ட முயற்சிகளை எடுத்துக்கொண்டு பொதுநலம் கருதி செயல்படுவது மிகமிக அபூர்வம்.

சென்ற வருடம் இதைப்பற்றிய பாராட்டுக்கள் இங்கே நிலவியதைக் கேட்டேன். அரசுப்பள்ளிகளில் சேர்க்கும் ஆர்வமும் ஓரளவு உருவாகியது.

ஆனால் இந்த வருடம் தொடக்கம்முதல் ‘அதிகாரிகளின் கொடுங்கோன்மை’க்கு எதிரான ஆசிரியர் சங்கங்களின் முழக்கங்கள் எழத் தொடங்கின. துண்டுப்பிரசுரங்களும் சுவரொட்டிகளும் கண்ணுக்குப்பட்டன. விளைவு இந்தத் தேர்வுமுடிவுகளில் வந்தது. பிளஸ்டூ தேர்வில் குமரிமாவட்டம் ஆறாவது இடத்திலேயே இருந்தது. மாவட்டம் முழுக்க கல்வியதிகாரிகள் தனிக்கவனம் எடுத்துக்கொண்டு நடத்திய சிறப்பு வகுப்புகள், தனிப்பயிற்சிகள் எவையும் பயன் தரவில்லை.

என்ன காரணமென்று நோக்கி பணியில் கவனமில்லாமலிருந்த மூன்று தலைமை ஆசிரியர்கள் மேல் நடவடிக்கை எடுக்கப்பட்டுள்ளது. முறையாகப் பணியாற்றாத இரணியல் அரசு மேல்நிலைப்பள்ளி தலைமை ஆசிரியர் லீலாவதி பணியிடைநீக்கம் செய்யப்பட்டார். படந்தாலுமூடு மேல்நிலைப்பள்ளி தலைமை ஆசிரியர் கிருஷ்ணதாஸ், பளுகல் தலைமை ஆசிரியர் சசிதரன் ஆகியோர் பணியில் இருந்து விடுவிக்கப்பட்டார்கள். தொடர்ந்து விடுப்பில் இருந்தும் வகுப்புகளை முறையாக நடத்தாமலும் இருந்த 12 பேர் மீது நடவடிக்கை எடுக்கப்பட்டது. இப்பள்ளிகளில் ஆசிரியர் பணியிடங்கள் முழுமையாக நிரப்பப்பட்டு அனைத்து வசதிகளும் செய்யப்பட்டிருக்கின்றன.

இதற்கு எதிர்வினையாற்றிய தமிழ்நாடு முதுநிலைப் பட்டதாரி ஆசிரியர் கழக மாநிலப்பொருளாளர் வள்ளிவேலு இந்த நடவடிக்கையைக் கண்டித்து அரசுக்கு எச்சரிkகை விடுத்துள்ளார். அவரது அறச்சீற்றம் இரு அடிப்படைகளில். ஒன்று இப்படி ஒரு நடவடிக்கை பிற மாவட்டங்களில் நடக்கவில்லை. இரண்டு இப்படி நடவடிக்கை எடுக்க மாநில அரசின் கல்வித்துறை ஆணையிடவில்லை. ஆகவே உடனடியாக நடவடிக்கைகளை திரும்பப்பெறாவிட்டால் போராடுவார்கள்!

அடுத்தநாள் [14- 5-உ014] மாவட்டக் கல்வியலுவலரை முற்றுகையிடும் போராட்டம் நடந்திருக்கிறது. மாவட்ட கல்வியலுவலர் மீது ‘கடுமையான நடவடிக்கை’ தேவை என்று ஆட்சியரிடம் மனுவும் கொடுக்கப்பட்டிருக்கிறதுஆசிரியர் சங்கங்கள் கூட்டமைப்பு ஆசிரியர்

கழகம், தொழிற்கல்வி ஆசிரியர் சங்கம் ஆகியவற்றை சேர்ந்த நிர்வாகிகள் அமைச்சர் பச்சைமாலை நாகர்கோவிலில் உள்ள அவரது இல்லத்தில் சந்தித்து முறையிட்டனர் என்கிறது செய்தி.

அரசுப்பணியின் சீரழிவுகளுக்கு முக்கியமான காரணமே அங்கே பொறுப்பேற்பதென்பதே இல்லை என்பதுதான். ஒரு பொறியாளர் மிகச்சிறப்பானது என பரிந்துரைத்த பாலம் இடிந்துவிழுந்தால் அந்தப் பொறியாளர் அதில் பொறுப்பேற்கவேண்டியதில்லை. சாலைகள் ஆறே வாரத்தில் மழையில் கரைந்துபோனால் மழையைத்தவிர எந்த சக்திக்கும் அதில் பொறுப்பில்லை. அரசின் முக்கியமான கோப்புகளே காணாமலாகின்றன, எவரும் பொறுப்பல்ல.

அரசு செயல்படும் விதத்தில் இந்த பொறுப்பேற்காத தன்மை மெல்லமெல்ல உருவாக்கப்பட்டுள்ளது. ஒன்று அத்தனை செயல்பாடுகளுக்கும் கூட்டுப்பொறுப்பு இருக்கும். ஒரு அதிகாரி கையெழுத்திடுவதென்றால் பத்துபேர் அதில் பரிந்துரை, வழிப்படுத்தல், நெறிப்படுத்தல் கையெழுத்துக்கள் போட்டிருப்பார்கள். கூட்டுப்பொறுப்பு என்பதற்கு எவருக்கும் அதில் தனிப்பொறுப்பில்லை என்றே நடைமுறையில் பொருள். பெரிய அளவில் ஊடகங்கள் மூலம் சிக்கல் எழுமென்றால் [கும்பகோணம் பள்ளி விபத்து போல] கடைசிநிலையில் பொறுப்பேற்றுக்கொண்ட ஒருவர் ஒப்புக்கு தண்டிக்கப்பட்டு, சிலநாட்களில் அந்தத் தண்டனையும் ரத்துசெய்யப்படும்.

இன்னொன்று ஊழியர்சங்கங்கள். அவை ஊழியர்களுக்கான வழக்கறிஞர்கள் சபைகள்தான். ஊழியர்களின் பிழைகளை அவர்களிடம் பேசவே முடியாது. அவர்களால் ஊழியர்களை கட்டுப்படுத்தவும் வழிநடத்தவும் முடியாது. தமிழ்நாடு முதுநிலைப் பட்டதாரி ஆசிரியர் கழகத்திடம் அதன் ஊழியர்களின் பணிப்பிழைகளை அல்லது பொறுப்பின்மைகளைப்பற்றி சொல்லமுடியுமா? அது எங்கள் வேலை இல்லை என்பார்கள். ஆனால் அந்த ஊழியர்கள் எளியமுறையில் தண்டிக்கப்பட்டால், ஏன் எச்சரிக்கப்பட்டால்கூட போராடக்கிளம்பி வருவார்கள். பணிகளை உறையச்செய்வார்கள்.

ஊழியர்கள் அளிக்கும் மாதாந்தர கப்பம் என்பது இச்சேவைக்கான கூலிதான். சங்கத்தலைவர்கள் ஒருவகை குற்றவியல் வழக்கறிஞர்கள் மட்டுமே. சங்கத்துக்கு வலுவான அரசியல்பின்னணியும்

இருக்குமென்பதனால் அதிகாரிகள் அதை அஞ்சுவார்கள். பல சங்கங்கள் 'புரட்சிகரமானவை'யும் கூட!

மிக அபூர்வமாகவே தமிழகத்தில் ஏதேனும் பிழைகளுக்காக அரசூழியர்கள் தண்டிக்கப்படுகிறார்கள். பணிக்குப் பொறுப்பேற்கும்படி கோரப்படுகிறார்கள். அந்நடவடிக்கைகள் உடனடியாக சங்கங்களால் தோற்கடிக்கப்படுகின்றன. ஆசாரிப்பள்ளம் மருத்துவமனை ஊழியர்களின் பொறுப்பற்ற செயலால் நோயாளிகள் பாதிக்கப்படும்போதெல்லாம் உடனடியாக இரண்டு விஷயங்கள் நிகழும். 'அப்பாவி' ஊழியர்களை பழிவாங்காதே என சங்கம் கொடிபிடிக்கும். மிகச்சிலநாட்களிலேயே 'மக்கள் விரோத அதிகாரிகளை வேலைநீக்கம் செய்' என இன்னொரு போராட்டத்தை அச்சங்கங்களை உள்ளிட்ட கட்சிகள் முன்னெடுக்கும்.

பள்ளி ஆசிரியர்களில் பலர் எப்படிச் செயல்படுகிறார்கள் என நான் அறிவேன். என் மகன் எஸ்.எல்.பி பள்ளியில் பிளஸ் டூ படிக்கையில் வீட்டில் வந்து கண்ணீர்விடுவான். 'எனக்கு டியூஷன் இருக்கு அப்பா. ஆனா எங்கூட படிக்கிற பையங்க காலையிலயும் சாயங்காலமும் கூலிவேலைக்கு போயிட்டு பள்ளிக்கு வாறவங்க. எங்கிட்ட டியூஷனுக்கு வா சொல்லித்தாறேன். இங்க சொல்லித்தரமுடியாது. எங்க வேணுமானாலும் போயிச் சொல்லுன்னு முதல் நாளே பாதி டீச்சர்ஸ் கிளாஸிலே சொல்லிட்டாங்க. பையங்க அழுறாங்க. டேய் கொஞ்சம் மத்தியான்னம் சொல்லிக்குடுடா. எப்டியாவது பிளஸ்டூ பாஸாயிடுறேண்டா. இல்லேன்னா லைஃபே இல்லடான்னு கெஞ்சறாங்க. எனக்கே பெரிசா ஒண்ணும் தெரியாதுப்பா. என்ன செய்றது?' என்பான்.

ஈரோட்டுப்பக்கம் பழங்குடியினருக்கான உண்டு-உறைவிடப்பள்ளிகளில் பெரும்பாலும் ஆசிரியர்கள் செல்வதே இல்லை என்பதை அங்கே பயணம்செய்யும்போது நண்பர்களுடன் சென்று பார்த்திருக்கிறேன். ஈரோட்டிலேயே இருந்துகொண்டு மாதம் ஒருமுறை சென்று வருவார்கள். சத்துணவு சமைப்பவர்கள்தான் ஆசிரியர்பணியும் செய்கிறார்கள். [விதிவிலக்காக ஒருவரை பார்த்தேன். தன் சம்பளத்தையும் மாணவர்களுக்காக செலவழிப்பவர்] பள்ளிக்கு வராத ஆசிரியை 'எப்டி சார் வரமுடியும்? எனக்கு ஹஸ்பெண்ட் குழந்தைகள்லாம் இருக்குல்ல? என் கடமையை நான் செய்யவேண்டாமா?' என்று கண்ணீர் மல்க கேட்டதாகச் சொன்னார்கள்.

[தமிழகக் கல்வித்துறையில் உள்ள ஆசிரியைகளில் சற்றேனும் பாடம் நடத்துபவர்கள் அரை சதவீதம் இருந்தாலே ஆச்சரியம். திருமணமாகி குழந்தை பெற்றதுமே வேலையை ஒப்பேற்றிவிட்டு வீடுதிரும்புதல், முடிந்தவரை விடுப்பு எடுத்தல்தான் அவர்களின் வழிமுறையாக இருக்கிறது. சமூகம் என்ற ஒன்று இருக்கும் தகவலே அவர்களுக்குத் தெரியாது என்னும்போது என்ன சமூகப்பொறுப்பு? மேலும் அடிப்படை அறவுணர்ச்சி கொண்ட படித்த பெண்கள் இங்கே வைரங்களுக்குச் சமம். எங்காவது தோண்டித்தான் எடுக்கவேண்டும். தனக்காகவும் தன் குடும்பத்துக்காகவும் கோயில்சொத்தை கொள்ளையடிக்கவும் தயங்காத குடும்பவிளக்குகளே பெரும்பான்மை. இதை பலநூறு முறை நேரில் கண்டு திகைத்திருக்கிறேன்]

இச்சூழலில் மிக அபூர்வமாக நடக்கும் ஒரு செயல் அதிகாரிகள் பொறுப்பேற்றுக்கொள்வது. அதற்கு எதிராக இருப்பவர்கள் 'ஒருங்குதிரண்ட உழைப்பாளி வர்க்கமான' ஊழியர்கள். அவர்களுக்கு ஆயிரம் நியாயங்கள் இருக்கலாம். அவர்கள் ஊழியர்களுக்கு 'சேவை' ஆற்றவில்லை என்றால் அவர்கள் வேறுபக்கம் சென்றுவிடுவார்கள். ஆனால் அந்த கூலிச்சேவையை மக்கள் நலன் கருதி செய்வதாகச் சொல்வதைத்தான் தாங்கமுடியவில்லை.

இவ்வருடம் அரசுப்பள்ளி ஆசிரியர்களுக்கான தகுதித்தேர்வு ஒன்றை அரசு நிகழ்த்தியது. இந்தியாவின் தலைநகரம் எது? ஒன்றும் பத்தும் கூட்டினால் என்ன விடை வரும்?– தரத்திலான வினாக்கள். சாலையில் மூட்டைதூக்குபவர்கள் எழுதினால் முக்கால்வாசிப்பேர் ஜெயிப்பார்கள். ஆனால் ஆசிரியர்களில் பெரும்பாலானவர்கள் படுதோல்வி அடைந்தனர். தேர்வின் தரத்தைக் குறைக்கவேண்டும் என்று போராடி தரம் மேலும் அடிமட்டத்துக்கு குறைக்கப்பட்டது. இந்தியாவின் தலைநகரம் டெல்லி அல்லவா – அளவுக்கு.

அதிலும் பாதிப்பேர் தோல்வி. மேலும் தரத்தைக் குறைக்க நீதிமன்றம் சென்றனர். தரமே இல்லாமல் தேர்வு நடந்து அவர்கள் எல்லாரும் வென்றனர். பணி உறுதியும் பெற்றனர். பதிலே எழுதவேண்டாம் தாளை அரைமணிநேரம் முறைத்துப்பார்த்தாலே போதும் என்ற அளவுக்கு தரம் குறைக்கப்பட்டிருக்குமென ஊகிக்கலாம்.

இவர்கள் கடைசியாக எதையாவது எழுத்துக்கூட்டி வாசித்ததே வேலை கிடைத்த அன்றுதான் என நினைக்கிறேன். தினத்தந்தியைக்கூட நம் ஆரம்பப்பள்ளி ஆசிரியர்கள் வாசிக்க முடியவில்லை என்கிறார்கள்

இத்துறையில் சேவை செய்பவர்கள். ஈவிரக்கமில்லாமல் இந்தக்கும்பலை வேலைநீக்கம் செய்துவிட்டு தகுதியுடையவர்களை வேலைக்கு எடுத்திருக்கவேண்டும். இன்று இவர்களின் ஊதியம் கணிப்பொறி நிபுணர் ஒருவர் வாங்கும் தொடக்கச்சம்பளத்துக்கு நிகர். தகுதியானவர்கள் வரிசைகட்டி நின்றிருப்பார்கள்.

ஆனால் செய்யவில்லை. காரணம், ஒன்று முக்கால்வாசிப்பேர் அரசியல்வாதிக்கு லஞ்சம்கொடுத்து பணிக்குச்சேர்ந்தவர்கள். இரண்டு, இதனால் எதிர்காலம் பாழாகிறவர்கள் பணம்கட்டி தனியார் பள்ளியில் படிக்கமுடியாத ஏழைக்குழந்தைகள்தான். அறிவுஜீவிகள் அதைப்பற்றி பேசவேண்டிய தேவை இல்லை.

# (11) வயதடைதல்

சிலசமயம் நாட்டுப்புறப்பாடல்களில் சில அற்புதங்கள் கண்ணுக்குப்படும். எப்படி என்றால் மற்ற எல்லாக் கலைகளும் மாறிக்கொண்டே இருக்கும். நாட்டுப்புறப்பாடல்களை மாற்றமாட்டார்கள். அவை காட்டுக்குள் ஆலமரத்தின் அடியில் இருக்கும் புராதன தெய்வங்கள் போல அப்படியே யாரும் கவனிக்காமல் அமர்ந்திருக்கும். திடீரென நாம் கவனிக்கும்போது நமக்கு இது என்ன என்ற அதிர்ச்சியும் பரபரப்பும் ஏற்படும்.

இந்தப் பாடல் வரி அப்படி என்னை கவர்ந்தது. நான் சாதாரணமாக அந்த வழியாகப் பேருந்திலே சென்றுகொண்டிருந்தேன். ஒலிபெருக்கிவழியாக ஏதோ பெரியவர் பாடிக்கொண்டிருந்தார். நல்ல கனமான காட்டான்குரல். ஒரு வரி காதில் விழுந்தது –

ரெண்டு துறவறமும் லெச்சணமாய் இல்லறமும்
பண்டு சொன்னவிதம் பாங்காக முடிச்சானே

தெக்கன்பாடல்கள் என்று சொல்லப்படும் நாட்டார்பாடல்களில் ஒன்றான புலைமாடசாமி பாடல் எனப் பிறகு தெரிந்துகொண்டேன். புலைமாடசாமியின் அப்பா முத்துப்பட்டனின் வாழ்க்கைக்கதை. அந்த வரியின் அர்த்தம் என்ன? ஒரு வாழ்க்கையில் இரண்டு துறவும் இல்லறமும் இருக்கவேண்டும் என்று பழங்காலத்தில் இருந்தே சொல்லப்பட்டமுறையின்படி வாழ்ந்து தன்னுடைய பிறவியை நிறைவடையச் செய்தார் என்கிறது பாடல்.

என்னபொருள் அதற்கு? ஒரு வாழ்க்கையிலே எது இரண்டு துறவு? நான் அதைப் புராணமும் சாஸ்திரமும் படித்த சிலரிடம் கேட்டுப்பார்த்தேன். யாருக்கும் சொல்லத்தெரியவில்லை. நாலைந்துவருடம் கழித்து அதேபோல நாட்டுப்புறக் கதைப்பாடல் பாடும் பெரியவர் எனக்கு விளக்கம் அளித்தார்.

பண்டைய இந்திய மரபில் உலகியலில் ஈடுபடும் ஒரு மனிதனின் வாழ்க்கையை பிரம்மசரியம், கிரஹஸ்தம், வானப்பிரஸ்தம் என மூன்று கட்டங்களாகப் பிரித்திருந்தார்கள். அதாவது கல்விப்பருவம்,

இல்லறப்பருவம், துறவுப்பருவம். இதைத்தவிர சன்னியாசம் என்று ஒரு பருவம் உண்டு. அது உலகியலைத் துறந்து செல்பவர்களுக்கு உரியது. இவை நான்கு ஆசிரமங்கள் என்று சொல்லப்பட்டன.

எந்த ஒரு மனிதனும் இந்த மூன்று கட்டங்கள் வழியாகக் கடந்து சென்றால்தான் அவன் வாழ்க்கை முழுமை அடையும் என்று விஷ்ணுபுராணம் மூன்றாம் பருவம் ஒன்பதாம் அத்தியாயத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. பழைய ஆசாரங்கள் என்று தள்ளிவிடாமல் இன்றைய நவீன சிந்தனையைக் கொண்டு இந்தக் கட்டங்களை நாம் அறிவுபூர்வமாக ஆராய்ந்து பார்த்தால் வாழ்க்கையைப்பற்றிய ஆச்சரியமான ஒரு தெளிவு இதில் இருப்பதைக் காணமுடியும்.

முக்கியமான விஷயம் குழந்தைப்பருவத்தை வாழ்க்கையின் ஒரு காலகட்டமாக இந்துமரபு நினைக்கவில்லை என்பதுதான். ஏனென்றால் எல்லாக் குழந்தைப்பருவமும் ஒன்றுதான். மகிழ்ச்சியாக விளையாடி வாழவேண்டிய பருவம் அது. சொந்தமாக எந்த முடிவும் எடுக்கவேண்டியதில்லை. குழந்தை செய்யும் எந்த விஷயத்துக்கும் அது பொறுப்பல்ல. ஆகவே அதை நம் வாழ்க்கையின் தொடக்கமாகக் கொள்ளவேண்டியதில்லை.

இன்றைய நிலையை வைத்து யோசித்துப்பார்த்தால் இதிலுள்ள நுட்பமான அனுபவ உண்மை நமக்குப் புரியவரும். ஒரு குழந்தைக்கு எந்தவகையான வாழ்க்கைச் சுமையையும் ஏற்றக்கூடாது. அதாவது ஒரு புரோகிதன் தன் குழந்தையை எதிர்காலப் புரோகிதனாக நினைத்துப் புரோகித வாழ்க்கைக்குள் கொண்டு வரக்கூடாது. ஒரு சிற்பி தன் குழந்தையை சிற்பவேலைக்குள் கொண்டுவரக்கூடாது. குழந்தைக்கு உலகவாழ்க்கையில் உள்ள எந்தப் பொறுப்பும் தெரியக்கூடாது. அப்போதுதான் உண்மையான குழந்தைப்பருவம் அதற்கு இருக்கும்.

நண்பர்களே, இன்றைய வாழ்க்கையை கவனித்துப்பாருங்கள். இரண்டு வயதில் பிரிகேஜி வகுப்பில் சேரப்போகும் குழந்தைக்குப் போட்டித்தேர்வு வைக்கிறார்கள். அதற்கு அந்தக் குழந்தையை ஒருவயதில் இருந்தே பழக்குகிறார்கள். குழந்தைப்பருவமே அதற்குக் கிடையாது. பிறந்து வெளியே வந்து மருத்துவச்சி குழந்தையைத் தன் கையில் எடுத்து அம்மாவுக்குக் காட்டியதுமே அம்மா முடிவுசெய்துவிடுகிறாள் – இந்தக்குழந்தை ஐஐடியில் படிக்கவேண்டும் என்று. தட்டாரப்பூச்சியின்

வாலில் கல்லைக்கட்டி விடுவதுபோலக் குழந்தைகளிடம் வாழ்க்கையை சுமத்தி விடுகிறார்கள்.

நிகழ்காலமே ஆரம்பிக்காத குழந்தைகளுக்கு எதிர்கால பயத்தை ஊட்டிவிடுகிறார்கள். ஒரு அம்மா பையனிடம் சொல்வதைப் பார்த்தேன். 'இப்டியே வெளையாட்டுத்தனமா இரு... குட்டிச்சுவராப்போயி ஓட்டலிலே தட்டுதான் எடுப்பே' குழந்தைக்கு வயது இரண்டு. அது மகிழ்ச்சியுடன் 'எவ்ளோ பெரிய தட்டு?' என்று கேட்டது. 'போ சனியனே' என்று ஓர் அறை வைத்தாள் அம்மா. இதை ரயிலிலே பார்த்தேன். ரயில்பயணத்தில்கூட குழந்தையை அந்த ரயில்பயணத்தைப் பார்க்கவிடாமல் வீட்டுக்கணக்கு செய்யவைத்துக்கொண்டிருந்தாள்.

புராணமரபைப் பொறுத்தவரை ஒருவன் வாழ்க்கையை ஆரம்பிப்பதே அவனுடைய உபநயனம் நடந்த நாள்முதல்தான். அதற்குப்பின்னர்தான் அவன் தனிமனிதன். அதற்குப்பின்னர்தான் அவனுக்கு வாழ்க்கையில் பொறுப்பும் கடமைகளும் வருகின்றன. அதற்குப்பிறகுதான் அவன் தன் வாழ்க்கையில் என்ன செய்யவேண்டும், எதுவாக ஆகவேண்டும் என்பது தீர்மானமாகிறது.

உபநயனம் என்றதும் நாம் பிராமணர்கள் பூணூல் போடுவதை எண்ணிக்கொள்கிறோம். பழங்காலத்தில் ஏதாவது ஒன்றை முறைப்படி கற்றுக்கொள்ளும் எல்லாருமே பூணூல் போட்டார்கள். நான் சின்னப்பையனாக இருக்கும்போது பொற்கொல்லர்களும் தச்சர்களும் சிற்பிகளும் பூணூல் போட்டிருப்பதைப் பார்த்திருக்கிறேன். உபநயனம் என்றால் 'இதோ ஒரு கல்வியைக் கற்றுக்கொள்ளப்போகிறேன்' என்று ஒரு உறுதிமொழியை எடுத்துக்கொள்ளும் அடையாளம்தான். இன்றைக்கு பிராமணர்கள் மட்டும் பூணூல் போடுகிறார்கள். அதுவும் வெறும் சடங்காகப் போடுகிறார்கள். இன்னும் சொல்லப்போனால் திருமணம் நடப்பதற்கு முந்தையநாள் உபநயனம் செய்து பூணூல் போட்டுக்கொள்கிறார்கள்.

உபநயனம் எல்லாக் கல்விக்கும் உண்டு. கல்வி பல வகையாக இருந்தது. வேதம் கற்பது ஒரு கல்வி என்றால் மருத்துவம் கற்பது இன்னொரு கல்வி. சிற்பம் கற்பது இன்னொரு கல்வி. ஒரு குழந்தையை அது எந்தத் துறையில் கல்வி கற்கவேண்டுமோ அந்தத் துறையில் சேர்த்து விடுவது உபநயனம் மூலம்தான். இது எட்டு முதல் பன்னிரண்டு வயதுக்கு மேல்தான்

செய்யவேண்டும். அதுவரை பிள்ளைகளை சும்மா அப்படியே விளையாட விட்டுவிடவேண்டும். இதுதான் சாஸ்திரம்.

வேடிக்கையாக இருக்கிறது இல்லையா? ஆனால் உலகம் முழுக்க இந்த வழக்கம் இருந்தது. ஆப்ரிக்காவில் உள்ள மாஸாய் [Maasai] பழங்குடிகளைப்பற்றி வாசித்துக் கொண்டிருந்தேன். உலகத்திலேயே மாஸாய் பழங்குடிகளைப் போல அந்த அளவுக்கு சந்தோஷமான குழந்தைகள் வேறு எங்குமே கிடையாது. பன்னிரண்டு வயது வரை மாஸாய் ஆண்குழந்தைகள் எந்த வேலையும் செய்யவேண்டியதில்லை. எந்தக் கல்வியும் கற்கவேண்டியதில்லை. எந்தப் பொறுப்பும் சுமக்கவேண்டியதில்லை. பெண்கள் ஒன்பது வயதுவரை அப்படி இருக்கலாம்.

ஆமாம், தூங்கி விழித்ததுமுதல் இரவுவரை பிடித்ததுபோல விளையாடிக்கொண்டே இருக்கவேண்டியதுதான். மாஸாய் குழந்தைக்கு சொந்த வீடு என்ற பொறுப்பு கூட இல்லை. அந்த மாஸாய் சாதியின் எந்த வீட்டிலும் அது சாப்பிடலாம். குழந்தைகள் அந்த கிராமத்துக்கே பொதுவானவை. அவற்றை எவரும் கண்டிப்பதுகூட இல்லை.

பதினைந்து வயதில் மாஸாய் பழங்குடிகள் ஆண்களுக்கும் பெண்களுக்கும் வெவ்வேறு சடங்குகளை வைத்திருக்கிறார்கள். அந்தச்சடங்குகள் மிக விரிவானவை. அதைச்செய்ததும் ஆண்குழந்தைகளை வேட்டைக்குக் கூட்டிச்செல்கிறார்கள். வேட்டையைக் கற்றுக்கொடுக்கிறார்கள். பெண்களுக்கு பெண்களுக்குரிய தொழில்கள் கற்றுக்கொடுக்கப்படுகின்றன. வாழ்க்கை ஆரம்பிக்கிறது. உபநயனம் என்பது அதுவேதான்.

உபநயனம் முடிந்த இளைஞனை பிரம்மசாரி என்று சொன்னார்கள். பிரம்மசாரி என்றால் இன்று திருமணமாகாதவன் என்ற அர்த்தம் உள்ளது. ஆனால் பழங்காலத்தில் மாணவன் என்றுதான் பொருள். பழங்காலத்தில் உபநயனம் முடிந்ததும் பிள்ளைகள் வீட்டில் இருப்பதில்லை. அவர்கள் குருகுலத்தில் சேர்ந்துவிடுகிறார்கள். குருவுடன் கூடவே தங்கிக் கல்வி கற்கிறார்கள்.

படிப்பு முடிந்ததும் குருநாதரிடம் விடை பெற்றுத் திரும்பத் தன்னுடைய குடும்பத்துக்கு வருகிறான் மாணவன். கிருஹஸ்தாசிரமம் ஆரம்பிக்கிறது.

அவனுக்கு திருமணம் செய்து வைக்கிறார்கள். அவன் தன் தொழிலை செய்ய ஆரம்பிக்கிறான். பிள்ளைகள் பிறக்கின்றன. அவற்றுக்குத் தேவையான எல்லாவற்றையும் அவன் செய்கிறான். அதாவது குடும்பவாழ்க்கை வாழ்கிறான்.

பிள்ளைகள் வளர்ந்து அவர்களும் குடும்பவாழ்க்கைக்கு வந்ததும் ஒருவன் அதற்கு மேலும் வாழ்க்கையில் ஒட்டிக்கொண்டிருக்கக் கூடாது. அது அவனுக்கும் கஷ்டம் பிள்ளைகளுக்கு அதைவிடக் கஷ்டம். அவன் தன் மனைவியை பிள்ளைகளிடம் ஒப்படைத்துவிட்டு குடும்பவாழ்க்கையை விட்டு முழுமையாக விலகிவிடவேண்டும். அதற்குப்பெயர்தான் வானப்பிரஸ்தம். வனம்புகுதல் என்று பொருள். மனைவியும் வானப்பிரஸ்தம் வர விரும்பினால் அவளையும் கூட்டிக்கொண்டு செல்லலாம்.

வானப்பிரஸ்தம் என்பது ஒருவகைத் துறவு. அதுவரை செய்துவந்த உலகியல் சார்ந்த விஷயங்கள் எல்லாவற்றில் இருந்தும் முழுமையாக விடுபட்டு, தன்னுடைய மனநிறைவுக்குரிய செயல்களை மட்டுமே செய்தபடி வாழ்வதுதான் அது.

பழங்காலத்தில் காட்டுக்குச் சென்றுவிடுவார்கள். இன்றைக்கு காட்டுக்குச் செல்லமுடியாது. ஆனால் இந்த விஷயத்துக்குப் பழங்காலத்தை விட இன்றுதான் அதிகமான முக்கியத்துவம் இருக்கிறது என்று நான் நினைக்கிறேன். கொஞ்சம் இதைப்பற்றி யோசித்துப்பாருங்கள்.

இன்றைக்கு நவீன மருத்துவம் வளர்ந்துவிட்டது. ஆகவே மக்களின் ஆயுள் நீள்கிறது. சாதாரணமாக எண்பது தொண்ணூறு வயது வரை வாழ்கிறார்கள். ஆனால் அறுபது வயதில் தொழிலில் இருந்து ஓய்வுபெற வேண்டியிருக்கிறது. அதன்பிறகும் முப்பது வருட வாழ்க்கை மிச்சமிருக்கிறது. அதை வைத்துக்கொண்டு என்ன செய்வதென்றே தெரிவதில்லை. நகரங்களில் உள்ள அடுக்குமாடி வீடுகளில் முதியவர்கள் வாழ்க்கைக்கு ஒரு அர்த்தமும் இல்லாமல் சும்மா இருக்கிறார்கள்.

சும்மா இருக்க முடியுமா? அதுவும் முடியாது. வாழ்க்கையில் இருந்து விலகவில்லையே. பிள்ளைகளின் வாழ்க்கையில் தலையிடுகிறார்கள்.பேரப்பிள்ளைகளின் வாழ்க்கையில்

தலையிடுகிறார்கள். பிள்ளைகளும் பேரப்பிள்ளைகளும் வாழும் உலகம் என்ன என்றே அவர்களுக்குப் புரிந்துகொள்ள முடிவதில்லை. ஆகவே ஆயிரம் பிரச்சினைகள். 'யாருமே நான் சொல்றதைக் கேக்கறதில்லை' 'யாருமே என்னை வந்து பாக்கறதில்லை' என்று புலம்பிக்கொண்டே அமர்ந்திருக்கிறார்கள். எவ்வளவு பெரிய நரகம்.

நீங்கள் இன்று இளைஞர்கள். நீங்கள் உங்களைப்பற்றி யோசியுங்கள். இன்றைக்கு ஒரு தொழில்நுட்பத்தை நீங்கள் கற்றுக்கொண்டிருக்கிறீர்கள். இனிமேல் வேலைக்குப் போவீர்கள். ஒரு நாற்பது வருடம் அந்த வேலையைச் செய்வீர்கள். உங்களுக்கு அறுபது வயது ஆகும்போது அன்றைக்கு வரக்கூடிய தொழில்நுட்பம் உங்களுக்கு என்ன என்றே தெரியாததாக இருக்கும். அன்றைக்கு உள்ள பையன்கள் அதை சும்மா போட்டு விளையாடுவார்கள். நீங்கள் கற்றுக்கொண்டதெல்லாம் நாற்பது வருடம் பழைய விஷயமாக இருக்கும்.

அன்றைக்கு நீங்கள் யோக்கியமாக ஒதுங்கிக்கொண்டால் நல்லது. ஒதுங்காமல் அந்த இளைஞர்கள் வாழ்க்கையில் தலையிட்டுக்கொண்டிருந்தால் என்ன ஆகும்? காலம் என்பது கண்ணில்லாத மிருகம். அதற்குக் குறுக்கே சென்றால் உங்களை முட்டித் தூக்கி வீசிவிட்டுச் செல்லும். அடிபட்டுக் கிடந்து புலம்பவேண்டியதுதான்.

ஆகவே ஒவ்வொரு மனிதனுக்கும் வாழ்க்கையின் ஒரு கட்டத்தில் துறவு தேவை. அதைத்தான் வானப்பிரஸ்தம் என்கிறார்கள். நீங்கள் இன்றைக்குப் படிப்பது எதற்காக? உங்களுக்கு எது உள்ளூர ஆசையோ அதற்காக இல்லை. உங்கள் குடும்பத்துக்காக. சமூகத்துக்காக. நாளைக்கு நீங்கள் வேலை செய்வதும் குடும்பத்துக்கும் சமூகத்துக்கும்தான். பல கட்டாயங்கள் இருக்கும் இல்லையா? அந்தக் கட்டாயங்களால் சில முக்கியமான விஷயங்களை நீங்கள் ஒத்திப்போடுவீர்கள். நாளைக்கு நாளைக்கு என்று தள்ளி வைப்பீர்கள். அந்த விஷயங்களை நீங்கள் செய்யவேண்டாமா? வாழ்க்கை திரும்ப வராது அல்லவா?

சுந்தர ராமசாமியின் நண்பர் ஒருவர் அமெரிக்காவில் அறிவியல்துறையில் பெரிய ஆய்வாளராக இருந்தார். கடுமையாக உழைத்துப் பல சாதனைகள் செய்தார். சட்டென்று ஒரு கட்டத்தில் எல்லாவற்றையும் விட்டுவிட்டு தன்னுடைய சொந்த ஊருக்கே வந்து ஒரு பள்ளிக்கூடம் நடத்த ஆரம்பித்தார். நான் அவரிடம் கேட்டேன் ஏன் இதைச் செய்கிறீர்கள் என்று. 'இது என் ஆத்ம

திருப்திக்கான வேலை. சயண்டிஸ்டாக நான் செய்யவேண்டியதை செய்துவிட்டேன். பிள்ளைகளுக்கு செய்யவேண்டியதை செய்து விட்டேன். இனி எனக்கு செய்யவேண்டியதை நான் செய்யவேண்டும்' என்றார். அதுதான் வானப்பிரஸ்தம்.

ஆம், ஒரு வாழ்க்கை துறவிலேதான் முழுமை அடையும். இருபது வயதிலே நீங்கள் கைகளை நீட்டி எல்லாவற்றையும் அள்ளி அள்ளி எடுக்கிறீர்கள். கல்வியை அள்ளுகிறீர்கள். வேலையை அள்ளுகிறீர்கள். அதிகாரத்தை அள்ளுகிறீர்கள். செல்வத்தை அள்ளுகிறீர்கள். புகழை அள்ளுகிறீர்கள். அதன் பின் ஒரு வயதில் அந்தக் கல்வி வேலை அதிகாரம் செல்வம் புகழ் எல்லாமே கனமாக ஆகும். நம் உடம்பு அந்த கனத்தைத் தாங்காது. அதற்குமேல் அவற்றை சுமந்துகொண்டிருந்தால் நரகம்தான். ஆகவே ஒவ்வொன்றாகத் துறக்கவேண்டும். அதுதான் வானப்பிரஸ்தம்.

காளிதாசனின் ரகுவம்சம் காவியத்தில் சாம்ராஜ்ஜியத்தை உருவாக்கிய திலீபன் தன்னுடைய மகன் வயது வந்ததும் நாட்டையும் பொறுப்புகளையும் மகனிடம் கொடுத்துவிட்டு வசிஷ்டரின் ஆசிரமத்துக்கு வந்து மாடுகளை மேய்த்துக்கொண்டு வாழ்கிறான் என்ற வருணனை வருகிறது. அப்படி ஒதுங்க முடிவது பெரிய மனபலம். அவனுக்கு நிம்மதி உண்டு.

நான் முதலிலே சொன்ன அந்தப் பாட்டுக்கு வருகிறேன். மனித வாழ்க்கையில் இரண்டு துறவு கண்டிப்பாகத் தேவை என்கிறது அந்தப்பாட்டு. அதில் ஒரு துறவு இதுதான். வானப்பிரஸ்தம் என்னும் துறவு. சரி, இன்னொரு துறவு என்ன?

நண்பர்களே, பிரம்மசாரி என்ற சொல்லுக்கு என்ன அர்த்தம்? பிரம்மசரிய விரதம் கொண்டவன் என்று அர்த்தம். பிரம்மத்தை உபாசிப்பது தவிர வேறேதும் செய்யாதவன் என்று சொல்லலாம். பிரம்மம் என்றால் கடவுள். இங்கே கல்விதான் கடவுள். ஆம், பிரம்மசாரி என்றால் கல்வியை மட்டுமே கடைப்பிடிப்பவன். அதுவும் ஒரு துறவுதான். என்னிடம் அந்த நாட்டுப்புறப் புலவர் சொன்னார். 'ரெண்டு துறவறம் இருக்கு தம்பி…ஒண்ணு படிக்கிற காலத்திலே. ரெண்டு படிச்சதை எல்லாம் மறந்து கடைசிக்காலத்துக்கு வேண்டியத மட்டும் செய்ற காலத்திலே'

உபநயனம் வரை பிள்ளைகளைக் கட்டுப்பாடில்லாமல் ஏன் வளர்த்தார்கள் தெரியுமா? அதன்பின் கல்வியைத்தவிர வேறு எதைப்பற்றியுமே

நினைக்கக்கூடாது என்பதற்காகத்தான். பழையகாலகட்டத்தில் பிரம்மசாரிகள் சுவையான உணவை உண்ணக்கூடாது. உயர்தரமான உடைகளை அணியக்கூடாது. வசதியான படுக்கைகளில் படுக்கக்கூடாது. ஒரு பற்றற்ற துறவி போலவே வாழ வேண்டும்.

விஷ்ணுபுராணத்தின்படி மூன்று விஷயங்களை பிரம்மசாரிகள் பேணவேண்டும். சௌசம், ஆசாரம், விரதம். உடலையும் மனதையும் சுத்தமாக வைத்துக்கொள்வது சௌசம். கட்டுப்பாடான வாழ்க்கை நெறிகளை ஆசாரம் என்றார்கள். புலன் இன்பங்களுக்கான நாட்டங்களை ஒடுக்கிக் கல்வியை மட்டுமே கவனிப்பதை விரதம் என்றார்கள்.

இதையெல்லாம் இப்போது சொன்னால் உங்களுக்கு வேடிக்கையாகத்தான் இருக்கும். பழைய சரக்கு என்பீர்கள். நானும் இதெல்லாம் இப்போது தேவை என்று சொல்ல வரவில்லை. பழையகாலம் பழையகாலம்தான். அது திரும்பி வராது.

ஆனால் நாம் படித்தவர்கள், சிந்திப்பவர்கள். அகழ்வாய்விலே ஒரு பழைய சிலை கிடைத்தால் அதற்கு என்ன அர்த்தம் என்று பார்ப்போம் இல்லையா? அதைப்போல இதையும் நாம் ஆராய்ந்து பார்க்கவேண்டும்.

கல்விக்கு ஒரு தியாகம் தேவைப்படுகிறது. அந்தத் தியாகத்தைச் செய்யாமல் உண்மையில் எதையும் நாம் கற்றுக்கொள்ளமுடியாது. இதுதான் கல்விப்பருவத்தை ஒரு துறவுப்பருவமாக நம் முன்னோர் உருவாக்கியிருப்பதற்கான காரணம்.

நீங்கள் கற்கும் முறையான தொழிற்கல்வியை விட்டுவிட்டு வேறு வகையான கல்வியைப்பற்றி யோசியுங்கள். உதாரணமாக உங்களிலே ஒருவர் ஒரு சினிமா இயக்குநர் ஆகவேண்டும் என விரும்புகிறார் என்று வைத்துக்கொள்வோம். நீங்கள் என்ன செய்யவேண்டும்?

முதல் விஷயம் துறவுதான் நண்பர்களே. உங்கள் சுகபோகங்களைத் துறந்தே ஆகவேண்டும். அப்படித் துறவியாக ஆனபின்னர் அடுத்து ஒரு இயக்குநரின் கீழே சென்று சேரவேண்டும். ஆயிரம் வருடம் முன்னால் ஒரு குருகுலத்திற்கு எப்படி மாணவன் சென்றானோ அதேபோலத்தான் இங்கேயும் குருவுடன் சென்று சேரவேண்டும். பழைய குருகுல அமைப்பில் குருவின் கூடவே இருக்கவேண்டும். குருவுக்கு சேவைசெய்யவேண்டும். குரு திட்டினாலும் அடித்தாலும் விட்டுவிடக்கூடாது. குரு செய்வதை நீங்களும் செய்யவேண்டும்.

அப்படித்தான் கற்றுக்கொள்ள முடியும். இன்றும் சினிமாவிலே அப்படித்தான்.

என்னுடைய இளம்நண்பர் ஒருவர் பொறியியல் படித்துவிட்டுக் கணிப்பொறித்துறையிலே வேலைபார்த்தார். அவருக்குத் திரைப்படத்துறை மேல் பெரும் மோகம். அவரை இன்றைய முக்கியமான இயக்குநர் ஒருவரிடம் உதவி இயக்குநராக சேர்த்துவிட்டேன். பொறியியலாளராக இருந்தபோது சொகுசாக வாழ்ந்தவர் அவர். சோம்பேறியும்கூட. எப்படி வேலைசெய்யப்போகிறாரோ என்று நினைத்திருந்தேன்.

ஆனால் அவர் வேலைசெய்வதைப்பார்த்து எனக்கே பிரமிப்பாக இருந்தது. ஒருநாள் அவர் சொன்னார். 'சார் நான் நேற்று ராத்திரி முழுக்க இசையமைப்பாளருடன் இருந்தேன். அதிகாலை நான்குமணிக்கு வீட்டுக்குச் சென்றேன். இரண்டுமணிநேரம் தூங்கிவிட்டு நேராக அலுவலகம் வந்தேன். இரவு வரை இங்கே வேலை. இரவில் மீண்டும் ஒலிப்பதிவுக்குச் செல்வேன். இப்படித்தான் ஒருமாதமாக வேலை செய்கிறேன். என்ன சாப்பிட்டேன் என்றே தெரியவில்லை. என்ன உடை அணிகிறேன் என்ற ஞாபகமே இல்லை. சார் கண்ணாடியில் முகம்பார்த்தே இரண்டுவாரமாகிறது...'

'கஷ்டமாக இருக்கிறதா?' என்றேன் 'சார், இப்போதுதான் வாழ்க்கையிலேயே மகிழ்ச்சியாக இருக்கிறேன். இந்த ஒரு மாசத்திலே நான் கற்றுக்கொண்டது மொத்த வாழ்க்கையிலும் கற்றுக்கொண்டதை விட அதிகம். கற்றுக்கொள்வதை விட சந்தோஷமானது உலகத்தில் வேறு எதுவுமே இல்லை சார்...' சட்டென்று சோர்ந்து '...ஆனா கிட்டத்தட்ட இருபத்திரண்டு வருசம் பள்ளிக்கூடத்திலும் கல்லூரியிலும் படித்தபோது கற்றுக்கொள்வதன் சந்தோஷத்தை அனுபவிக்கவே இல்லை சார்'.

'அந்த சந்தோஷத்தை அனுபவிக்கவில்லை என்றால் நீங்கள் கற்றுக்கொள்ளவில்லை என்றுதான் அர்த்தம்' என்றேன். 'ஆமா சார்...வாழ்க்கையிலே பெரும்பகுதி வீணாப்போச்சு' என்றார். 'நல்லவேளை மிகவும் பிந்திவிடவில்லை' என்றேன்.

கிட்டத்தட்ட இதே விஷயத்தைக் கொஞ்சநாள்முன் அமெரிக்கா சென்றிருந்தபோது என் வாசகி ஒருவர் சொன்னார். கணக்கியல்துறையில் உயர்கல்வி கற்றவர் அவர். ஆனால் ஒரு நிறுவனத்தில் சேர்ந்து முன்னோடியான ஒரு கணக்கியலாளரிடம் பணியாற்றியபோதுதான்

கற்றுக்கொள்ளவே ஆரம்பித்தேன். அப்போதுதான் நான் நானாக உருவானேன்’ என்றார்.

வாழ்க்கையில் எதையாவது சாதித்த ஒவ்வொருவருக்கும் இதேபோல ஒரு குருகுலப்பருவம் இருக்கும். அது ஒரு துறவு வாழ்க்கையாக இருக்கும். கல்வியை மட்டுமே உபாசனை செய்யும் பிரம்மசரிய வாழ்க்கையாக இருக்கும் அது.

ஆனால் நம்முடைய சமூகம் இன்று எப்படி குழந்தைப்பருவத்தை அழித்திருக்கிறதோ அதைப்போலக் கல்விப்பருவத்தையும் அழித்துவிட்டிருக்கிறது. இன்று நாம் கல்வியை ஒரு தவமாகக் கற்கிறோமா? அதற்காக எதையாவது துறக்கிறோமா?

நம்முடைய கல்வி நிறுவனங்களில் ‘பயிற்சி’ [training ]யைத்தான் அளிக்கிறார்கள். ‘கல்வியை’ [education] அல்ல. கல்வியை ஒரு துறவாக ஒரு தவமாக மட்டுமே அடைய முடியும். சிலசமயம் நீங்கள் இருபது வருடம் கல்விநிறுவனங்களில் படிப்பீர்கள். நீங்கள் கல்வி பெறுவது ஆறுமாதகாலம்கூட இருக்காது. அந்த ஆறுமாதக் கல்வியை வைத்துக்கொண்டுதான் மிஞ்சிய வாழ்க்கையை முழுக்க நீங்கள் சந்திக்கிறீர்கள். இதுதான் உண்மை.

நமக்கு இன்று தேவையாக இருப்பது முதலில் நம் பிள்ளைகளுக்கு உண்மையான குழந்தைப்பருவம். அந்தக்குழந்தைப்பருவம் முடிந்ததும் அதற்குத் தேவை உண்மையான கல்விப்பருவம். அக்குழந்தையின் இயல்புக்கு ஏற்ற கல்வி. முழு ஈடுபாட்டுடன் பிற அனைத்தையும் துறந்து அது கற்கும் கல்வி. அதாவது பிரம்மசரியம்.

இன்று நமக்கு நம்முடைய அமைப்பு இவற்றை அளிப்பதில்லை. ஆகவே நாம்தான் இதை தேடிக்கொள்ளவேண்டும். இந்தக் கல்வியைக் கல்வி என நினைக்காதீர்கள். இது ஒரு சான்றிதழ் மட்டுமே. இதைவைத்துக்கொண்டு நீங்கள் ஒன்றும் செய்யமுடியாது. இது ஒரு தொடக்கத்தை மட்டுமே அளிக்கும்.

இன்னும் சொல்லப்போனால் இந்த சான்றிதழ் என்பது ஒரு பூணூல். இந்த சான்றிதழ் கையில் கிடைப்பதுதான் உபநயனம். இனிமேல்தான் கல்விப்பருவம் ஆரம்பம். இனிமேல்தான் நீங்கள் பிரம்மசாரிகள்.

முன்பெல்லாம் உபநயனம் ஒருவாரம் நடக்கும். இப்போது இருபது வருடம் நீளமாக நடக்கிறது என்று வைத்துக்கொள்வோம்.

இனிமேல் ஒரு பிரம்மசரியத்தை நீங்கள் கடைப்பிடித்தாகவேண்டும். உங்கள் துறையைத் தேர்ந்தெடுக்கவேண்டும். உங்கள் குருகுலத்தைக் கண்டுபிடிக்கவேண்டும். அந்த குருகுலத்தில் உங்களை முழுமையாக அர்ப்பணிக்கவேண்டும். அதற்காகப் பிற அனைத்தையும் துறந்து ஒரு துறவுவாழ்க்கையை வாழவேண்டும். அங்கே கற்றதுதான் உங்களுடைய கல்வி. அங்கேதான் நீங்கள் நீங்களாக ஆவீர்கள்.

அதுதான் நாம் நம்முடைய பாலியத்தில் இருந்து கரையேறும் இடம். அதுதான் நம்முடைய சுய அடையாளத்தின் தொடக்கம். அப்படி ஒன்றுக்காகத் தேடுங்கள்.

# (12) கல்வி – தன்னிலையும் பணிவும்

*நான் லௌகீக வாழ்க்கையில் (படிப்பு, வேலை....) வென்று பழகியவள். ஒரு படி கீழே நிற்பதென்பது பழக்கப்படாத அனுபவம். இதை நான் ஆணவத்துடன் குறிப்பிடவில்லை. மற்றவர்கள் என் மீது வைத்திருக்கும் எதிர்பார்ப்பை விட நான் என் மீது சுமந்து செல்லும் எதிர்பார்ப்பு பல மடங்கு.*

தஞ்சை சந்திப்பைக் குறித்து பிரியம்வதா எழுதிய கடிதத்தின் மேலே குறிப்பிட்ட வரிகள் என்னை கவர்ந்தன அக்கடிதத்திற்கான பதிலில் அதை எழுதத் தொடங்கியபின் ஒரு தனிப்பதிவாகவே அதை எழுதுவது நன்று என்று தோன்றியது.

நாம் நெடுங்காலம் வேர் விட்டு வளர்ந்து நிலை கொண்ட நிலப்பிரபுத்துவ அமைப்பொன்றின் இறுதிக்காலகட்டத்தில் பிறந்தவர்கள். நமது தந்தையர் அந்நிலப்பிரபுத்துவ காலகட்டத்துக்குள் முழுமையாகத் திளைத்து வளர்ந்து வந்தவர்கள். அவர்கள் அவ்விழுமியங்களையே நமக்கு அளித்தனர். ஆகவே குடும்பம், பள்ளி, அலுவலகம், சமூகச் சூழல் அனைத்திலுமே அந்நிலப்பிரபுத்துவத்தின் மரபுகளும் நெறிகளும் நம்பிக்கைகளுமே மேலோங்கி நின்றன.

நிலப்பிரபுத்துவத்தின் அடிப்படை என்பது மாறாத மேல் கீழ் அடுக்குகளை உருவாக்கி நிலை நிறுத்துவதுதான். நிலப்பிரபுத்துவத்தைத் தாண்டி வந்திருக்கும் இச்சூழலில் இன்று அதைப்பார்க்கும்போது அந்த அடுக்கதிகாரம் நமக்கு சோர்வை அளிக்கிறது. அதன் அடக்குமுறையும் அடிமைப்படுத்தலும் சினத்தை எழுப்புகின்றன. ஆனால் அதற்கு முந்தைய பழங்குடிக் காலகட்டத்தின் கட்டற்ற தன்மைக்கு எதிராக மெல்ல மெல்ல மானுடம் உருவாக்கிக் கொண்ட ஓர் அமைப்பு நிலப்பிரபுத்துவம்.

மார்க்சிய சிந்தனையை ஓரளவேனும் கற்ற ஒருவர் பழங்குடிகளின் கட்டற்ற பரவலான பண்பாட்டுவெளிக்கு நிலப்பிரபுத்துவம் பல வகையிலும் முற்போக்கான வளர்ச்சியையே அளித்தது என்பதை உணர்வார்கள். நிலப்பிரபுத்துவ அமைப்பு பழங்குடி சமுதாயங்களை ஒன்றுக்குமேல் ஒன்றென அடுக்கி உறுதியான பெரும்சமூகங்களை உருவாக்கியது, பேரரசுகளை கட்டமைத்தது. அதன் வழியாக உபரி தொகுக்கப்படவும்

முறையாக பகுக்கப்படவும் வழிவகுத்தது. உபரியை உருவாக்கும் ஒருங்கிணைந்த வேளாண்மை, பாசனம், வணிகம் ஆகியவற்றை உருவாக்கியது. வலுவான அரசுகளை உருவாக்கி கொள்ளையும் சூறையாடலும் இல்லாமல் ஆக்கியது.

அதன் விளைவாகவே கலைகளும் இலக்கியங்களும் சிந்தனைகளும் தொழில்நுட்பங்களும் வளர்ந்து வந்தன. நிலப்பிரபுத்துவத்திற்குமேல் எழுந்து வந்த முதலீட்டியம் நிலப்பிரபுத்துவத்தோடு ஒப்பிட்டு நோக்குகையில் மேலும் முற்போக்கானது. அது நிலப்பிரபுத்துவத்தில் பல வகையிலும் நிலத்தில் தேங்கிக் கிடந்த முதலீட்டை விடுவித்து ஒற்றைப்பெருந்தொகுப்பாக ஆக்குகிறது. அதை உற்பத்தியிலும் விநியோகத்திலும் ஈடுபடுத்துகிறது. முதலீட்டை கலைகளை வளர்க்கவும், இலக்கியங்களையும் சிந்தனைகளையும் பெருக்கவும் தொழில் நுட்பத்தை வலுப்படுத்தவும் பயன்படுத்துகிறது.

நம் இந்தியாவில் நிலப்பிரபுத்துவத்தின் இறுதிக்காலமென்று இந்திய சுதந்திரப்போராட்ட காலத்தை சொல்லலாம். முதலீட்டியம் உருவாகி வந்த காலம். நமது தந்தையரின் காலகட்டத்தில் ஓங்கியிருந்த நிலப்பிரபுத்துவத்திற்குள் முதலீட்டியம் ஊடுருவத் தொடங்கியதென்றால் நமது காலகட்டத்தில் முதலீட்டியம் ஓங்கி அதற்குள் நிலப்பிரபுத்துவம் உள்ளடங்கியிருக்கிறது. இன்று நம் வாழ்வில் நேரடியாக நிலப்பிரபுத்துவத்திற்கு இடமில்லை. நாம் முதலீட்டியத்தின் ஊழியர்கள். அதில் பங்களிப்பாற்றுபவர்கள்.

ஆனால் சென்ற காலம் பொருளியல்தளத்திலும் அரசியல்தளத்திலும் பின்னகர்ந்து விட்டாலும் கூட சமூகத் தளத்திலும் பண்பாட்டுத்தளத்திலும் நீடிக்கவே செய்யும். இன்று நம்மை ஆளும் மதிப்பீடுகள் நிலப்பிரபுத்துவக் காலத்தைச் சேர்ந்தவை .அவை இலக்கியங்களாக, நீதிநூல்களாக, ஆசாரங்களாக, ஒழுக்க வரையறைகளாக, அற மதிப்பீடுகளாக ஆழ்படிமங்களாக நம்மை நோக்கி வந்து கொண்டே இருக்கின்றன. தொடர்ச்சியாக அவற்றை உற்று நோக்கி ஆராய்ந்து மறுமதிப்பீடு செய்வதினூடாகவே நாம் அவற்றை கடந்து செல்ல முடியும். ஓரிரு தலைமுறைகளுக்குப்பின்னரே அம்மதிப்பீடுகளிலிருந்து முழுமையாக விடுபடவும் முடியும்.

அம்மதிப்பீடுகளில் அடுத்த கட்டத்திற்கும் பொருந்தக் கூடிய சாராம்சமான பகுதிகள் மறுஆக்கம் பெற்றுத் தொடரும். அவை பெரும்பாலும் அறமதிப்பீடுகளே ஒழிய ஒழுக்க மதிப்பீடுகளோ நெறிமுறைகளோ ஆசாரங்களோ அல்ல. அந்த மாற்றம் மிகமெல்ல வளர்சிதை மாற்றமாக, முரணியக்கத்தின் வழியாக மட்டுமே நிகழமுடியும். பெரும்பாலும் அது நிகழ்ந்தபின்னரே அதன் முழுச்சித்திரத்தை நாம் அடைவோம்.

இச்சூழலில் நாம் ஒவ்வொருவரும்அறியும் ஓர் இடருண்டு. நமது குடும்பத்தில் தந்தைக்கும், கல்வி நிலையங்களில் ஆசிரியருக்கும், தொழில் நிலையங்களில் மேலதிகாரிகளுக்கும், சமூகச் சூழலில் மூத்தவர்களுக்கும் முழுமையாக அடிபணியவே நிலப்பிரபுத்துவ மதிப்பீடுகளால் கற்பிக்கப்பட்டிருக்கிறோம். இயல்பாகவே நாம் அதை செய்தும் வருகிறோம். இன்றைய தலைமுறையில் அந்த மதிப்பீடுகளை உதறி முன்னகரும் இயல்பு உருவாகிறது. பெரும்பாலும் நவீன தொழிற்சூழலில் இருந்து இது முளைவிடுகிறது.

முதலீட்டியம் வலுப்பெற்ற அமெரிக்க ஐரோப்பா நாடுகள் தொழில்துறையில் பழையகால நிலப்பிரபுத்துவப் பண்புகள் எதிர்மறை விளைவுகளை உருவாக்குபவை என்று கண்டடையப்பட்டுள்ளன. அங்கு முதலீட்டியத்தால் வரையறுக்கப்பட்ட உறவுகளும் உணர்வுகளுமே சிறப்பான பயனை விளைவிக்ககூடியவை என்று உணரப்பட்டிருப்பதால் அவை வலியுறுத்தப்படுகின்றன.

90களுக்குப்பிறகு உலகமயமாக்கம் இந்தியாவில் ஐரோப்பிய அமெரிக்கபாணி தொழில்- வணிகச் சூழலை உருவாக்கியது. குறிப்பாக கணிப்பொறித்துறை போன்றவற்றில் ஐரோப்பிய பாணி நிர்வாகிகளும் தொழில்உறவுகளும் உருவாயின. அங்கு மேல் கீழ் அடுக்கு என்பவை ஆசாரங்களாகவோ நம்பிக்கைகளாகவோ இல்லை. நிர்வாகத்தின் பொருட்டு உருவாக்கப்பட்ட தொழில்முறை உறவுகளே உள்ளன. அங்கிருந்து அந்த மனநிலை கல்வி நிலையங்களுக்கு வந்துள்ளது. மெல்ல குடும்பங்களுக்கும் வந்து சேர்ந்து கொண்டிருக்கிறது.

விளைவாக எவரும் தன்மேல் ஆதிக்கம் செலுத்துவதை அனுமதிக்காமலிருக்கும் மனநிலை இளைஞர்களிடம் இன்று வளர்ந்து கொண்டிருக்கிறது. தந்தையோ ஆசிரியரோ மேலதிகாரியோ மூத்தவர்களோ அவர்களிடம் ஆணையிட இயல்வதில்லை. மானுடனாக

தான் பிறருக்கு முற்றிலும் சமானமானவன் என்ற உணர்வை இளமையிலேயே அவர்கள் அடைந்துவிடுகிறார்கள். எனக்கும் என் தந்தைக்குமான உறவல்ல எனக்கும் என் மகனுக்குமான உறவு. நான் என் தந்தைக்கு நிகராக நின்று ஒருசொல்லும் பேசியதில்லை.என் மகன் என்னை அஞ்சுவதில்லை, அடிபணிவதுமில்லை.

இது மிகப்பெரிய வாய்ப்பு என்பதை மறுக்க முடியாது. தனது அறிவார்ந்த தேடலையும் ஆன்மீகமான மலர்வையும் நோக்கி ஒவ்வொரு தனியாளுமையும் சென்று சேர்வதற்கான விடுதலையை இது அளிக்கிறது. அதற்கெதிரான சமூகத் தடைகள் அனைத்தையும் பெரும்பாலும் விலக்குகிறது. பிறிதொருவரின் வாழ்க்கைக்குமேல் நாம் செல்வாக்கு செலுத்துவது பிழை என்ற எண்ணம் இன்று வலுப்பெற்று வருகிறது. தன்மேல் பிறர் செலுத்தும் ஆதிக்கம் என்பது ஒருவகையில் அத்துமீறலே என்னும் எண்ணம் உருவாகி நிலைபெற்றுள்ளது. அனைத்து வகையிலும் முந்தைய நிலப்பிரபுத்துவ மதிப்பீடுகளிலிருந்து முற்போக்கானதென்றும் பயன் மிக்கதென்றும் இதை ஐயமில்லாமல் சொல்ல முடியும்.

ஆனால் அனைத்து தளங்களிலும் அல்ல. இதை ஒரு விவாதக்குறிப்பாகவே முன் வைக்கிறேன். கற்றுக் கொள்ளும் இடங்களில் இந்த ஆதிக்கஎதிர்ப்புமனநிலை என்பது பலசமயம் எதிர்மறை இறுக்கத்தை அளிக்கிறது. ஏற்றுக்கொள்வதற்கு எதிரான வீம்பாக மாறுகிறது. புதியவை உள்ளே வருவதைத் தடுக்கும் ஆணவத்தின் கோட்டை என ஆகிவிடுகிறது.

தந்தையிடம், நிறுவனம்சார்ந்த ஆசிரியரிடம், மேலதிகாரியிடம், மூத்தவரிடம் அதிகாரத்திலோ ஆளுமையிலோ முற்றிலும் நிகரென்று நிற்கலாம். அவர்கள் நம் மேல் செலுத்தும் ஆதிக்கத்தை முழுமையாகவே நம் ஆளுமை கொண்டு எதிர்க்கலாம். அது விடுதலையளிக்கும். ஆனால் அதே எதிர்ப்பு நம்மை உடைத்து வார்க்கும் வாய்ப்புள்ள, நமக்கு முற்றிலும்புதிய ஒன்றைக் கற்பிக்கும் வழிகாட்டியான ஆசிரியனிடம் செலுத்தப்படும் என்றால் அங்கு கல்வி மறுப்பே நிகழும்.

கல்லூரியில் என்னுடைய பேராசிரியர்களிடம் நான் தலைவணங்கியதில்லை. ஆனால் என் குருநாதர்களிடம் தலைவணங்கவே செய்தேன். நித்ய சைதன்ய யதியிடம் முழுதாகப் பணிந்தேன். அதன்மூலம் பயன் பெற்றேன் என்றே சொல்வேன். எனது ஆணவத்தை அவர்கள் முன்னால் திறந்து வைத்தேன் என்பதை மறுக்கவில்லை. ஆனால் அதை அவர்கள் உடைக்கவும் அவர்கள்

என்னுள் புகவும் நான் அனுமதித்தேன். அது எனக்கு இறப்புக்கு நிகரான அனுபவமாக இருந்தாலும் அதனூடாகவே நான் என் இளமையின் அறியாமை எனக்களித்த ஆணவத்திலிருந்து வெளியே வந்தேன்.

இதற்குக் காரணம், சிந்தனையைத்தான் நூல்கள் அளிக்கமுடியும் சிந்திப்பதை ஆசிரியர்களே கற்பிக்கமுடியும் என்பதுதான். நம் எண்ணங்களை தர்க்கபூர்வமாக மாற்றுபவன் முதன்மை ஆசிரியன் அல்ல. தன் ஒட்டுமொத்த ஆளுமையையே நம் மீது பதிப்பதன்மூலம் நம்மை உடைத்து உருமாற்றி வார்ப்பவனே முதன்மையாசிரியன். குரு என்னும் சொல்லால் அதை குறிக்கலாம். அவன் எங்கே எப்படி நம்மை பாதிக்கிறான் என நாம் எளிதில் அறியமுடியாது. நம் உலகநோக்கை, சிந்தனைமுறையை நம்மையறியாமலேயே அவன் மாற்றுகிறான்.

இது ஒரு நுட்பமான குறியீட்டுத் தொடர்பு என்றே என் அனுபவத்திலிருந்து எனக்குத் தோன்றுகிறது. ஆசிரியனுடனான நம் உறவில் நாம் அவனை மெல்லமெல்ல ஓர் அடையாளமாக ஆக்கிக்கொள்கிறோம். அவன் சொல்லாதவற்றையும் அவனிடமிருந்து பெற்றுக்கொள்கிறோம். அந்த நுட்பமான தொடர்புறுத்தலுக்கு தடையாக இருப்பது எப்போதும் தர்க்கபுத்தியை தீட்டி முன்வைத்திருப்பது, தன்னை முன்வைத்து எதிர்த்துக்கொண்டே இருப்பது

நம்மீது கருத்தியலாதிக்கத்தை செலுத்த எவரையுமே அனுமதிக்காத இறுக்கத்தை நாம் கொண்டோமென்றால் நாம் எங்கு நிற்கிறோமோ அங்கேயே இறுதி வரை நின்று கொண்டிருப்போம். நம்முள் எந்த புதுக்கருத்தும் உள்ளே வரவும் முளைத்து மேலெழவும் அனுமதிக்காமலிருப்போம்.

நம்மை முழுமையாக பிறருடைய கருத்துக்களுக்கு விட்டுக் கொடுத்து ஒரு கால்பந்தாட்டத்தின் பந்து போலாவது எவ்வளவு அசட்டுத்தனமானதோ அதற்கிணையாகவே இரும்புத்தூணென நின்ற இடத்திலேயே நின்று கொண்டிருக்கும் உறுதியும் அபாயகரமானது. அறிவுத்துறைகளிலோ கல்விநிலையங்களிலோ நிலவும் வெறும் மேலாதிக்கத்தை ஏற்றுக்கொள்வதைப்பற்றி நான் இங்கு சொல்லவில்லை. உண்மையிலேயே நமது தேடலைத் தொட்டு நமது ஆழ்தளங்களை விரியச்செய்யும் ஆசிரியனிடம் நாம் அதே வெற்றாணவத்தைக் காட்டக்கூடுமா என்பதைப்பற்றி மட்டுமே இங்கு சொல்லியிருக்கிறேன்.

இது பெரும்பாலும் தனிப்பட்ட தெரிவென்பதை மறுக்கவில்லை. தன் ஆளுமையாகவே தன்முனைப்பையும் கட்டமைத்து வைத்திருப்பவர்களிடம் இச்சொற்கள் எந்த விளைவையும் ஏற்படுத்தப்போவதில்லை.ஒருவர் தன் குருவை தானேதான் தெரிவுசெய்துகொள்ளவேண்டும். முதன்மையாசிரியர்களை, குருநாதர்களை, அணுகும் வழி என்று மட்டுமே இதைச் சுட்டிக்காட்ட விழைகிறேன். உதாரணமாக நான் நடத்தும் நவீன இலக்கிய விவாதங்களில் தன்னிலையைப் பேணிக்கொள்ளும் ஒருவர் நல்ல பங்களிப்பை ஆற்றமுடியும். ஆனால் சுவாமி வியாசப்பிரசாத் போன்ற குருநாதர்களிடம் அந்தமனநிலையுடன் அணுகினால் வெறும் ஆணவமே எஞ்சும்.நான் சுட்டிக்காட்ட விரும்புவது இந்த வேறுபாட்டையே.

சமூக வலைதளங்களைப்பார்க்கையில் இந்த தலைமுறையின் மிகப்பெரும்பாலானவர்கள் தங்கள் இளமையின் அறியாமை அளிக்கும் வெற்றாணவத்தை கடந்து செல்லும் ஓர் ஆளுமையைக் கூட எதிர்கொண்டதில்லையென்றும் அல்லது எதிர்கொண்டாலும் அவர்களை அவர்கள் தங்கள் மேல் அனுமதிப்பதில்லையென்றும்தான் தோன்றுகிறது. எத்தகைய தகுதி கொண்டவரையும் தனக்கு நிகரெனக் கருதி அவர்கள் சொல்லாடுகிறார்கள். ஆகவே அவர்களிடமிருந்து ஒரு சொல்லைக்கூடப் பெற்றுக்கொள்வதில்லை. மிகப்பெரிய இழப்பு இது. ஆனால் அவர்கள் அந்த எல்லையைக் கடந்து உண்மையான அறிதலை அடையாதவரை தாங்கள் இழப்பது என்ன என்று அறியாமலேயே இருப்பார்கள். தாங்கள் உறுதியான தன்னிலையுடன் தன்மதிப்புடன் இருப்பதாக எண்ணிக்கொள்வார்கள்.

அனைத்து புதிய கருத்துக்களையும் முன்னரே அறிந்தவற்றைக் கொண்டு எதிர்கொள்வது, தன்னை ஒரு பீடத்தில்வைத்துக்கொண்டு பிறவற்றைக் கிண்டல் செய்வது, புறக்கணிப்பது ஆகியவற்றைச் செய்பவர்கள் எங்கே தொடங்குகிறார்களோ அங்கிருந்து ஒருகணமும் முன்னகர முடியவில்லை என்பதைக் கானலாம். பத்தாண்டுகளாக சமூக வலைதளங்களில் பல்வேறு கருத்துக்களை எதிர்கொண்டு பேசிக்கொண்டிருக்கும் ஒருவர் பத்தாண்டுகளுக்கு முன் எங்கு தொடங்கினாரோ அதே அறிவுத்தளத்தில் நின்றிருக்கிறார் என்றால் மிகப்பயனற்ற ஒரு செயலை பத்தாண்டுகளாக அவர் செய்து கொண்டிருக்கிறார் என்று தான் பொருள்.

இன்றைய முதலீட்டிய உலகில் பிற அனைத்து துறைகளிலும் சுதந்திரம், தனித்துவம், வணங்காமை, தன்முனைப்பு ஆகியவை ஒருவகைப்

பண்புகளாகவே நிலைகொள்கின்றன. கற்றுக்கொள்ளும் இடத்தில் மட்டும் உரிய இடத்தில் வணங்குதலும் உரிய முறையில் பணிதலும் அங்கே அவசியமானவை என்று தோன்றுகிறது. நாம் நமது வணக்கத்தின் மூலம், பணிதலின் மூலம் நாம் நம்து எல்லையைக் காணமுடியும். நமது பலவீனங்களையும் குறை பாடுகளையும் அளந்து அடையாளப்படுத்திக் கொள்ள முடியும். அதன்பின்னரே நம்மை நாமே உடைத்து மறுவார்ப்பு செய்ய முடியும்.

நமது வெற்றிடங்களை அடையாளம் கண்டு மீண்டும் மீண்டும் நம்மை நிரப்பிக் கொள்ளும்போதே உண்மையில் கல்வி நிகழ்கிறது. அதனூடாகவே வெளியிலிருந்து வரும் சிந்தனைகளுக்கும் உணர்வுகளுக்கும் நம்முள் இடமளிக்க முடியும். அவற்றை நம்முள் நாமே வளர்த்து எடுக்க முடியும் அதனூடாக நாம் வளர்ந்து நாம் பணிந்தவர்களையும் வணங்கியவர்களையும் உண்மையிலேயே நிகரெனக்காணும் இடத்தை அடைய முடியும். கடந்து செல்லவும் கூடும்.

பிற உறவுகளிலிருந்து இவ்வுறவு வேறுபட்டது. பிற சமூக உறவுகள் அனைத்திலும் சற்றேனும் பொருளியல்சூழலின் கட்டாயங்கள் கலந்துள்ளன. அவை காலந்தோறும் நுணுக்கமான மாற்றங்களையும் அடைகின்றன. நிலப்பிரபுத்துவ காலகட்டக் காதலும் முதலீட்டியக் காலகட்டக் காதலும் வேறுபட்டவை. ஆனால் ஆசிரிய மாணவ உறவு எப்போதுமே காலாதீதமானது.

# (13) அறிவியல்கல்வியும் கலைக்கல்வியும்

அன்புள்ள ஜெ.எம்

நான் முறையாக ஒரு பொறியாளர். பொறியியல் படித்த பிறகு இப்போது ஒரு நிறுவனத்தில் வேலைபார்க்கிறேன். இந்த வேலைக்கு வருவதுவரை நான் எதைப்பற்றியும் சிந்தனையே செய்ததில்லை. இப்போது எனக்கு நல்ல சம்பளம் உண்டு. சிறைவான வாழ்க்கைதான். ஆனால் எனக்கு இந்த வேலையில் இருக்கவே முடியவில்லை. ஏன் இந்த வேலையை பார்க்கவேண்டும் என்ற எண்ணம்தான் இருக்கிறது. பொறியியல் படிப்பு படிக்கும்போது நானெல்லாம் கடுமையாக உழைத்து படித்தேன். மற்ற கலைப்படிப்பு மாணவர்கள் எல்லாம் சுதந்திரமாக இருந்தார்கள். அவர்களுக்கு படிப்பதற்கு பெரிதாக ஒன்றும் இல்லை. நான் அவர்களைப்பற்றி மதிப்பாக நினைத்தது கிடையாது. நான் படிப்பதுதான் உருப்படியான படிப்பு என நினைத்தேன். ஆனால் இன்றைக்கு சந்தேகமாக இருக்கிறது. திரும்பத்திரும்ப ஒரேபோல மெக்கானிக்கலான வேலையைச் செய்துகொண்டிருக்கிறேன். இதிலே அறிவுக்கு ஒரு இடமும் இல்லை. இதற்காகவா இந்த உழைப்பு என்று நினைப்பு வருகிறது

ஆனால் என்னுடைய தோழர்களுக்கு பிரச்சினையே இல்லை. அவர்களுக்கு வேலையும் சனிக்கிழமை கொண்டாட்டமும்தான் வாழ்க்கை. எதைப்பற்றியும் உருப்படியாக எதுவும் தெரியாது. நெட்டில் மேய்ந்து சில தகவல்களை தெரிந்து வைத்திருக்கிறார்கள். சினிமா என்றால் ஹாலிவுட் சினிமா. சங்கீதம் என்றால் அதேமாதிரி அமெரிக்க சங்கீதம். பேஷன். கொஞ்சம் மேலோட்டமான அரசியல். எல்லாவற்றையும் கிண்டலும் நக்கலுமாக பேசிக்கொள்வது. டிவிட் செய்வது .எஸ்ஸெம்மஸ் அனுப்புவது. எல்லாரும் தன்னம்பிக்கையுடன் இருக்கிறார்கள். ஒன்றுமே தெரியாமல் இருக்கிறோம் என்பதே தெரியவில்லை. இவர்களுடன் சேர என்னால் முடியவில்லை

சிலசமயம் நான் இதையெல்லாம் உதறிவிட்டு என்னுடைய மூளைக்கு சவாலான ஏதாவது துறைக்கு போனால் என்ன என்று நினைப்பேன். ஆனால் அதற்கு இனிமேல் வாய்ப்பு இல்லை என்றும் எனக்கு படுகிறது. என் வடது 32. குடும்பம் இருக்கிறது. எப்படியோ இங்கே வந்து மாட்டிக்கொண்டேன். இந்த வேலைக்கு எதற்கு இவ்வளவு படிப்பு? நண்பர்களிடம் பேசினால் என்ன

சொல்கிறார்கள் என்றால் நாம்தான் கிரீம் என்று. கிரீமே இப்படி என்றால் தமிழ்நாட்டிலே அறிவுத்துறை என்றால் ஒன்று உள்ளதா? நான் இதை விட்டு வெளியேறலாமா?

சிவா ராம்சந்தர்

அன்புள்ள சிவா

நீங்கள் சொல்வது உண்மைதான், இந்தியாவில் அறிவியல்மாணவர்கள் கலைப்படிப்பு மானவர்களை விட கடுமையாக உழைக்கவேண்டியிருக்கிறது. அறிவியல் மாணவர்களை விட தொழில்நுட்ப படிப்பு மாணவர்கள் அதிகமாக உழைக்கிறார்கள். ஆகவே அந்த துறைகளைச் சேர்ந்தவர்கள் தங்களை முதல்தரத்தினர் என நினைத்துக்கொள்கிறார்கள்

உண்மையில் நம்முடைய படிப்புகள் இங்கே கையாளப்படும் விதம்தான் அந்த வேறுபாட்டை உருவாக்குகிறது. சரியான முறையில் கற்பிக்கப்பட்டால் கலைக்கல்விக்குத்தான் மிக அதிகமாக படிக்கவேண்டியிருக்கும். இலக்கியம், வரலாறு, சமூகவியல், பொருளாதாரம் போன்ற துறைகளில் உண்மையில் வரையறுக்கப்பட்ட பாடத்திட்டமே இருக்கமுடியாது. காரணம் அவை கருத்துநிலைகளைப்பற்றிய, கருத்தியல்களை பற்றி படிக்கின்றன. அவை ஒவ்வொரு வருடமும் வளர்ந்து உருமாறிக்கொண்டிருக்கின்றன. புதியபுதிய கொள்கைகள் உருவாகிக்கொண்டிருக்கின்றன. யோசித்துப்பாருங்கள். இன்றைய பொருளியல்படிப்பு உண்மையில் இன்றைய பொருளியலை படிப்பதாக இருந்தால் அதைவிட சிக்கலான,சவாலான ஒரு படிப்பு இருக்கமுடியுமா?

ஆனால் இங்கே உள்ளது மனப்பாடக்கல்வி. நம் கல்விநிலையங்களில் குறிப்பிட்ட சில பாடங்களை வைத்து அவற்றை மனப்பாடம் செய்து அவற்றுக்குள் இருந்து கேட்கப்படும் கேள்விகளுக்கு அந்தப்பாடங்களைக்கொண்டே பதில் சொன்னால்போதும் என்ற நிலை உள்ளது. அப்படி கச்சிதமான பதில் சொல்லும் மாணவர் சிறந்தவராக மேலே எழுந்து வருகிறார். ஆகவே கலைக்கல்வி படிக்காமல் கடைசிநிமிடத்தில் ஒப்பேற்றவேண்டிய ஒன்றாக ஆகிவிட்டது. ஒரு புத்தகம் கூட படிக்காமல்

பொருளியலில் இலக்கியத்தில் வரலாற்றில் முதுகலை பட்டம் பெற்று வெளிவர முடிகிறது.

இன்றுகூட இக்கல்வியை கல்லூரிப்பாடத்திட்டத்துக்கு வெளியே தானாக முனைந்து வாசிக்க முயலும் மாணவர்கள் இரவுபகலாக வாசித்துக்கொண்டிருக்கவேண்டிய நிலைதான் உள்ளது. ஒரு சாதாரண சமூக நிகழ்வை புரிந்துகொண்டு சமூகவியல்கோட்பாடுகளுடன் இணைத்துக்கொள்ள பலகோணங்களில் பற்பலநூல்கள் வழியாக அதை அணுகியாகவேண்டும். ஏன், தமிழிலக்கியத்தை ஒருவன் முறையாகவும் முழுமையாகவும் முதுகலை படிப்புக்குள் படித்து முடிக்கவேண்டும் என்றால் அவன் படிக்கவேண்டிய, உள்வாங்கவேண்டிய நூல்கள் எவ்வளவு? குறைந்தது ஐந்நூறு நூல்களாவது வரக்கூடும்.

அடுத்தபடியாகவே அறிவியல் கல்வி. அதுவும் பாடத்திட்டத்தின் எல்லைக்குள் உள்ளது. ஆனாலும் அதில் இங்கே அடிப்படை தகவல்களை மனப்பாடம் செய்தாகவேண்டிய கட்டாயம் உள்ளதனால் படிப்பு 'சுமை' அதிகம். என் மனைவியில் வேளாண்மை இளங்கலை பாடத்திட்டத்தை பாத்திருக்கிறேன். நூற்றுக்கணக்கான பக்கங்களுக்கு செடிகள், பூச்சிகள், பூச்சிக்கொல்லிகள் மற்றும் விதைகள் பற்றிய வெறும் தகவல்கள். மிகக்குறைவாகவே கொள்கைகளும் கோட்பாடுகளும் இருந்தன. அதாவது புரிந்து உள்வாங்கிக்கொள்ளவேண்டியவை மிகக்குறைவு.

பொறியியல், மருத்துவப்படிப்புகள் இதைவிட அதிகமான வெற்றுத் தகவல்குவியல் கொண்டவை.செய்து பார்க்கவேண்டியவையும் இருப்பதனலால் 'சுமை' இன்னும் அதிகமாக ஆகிறது. ஆனால் நான் கவனித்தவரை கருத்துநிலைகளும் கருத்தியல்களும் மிகமிகக் குறைவாகவே இப்படிப்புகளில் உள்ளன. சுயமாக சிந்திக்கவேண்டிய சவால்ம் அனேகமாக இருப்பதில்லை. தெரிந்துகொண்டாகவேண்டியவையே உள்ளன.

ஆகவே உண்மையில் சரியானபடி கற்பிக்கப்பட்டால் கல்வியில் இவற்றின் முக்கியத்துவம் நேர் தலைகீழ் வரிசையில் இருந்தாகவேண்டும். இவற்றுக்குச் செலுத்தப்படும் உழைப்பும் அதே வரிசையில் இருந்தாகவேண்டும். சமூகத்தின் மிகச்சிறந்த மூளைகள் முதலில் கலைக்கல்விக்கும் அதன்பின் அறிவியலுக்கும்தான் செல்ல வேண்டும். ஏனென்றால் ஒரு சமூகத்தின் கனவுகளை வடிவமைப்பவன், கொள்கையை

வகுப்பவன் கலைக்கல்வி கற்று வெளிவருபவனே. நானறிந்தவரை வளர்ந்த நாடுகளில் அந்நிலைதான் உள்ளது.

இங்கே அப்படி இல்லை என்பதனால்தான் நாம் வெறுமே தொழில்நுட்ப ஊழியர்களை மட்டும் உற்பத்தி செய்யும் சமூகமாக இருக்கிறோம். அந்த ஊழியர்களை நம் நாட்டுக்காக பயன்படுத்திக்கொள்ள நமக்கு தெரியவில்லை. அவர்களை ஏற்றுமதிசெய்து சம்பாதிக்க மட்டுமே முடிகிறது.

என்ன சிக்கல் என்றால் நம்முடைய மிகச்சிறந்த மாணவர்கள் இளமையிலேயே தொழில்நுட்பக் கல்விக்கு ஆற்றுப்படுத்தப்படுகிறார்கள். அதன் தகவல்களை மூளைக்குள் நிரப்பவும் திருப்பி கக்கவும் பயிற்றுவிக்கப்படுகிறார்கள். காலப்போக்கில் அவர்களின் புரிதல்திறன் மிகமிக குறைவாக ஆகிறது. ஒரு அசலான கருத்தை புரிந்துகொள்ளவே அவர்களில் மிகப்பெரும்பாலானவர்களால் முடிவதில்லை. அவர்களால் தகவல்களை மட்டுமே உள்வாங்க முடியும். தகவல்களை மட்டுமே சொல்லமுடியும். தகவல்களை மட்டுமே விவாதிக்கவும் முடியும். ஒருபோதும் கருத்துக்களை நோக்கி வரமுடிவதில்லை.

இதனால் இவர்களின் ரசனையும் தர்க்கத்திறனும் பரிதாபகரமானவையாக உள்ளன. நான் பார்த்தவரையில் இங்குள்ள மருத்துவர்கள் அளவுக்கு ரசனை மழுங்கிய ,மூளைத்திறன் குறைந்த மனிதர்களே இல்லை. ஒரு சராசரி மருத்துவரிடம் நம்முடைய நோய் தவிர எதைப்பற்றியும் பேசமுடியாது. சிலசமயம் ரயிலில் ஒரே கூபேயில் அவர்களுடன் பயணம்செய்ய நேரும். அவர்கள் பேச்சைக்கேட்டால் ரயிலை விட்டு இறங்கி ஓடிவிடத்தோன்றும். சமீபத்தில் எர்ணாகுளம் சென்றபோது கூபேயில் ஓர் இருதயநிபுணருடன் பயணம்செய்தேன். ஒரு கட்டத்தில் அவருக்கு ஏதாவது மூளைவளர்ச்சி பிரச்சினை உண்டா என்றுகூட ஐயப்பட்டேன்.

அடுத்தபடியாக பொறியியலாளர்கள், கணிப்பொறியாளர்கள். பெரும்பாலும் அவர்களை சுந்தர ராமசாமி சொன்னது போல 'அறியாமை மட்டுமே அளிக்கும் பரிசுத்தமான தன்னம்பிக்கை கொண்டவர்கள்' என்றே சொல்லமுடியும். அவர்களுக்கு அவர்களின் துறைசார்ந்த அடிப்படைத்தகவலறிவு தவிர எதுவுமே தெரியாது.அந்த துறையிலேயே கருத்துக்களை, கோட்பாடுகளை, புதியநகர்வுகளை மிகச்சிலர் தவிர பிறரால் புரிந்துகொள்ள முடியாது. அதற்கான அறிவுப்பயிற்சியே அவர்களிடம் இல்லை.

ஆனால் தாங்கள் உயர்கல்வி கற்றவர்கள், அறிவுஜீவிகள் என்ற நம்பிக்கையும் அவர்களிடம் இருக்கும். ஆகவே எதையும் ஏளனம் செய்ய, அலட்சியம் செய்ய அவர்களால் முடியும். எதிலும் துணிந்து கருத்துச்சொல்ல அவர்களால் முடியும். இத்தகைய இளைஞர்களை நாம் உருவாக்கி எங்கும் நிரப்பிக்கொண்டிருக்கிறோம்.

சிலரே உங்களைப்போல சுய விமர்சனம் செய்து பார்க்க முடிகிறது. ஆனால் அதற்குள் காலம் கடந்துசெல்கிறது. நீங்கள் கேட்டதற்கு என் பதில் நடைமுறையில் இனி ஒன்றும் செய்யமுடியாதென்பதே. முப்பது வயதுக்குள்தான் எந்த துறையினாலும் அதன் அடித்தூர் பற்றி மேலேறிச்செல்லும் மன ஆற்றல் இருக்கிறது. இலக்கியவாதி என்றால்கூட முப்பது வயதுக்குள்தான் கிளாஸிக்குகளை வாசித்து உள்வாங்க முடிகிறது. அசாதாரணமான சிலரால் எல்லைகளை மீறிச்செல்லமுடியும் . சாதாரணமாக சாத்தியமில்லை.

## (14) அணையாவிளக்கு

சமீபத்தில் ஒரு சிறிய நண்பர் குழாமில் பேசிக்கொண்டிருந்தோம். அவர்கள் எல்லாம் அதிகம் வாசிக்கும் பழக்கமற்ற நண்பர்கள், ஆனால் உண்மையாகவும் தீவிரமாகவும் சமூகக் களப்பணியாற்றக்கூடியவர்கள். ஊடகம் பற்றி பேச்சுவந்தது. நான் இந்தியச்சூழலில் எந்த ஒரு ஊடகமும் உண்மையான சுதந்திரத்துடன் செயல்பட முடியாதென்றும், ஊடகவியலாளர்களுக்கு இருப்பதாக அவர்கள் நம்பும் சுதந்திரம் என்பது ஒரு மாயையே என்றும் சொன்னேன்.

உதாரணமாக எந்த ஊடகவியலாளரும் மதுரை தினகரன் அலுவலகத்தில் நிகழ்ந்த கொலையைப்பற்றி இன்று எழுதிவிடமுடியாது. அடித்தால் அலறுவது எந்த உயிருக்கும் உள்ள உரிமை. அடையாளமில்லாமல் அலையும் ஒரு நாடோடி மனிதனைக்கூட இன்று எளிதாக தாக்கமுடியாது, அவர்கள் கத்தி ஆர்ப்பாட்டம் செய்து ஊரைக்கூட்டுவார்கள். அந்த உரிமைகூட இல்லாதவர்கள் நம் ஊடகவியலாளர்கள். அந்தக்கூட்டமா இந்தியாவைக் காப்பாற்றும் என நாம் நம்புகிறோம் என்றேன்.

ஊடக முதலாளிகளுக்கும் அந்த சுதந்திரம் இல்லை. அவற்றுக்கான முதலீட்டை பெருந்தொழிலதிபர்கள் மட்டுமே செய்ய முடியும். அவர்களின் தொழில்கள் மீது இந்திய அரசுக்கு இருக்கும் முழுமையான அதிகாரம் அவர்களை முழுமையாகவே கட்டுப்படுத்தும், அவர்கள் அனுமதிக்கப்பட்ட எல்லைக்கு அப்பால் செல்ல முடியாது என்றேன்.

அப்படியென்றால் இணையம் ஒரு நல்ல ஊடகம் அல்லவா என்று என்னிடம் கேட்டார்கள். நான் அது உண்மை என்றேன். இன்றிருக்கும் நிலையில் இணையம் சுதந்திரமான ஊடகம். அது நேரடியான கட்டுப்பாடு ஏதும் இல்லாதது. செலவு இல்லாதது. ஆகவே அதை சுதந்திரமாக செயல்படச்செய்ய முடியும். பலநாடுகளில் இணையம் சுதந்திர ஊடகமாக பெரும்பணிகளை ஆற்றியிருக்கிறது. ஆனால் – என்றேன்.

நண்பர்கள் 'எதற்கும் ஒரு ஆனாலை சொல்லி விடுகிறீர்கள்' என்றார்கள். '...இந்த ஆனால் மிக அடிப்படையான ஒரு நடைமுறைச்சிக்கல்' என்றேன்.

'இணையத்தை பயன்படுத்துபவர்களில் பெரும்பாலும் அனைவருமே படித்தவர்கள். அதுவே அதன் பிரச்சினை.'

நண்பர்களுக்கு நான் என்ன சொல்கிறேன் என்றே புரியவில்லை. 'படித்தவர்கள் இணையத்தில் இருக்கிறார்கள் என்றால் அது நல்லதுதானே?' என்று ஒருவர் கேட்டார். அவர் ஒரு கிறித்தவ போதகர். நான் பார்த்ததிலேயே எளிய மனிதர். அவருக்கு அப்படித்தான் கேட்கவரும். 'நீங்கள் ஒரு மாதம் நம் இணையச்சூழலில் உலவுங்கள். நமது படித்த வர்க்கம் எப்படிப்பட்டது என்று தெரியவரும்' என்று சொன்னேன். 'ஆனால் அதைத் தவிர்ப்பதே நல்லது. அதன்பின் நீங்கள் கிறிஸ்துவை அணுகமுடியாது.'

நாம் படித்தவர்கள் என்று சொல்லக்கூடிய இந்த மக்கள்திரள் எப்படிப்பட்டது? நாம் அதை ஒட்டுமொத்தமாக, புறவயமாக அணுகக்கூடிய ஒரு வாய்ப்பை இணையம் நமக்கு உருவாக்கியளிக்கிறது. அதிலிருந்து வரும் நமது மனப்பிம்பம் என்ன? இங்கே இணையத்தில் உலவக்கூடிய பலர் இருக்கிறீர்கள். கடந்த பத்தாண்டுகளில் நான் வந்தடைந்துள்ள மனச்சித்திரத்துக்கு மாறான சித்திரமுள்ள எவரேனும் இங்கே இருக்கிறீர்களா?

நமக்கு இணையம் ஒரு சுதந்திரவெளியை அளிக்கிறது. அந்தவெளியில் நாம் ரகசியமாகச் செயல்படும் வாய்ப்பையும் அளிக்கிறது. இவ்விரண்டையும் நம்முடைய படித்த இளையதலைமுறை எப்படிப் பயன்படுத்திக்கொள்கிறது?

தமிழில் ஓரளவேனும் தீவிரமான விஷயங்களை வெளியிடும் இணையதளங்களை விரல்விட்டு எண்ணிவிடலாம். அவற்றை வாசிப்பவர்கள் மிகச்சிறுபான்மையினர். மிகப்பெரும்பாலான இணையவாசகர்கள் வாசிக்கும் இணையதளங்கள் சினிமா அரட்டைகள், கிசுகிசுக்கள், வம்புச்சண்டைகள் மட்டுமே நிரம்பியவை.

நண்பர்களே, முன்பு ஒரு பேச்சு இருந்தது. குமுதமும் விகடனும் எல்லாம் மக்களின் ரசனையை சீரழிக்கின்றன என்று. இன்று நம் மக்களுக்கு அவர்களே தங்கள் இதழ்களை உருவாக்கிக் கொள்ள வாய்ப்பளிக்கையில் குமுதத்தையும் விகடனையும் விட பலமடங்கு கீழ்த்தரமான இணைய தளங்களைத்தான் உருவாக்கி வாசிக்கிறார்கள். நம்மை குமுதமும் விகடனும் கெடுக்கவில்லை, நாம்தான் அவற்றை கெடுத்து

குட்டிச்சுவராக்கினோம். இன்னும் இன்னும் கீழே வா என்று நம் படித்த இளையதலைமுறை நமது ஊடகங்களிடம் சொல்லிக்கொண்டிருக்கிறது.

எனக்கு வரும் எதிர்வினைகளில் இருந்து ஒன்றை கவனிக்கிறேன். மிகப்பெரும்பாலான இணையவாசகர்களால் நாலைந்து பத்திகளுக்கு மேல் வாசிக்க முடியாது. அந்த மொழிநடை அரட்டைபோல இருக்கவேண்டும். மிகச்சாதாரணமாக, துண்டுதுண்டாக சொல்லப்பட்டிருக்கவேண்டும். அதாவது கொஞ்சம் கூட தீவிரமோ கனமோ இருக்கக்கூடாது. அவர்களுக்குத் தெரிந்த, அவர்கள் பேசிக்கொண்டிருக்கும் அரட்டைபோல அது இருக்கவேண்டும்.

எந்த ஒரு கருத்தையும் ஒன்றிரண்டு வரிகளுக்கு மேல் உள்வாங்கிக்கொள்ள இவர்களால் முடியாது. எதை எப்படி விரிவாகச் சொன்னாலும் அதிலிருந்து ஒற்றைவரியை உருவி அதை மட்டும் புரிந்துகொள்வார்கள். எதையும் அதன் சாதகபாதக தளங்களை ஒப்பிட்டு தர்க்கபூர்வமாக புரிந்துகொள்ள இவர்களுக்கு ஆற்றலில்லை. அவர்கள் எழுதும் இணையப்பதிவுகளையும் அவர்கள் அளிக்கும் எதிர்வினைகளையும் பார்க்கையில் அவர்களின் சிந்தனைத்திறன் மீது ஆழமான சந்தேகம் வந்தபடியே இருக்கிறது.

இன்னொரு அம்சம், அவர்களுக்கு எந்தப் பிரச்சினையிலும் உண்மையான ஈடுபாடில்லை என்பதுதான். ஈடுபாடில் இருந்துதான் அறிந்துகொள்ளும் ஆர்வம் பிறக்கிறது. அந்த ஆர்வமில்லாத நிலையில் அவர்கள் இணையத்திற்கு வருவது வெறும் பொழுதுபோக்குக்கு மட்டுமே. வேலையிலும் குடும்பத்திலும் அவர்கள் அடையும் மன அழுத்தங்களுக்கான வடிகால்தான் இது. வெறுமே வேடிக்கை பார்த்து அரட்டையடிப்பவர்கள் கணிசமானவர்கள்.

இன்னொரு சாரார் உக்கிரமாக உள்ளே புகுந்து கண்டபடி வசைபாடி அவதூறுசெய்து தாறுமாறாக நக்கலடித்து உளவியல் வன்முறையில் ஈடுபடுபவர்கள். இணையம் இன்று இவர்கள் உலவும் காடு. உங்கள் வீட்டுப்பெண்களையோ குழந்தைகளையோ நீங்கள் இந்தத் தமிழ் இணைய உலகுக்கு அறிமுகம் செய்ய மாட்டீர்கள். இன்று இணையத்தில் பெண்கள் அவர்களின் சுய அடையாளத்துடன் புழங்கவேமுடியாது. எங்கள் நிகழ்ச்சிகள் முடிந்தபின் அவற்றில் பங்குபெற்ற பெண்களின் படங்களை புகைப்படங்களிலிருந்து நீக்கித்தான் வெளியிடுகிறோம். நம் இணையப்புலிகள் சென்ற காலங்களில் செய்த கீழ்த்தரவேலைகளினால்

பெண்கள் அந்த அளவுக்கு அஞ்சுகிறார்கள். திருப்பூர் பேருந்து நிலையத்தில் நடு இரவில் பெண்களுக்கிருக்கும் பாதுகாப்புகூட தமிழ் இணையச்சூழலில் கிடையாது.

இவர்களெல்லாம் யார்? நம்மைப்போல சாதாரண மக்கள். குடும்பமும் வேலையும் உடையவர்கள். இணையத்தில் அவர்களின் கௌரவமான சமூக முகத்தை கழட்டிவிட்டு மனநோயாளிகளாக உலவுகிறார்கள். இப்படி இணையத்தில் பெண்களை அவமதித்த மூர்த்தி என்ற ஒருவனை புகாரின் அடிப்படையில் போலீஸார் பிடித்தபோது கதறியழுது தன் வாழ்க்கையை அழித்துவிடவேண்டாம் என்று அவன் கெஞ்சினானாம். அவனைப் போன்றவர்களே இதையெல்லாம் செய்கிறார்கள்.

சமீபத்தில் பிரபலமான பாடகி ஒருவர் இணையதளத்தில் பொதுத்தொடர்புக்கு வந்தபோது இணையத்தின் இந்த முரட்டுமூடர்கள் அந்தப்பெண்ணை வசைபாடி, அவதூறுசெய்து, மிரட்டி சிறுமைசெய்தனர். ஆபாசப்படங்கள் வெளியிடுவதாக மிரட்டினர். அவரது தாயை ஆபாசமாக வசைபாடினர். பொறுமை மிஞ்சிய ஓர் எல்லையில் காவல்துறைக்குச் சென்று அந்தப்பெண் புகார் கொடுக்க நேர்ந்தது. ஆறுபெயர்களையும் சின்மயி குறிப்பிட்டிருக்கிறார். அவர்களை காவலர் கைதுசெய்திருக்கின்றனர்.

இணையத்தில் மலினத்தைக் கொட்டும் பலநூறுபேரில் சிலர் இந்த ஆறுபேரும். இதுவரை இணையம் அளித்த சுதந்திரத்தில் இவர்கள் இப்படி கீழ்மையில் திளைத்தார்கள். ஒரு சாலையிலோ வணிகவளாகத்திலோ இந்த அற்பர்கள் கௌரவமான வேடத்தில்தான் உலவ முடியும். இணையத்தில் அந்த பாவனையே தேவையில்லை. ஆம், இன்றும் இதுதான் நம் இணையச்சூழல். உங்கள் வீட்டுப்பெண்ணின் படம் குமுதத்தில் வரலாம். ஆனால் இணையத்தில் வரமுடியாது. உங்கள் வீட்டுப்பெண் ஒரு பேருந்துநிலையத்தில் நள்ளிரவில் நின்றிருக்க முடியும், இணையத்தில் முடியாது.

பொதுவாக நாம் நம்முடைய சமூகதளத்தில் சில மதிப்பீடுகளை கடைப்பிடிப்போம். ஓர் அன்னியப்பெண்ணிடம் பேசுவதில் நமக்கென ஓர் எல்லையை கொண்டிருப்போம். நம் வீட்டுப்பெண்ணிடம் பிறர் அப்படிப் பேசவேண்டும் என நினைப்போம். ஆணாதிக்க வெறியோ பாலியல்காழ்ப்போ நமக்குள் இருந்தாலும்கூட அதை பொதுமேடையில்

காட்டாமலிருக்கும் பாவனையாவது நம்மிடம் இருக்கும். இணையத்தில் இயங்கும் இந்த அற்பர்களுக்கு அந்தத் தடைகள்கூட இல்லை. கிட்டத்தட்ட பண்பாடற்ற மிருகங்களாகவே செயல்படுகிறார்கள்.

இந்த மனச்சிக்கலுக்கு ஏதாவது கொள்கைமுலாம் பூசிக்கொண்டால் அதற்கான கும்பலைச் சேர்த்துவிடலாம் என்பதை இவர்கள் கண்டடைந்திருக்கிறார்கள். குறிப்பாக வசைபாடியான ஈவேராவின் பெயரைச்சொல்லும் ஒருவர் எந்தக்கீழ்மையிலும் துணிந்திறங்கலாம். அவர் எங்கிருந்தாவது ஈவேராவின் வரிகளை தனக்குத் துணையாக இழுத்துக்கொண்டு வந்துவிடமுடியும்.

ஆம், தமிழைப்பொறுத்தவரை இணைய ஊடகமென்பது பிற ஊடகங்களை விட மிகமிக கீழ்த்தரமானதாக இருக்கிறது. இணையவெளி என்பது நம்முடைய சமூகவெளியைவிட பண்பாடற்றதாக உள்ளது. நமக்கு நவீனத் தொழில்நுட்பம் அளித்த மாபெரும் வாய்ப்பை நம்முடைய மனநோய்க்கூறுகளை வெளிப்படுத்தும் ஒரு கழிப்பறையாக நாம் ஆக்கிக்கொண்டுவிட்டோம்.

படித்தவர்கள் என நாம் சொல்லும் இந்த அசட்டுப் பாமரர்களுடன், நாகரீகமில்லா கும்பலுடன் மட்டுமே இணையம் பேசமுடிகிறதென்பதே இணையத்தின் மிகப்பெரிய பலவீனம். அடிப்படையில் அது பயனற்ற ஒன்றாக இன்று இருப்பதன் காரணமும் இதுவே.

இன்றைய தமிழ்ச்சூழலில் ஓர் ஊடகம், எளிய படிக்காத மக்களிடம் தொடர்பு கொள்ளமுடியவில்லை என்றால் அதனால் பெரிய பயனேதும் இல்லை. ஏனென்றால் தமிழகத்தில் படித்தவர்கள் பெரும்பாலும் சுயநலமும் மனச்சிக்கல்களும் கொண்ட கோழைகளாக மட்டுமே இருக்கிறார்கள். அவர்களிடம் எந்த ஒரு சமூக, அரசியல், அறம்சார் பிரச்சினைகளையும் பேசிவிட முடியாது. அவர்கள் செவிகொடுப்பதில்லை. போலியாக மட்டுமே எதிர்வினையாற்றுவார்கள்.

இங்கே எழக்கூடிய முக்கியமான வினா இதுதான். இப்படி இவர்களை ஆக்கியது எது? திரும்பத்திரும்ப ஒன்றைத்தான் அனைத்து சமூக ஆய்வாளர்களும் சமூகச்செயல்பாட்டாளர்களும் சொல்வார்கள். இங்கே நமக்களிக்கப்படும் கல்வியின் அடிப்படையானது பிரிட்டிஷ் காலத்தில் வரையறை செய்யப்பட்டது. அதை நாம் ‘கருங்காலிக்கல்வி’ என்று

சொல்லலாம். சொந்த சமூகத்துக்கும் சொந்த மக்களுக்கும் எதிரான ஒரு மக்கள் கூட்டத்தை உருவாக்கும்நோக்குடன் வடிவமைக்கப்பட்ட கல்வி அது.

அந்தக்கல்வியை பெறும் ஒருமனிதர் முதலில் தன்னை தம்மைச் சார்ந்த பிறரிடமிருந்து வேறுபடுத்திக் கொள்கிறார். தான் அவர்களைவிட மேல் என்றும் அவர்களிடமிருந்து கூடுமானவரை விலகியிருப்பதே தனக்கு கௌரவம் என்றும் நினைக்க ஆரம்பிக்கிறார். ஒரு படித்த மனிதன் எவ்வகையிலும் அவனுடைய சமூகத்தை பிரதிநிதித்துவம் செய்வதில்லை. அதற்காக அவன் அக்கறை காட்டுவதில்லை, போராடுவதில்லை. அதை சுரண்டுவதற்கும் அடக்கியாள்வதற்கும் அவனை பிறர் உரிய கூலிகொடுத்து எளிதில் பயன்படுத்திக்கொள்ளலாம். அவன் படிப்பின்மூலம் துரோகியாக, கருங்காலியாக மட்டுமே உருவாகிறான்.

படித்த பிள்ளைகள் படிக்கவைத்த பெற்றோரை காட்டுமிராண்டிகளாக எண்ண ஆரம்பிக்கின்றன. படிக்கும்தோறும் அந்தப்பிள்ளைகளுக்கும் பெற்றோருக்குமான இடைவெளி அதிகரித்து ஒருகட்டத்தில் அவர்கள் நடுவே ஓர் தொடர்பே நிகழாத நிலை உருவாகிவிடுகிறது. சென்றகாலங்களில் ஆண்களைப்பற்றி இந்தக் குறையை எல்லாரும் சொல்லிவந்தனர் .இப்போது படித்த பெண்களைப்பற்றிய மனவருத்தங்களையே அதிகமாகக் காண்கிறோம்.

ஆங்கிலக்கல்வியை கூர்ந்து அவதானித்த காந்தி பதிவுசெய்யும் முதல் விஷயமே இதுதான். இன்று இக்கணம் வரை நமது கல்விமுறை உருவாக்குவது இந்த மனநிலையைத்தான். இதற்கான மாற்றுக்களை அவர் தொடர்ந்து சிந்தித்திருக்கிறார். காந்தியக் கல்வி என்று சொல்லும் ஒரு வழிமுறையை உருவாக்கும் முன்முயற்சிகளை அவர் கண்டடைந்திருக்கிறார். அதைத்தொடர்ந்து பலர் சிந்தித்திருக்கிறார்கள்.

காந்தி நமக்கு பிரிட்டிஷார் உருவாக்கியளித்த கல்வியை ஒரு வெறும் மூளைப்பயிற்சி என்று நினைக்கிறார். ஒரு நல்ல குமாஸ்தாவாக உருவாவதற்கு அவசியமான மொழித்தேர்ச்சியையும் அடிப்படைத் தகவல்களையும் மூளைக்குள் திணிக்கும் பயிற்சி மட்டுமே. அதை நாம் கல்வி [education] என்று தவறாகச் சொல்கிறோம். அது வெறும் பயிற்சி [Training]தான்.

கல்விக்கும் பயிற்சிக்குமான வேறுபாடு என்ன? பயிற்சி என்பது எப்போதுமே ஏதேனும் ஒரு அம்சத்தில் மட்டுமே அடையப்பெறும் தேர்ச்சிதான். யானையை முக்காலியில் உட்காரவைக்க சர்க்கஸில் அளிக்கப்படுவது பயிற்சி. மனிதனை பதவிகளில் அமரச்செய்யவும் அதுதான் அளிக்கப்படுகிறது.

பயிற்சி என்பது திரும்பத்திரும்பச் செய்யப்படுவதன்மூலம் மனதுக்கோ உடலுக்கோ கைவரும் ஒரு பழக்கம். தட்டச்சுப்பயிற்சி என்கிறோம். வண்டிமாடு நுகத்திற்குப் பழகுவதை பயிற்சி என்கிறோம். நாம் நம் கல்விச்சாலைகளில் அளிப்பதும் இதுவே. கணிப்பொறியாளராக ஆவதற்கான பயிற்சி. பொறியியலின் ஏதேனும் ஒருபகுதியில் பயிற்சி. மருத்துவப்பயிற்சி.

பயிற்சி ஒருபோதும் ஆளுமையுருவாக்கத்தில் பங்கெடுப்பதில்லை. ஒரு குறிப்பிட்ட பயிற்சியை அதிதீவிரமாக எடுக்கும்போது உண்மையில் ஆளுமையில் ஒரு கோணல்தான் உருவாகிறது. பிற எதுவுமே தெரியாத ஓர் அசட்டுப்பிறவியாக அது மனிதனை ஆக்கிவிடுகிறது. இன்றைய நம் உயர்கல்விபெற்ற இளைஞர்களில் பெரும்பகுதியினரைப் பார்த்தாலே இது தெரியும். ஓர் அடிப்படை ஆளுமைத்திறன்கூட இல்லாத அற்பர்கள் அல்லது அசடுகள் அவர்கள்.

சுதந்திர இந்தியா தன்னுடைய கல்வியை பொருளியல் வளர்ச்சியை மட்டுமே கருத்தில்கொண்டு வடிவமைத்தது. அதற்கு பழைய பிரிட்டிஷ்பாணி கல்விமுறையில் கூடுமானவரை தொழில்நுட்பப் பயிற்சியை சேர்த்துக்கொண்டால் போதும் என முடிவெடுத்தது. சென்ற ஐம்பதாண்டுக்கால நம் கல்விச் சீர்திருத்தங்களைப் பார்த்தால் ஒருங்கிணைந்த கல்வி, ஆளுமைத்தேர்ச்சி என்றெல்லாம் பேச்சுகள் இருந்தாலும் நடைமுறையில் தொழில்நுட்பம் சார்ந்த தகவலறிவை அதிகரிப்பதன்றி வேறெந்த இலக்கும் அவர்களிடமில்லை என்பதைக் காணலாம்.

விளைவாக தொழில்நுட்பப் பயிற்சி அன்றி எந்தக் கல்வியும் இல்லாத ஒரு தலைமுறையையே உருவாக்கி நம்மைச்சுற்றி நிறைத்துவிட்டிருக்கிறோம். அவர்களைத்தான் நாம் இன்று இணையத்தில் கண்டுகொண்டிருக்கிறோம்.

கல்வி என்பது பயிற்சியில் இருந்து வேறுபடுவது ஒரு அடிப்படை இயல்பால்தான். கல்வி ஒருபோதும் குறைபட்டதாக இருக்கமுடியாது. கல்வி என்பது முழுமையானதாக, ஆளுமையை வளர்ப்பதாக மட்டுமே இருக்கமுடியும். நம்முடைய பல்லாயிரமாண்டுக்கால மரபு சொல்லும் வரையறை இதுவே. சான்றோனை உருவாக்குவதே கல்வி. திறமையுள்ளவனை, தேர்ச்சியுடையவனை உருவாக்குவதல்ல. எது ஒரு மனிதனை முழுமையானவனாக படிப்படியாக மாற்றுகிறதோ அதுவே கல்வி.

பயிற்சிக்கும் கல்விக்குமான அடுத்த வேறுபாடு இங்கேதான் வருகிறது. பயிற்சிக்கு ஓர் எல்லை உண்டு. கல்வி முழுமையை நோக்கிச் செல்வது. முழுமை என்பது முடிவின்மையில் எங்கோ இருக்கும் ஒரு புள்ளி. ஆகவே கல்விக்கு முடிவே இருக்காது. ஓதாமல் ஒருநாளும் இருக்கவேண்டாம் என மரபு அதைச் சொல்கிறது. கடைசிக்கணம் வரை கல்வி நீடித்தாகவேண்டும். கல்விக்காலகட்டம் என ஒன்று இல்லை. கல்வியில் இருந்து வெளியேறும் புள்ளி என எதுவும் உலகியல் வாழ்க்கையில் இல்லை.

இப்படிச் சொல்லலாம். பயிற்சி என்பது செல்பேசி கோபுரங்களை நட்டுவைக்கும் சிமிண்ட் மேடை போன்றது. உறுதியாக ஒருவனை அதில் நட்டு வைக்கிறது. கடைசிவரை அவன் அதுதான். பொறியாளர் பொறியாளர் மட்டுமே. வேறு எவனும் அல்ல. மருத்துவன் எந்நிலையிலும் மருத்துவன் மட்டுமே, நல்ல மனிதனாக ஆவான் என்பதற்குக்கூட ஆதாரமில்லை. ஆனால் கல்வி என்பது ராக்கெட்டின் ஏவுதளம் போல. அது அங்கிருந்து எம்பிப்பறப்பதற்கான ஒரு இடம். தன் மீதமர்ந்தவனை வான் நோக்கி ஏவும் மேடை அது.

கல்வி என்பது உறுதியான திட்டவட்டமான நிராகரிப்பு வழியாக அல்லது தாண்டிச்செல்லல் மூலமாக முன்னகர்கிறது. நான் ஒன்றை அறிந்துகொண்டதும் அதை ஏற்கிறேன் அல்லது நிராகரிக்கிறேன். ஏற்றுக்கொண்ட விஷயத்தை பற்றிக்கொண்டு மேலேறி இன்னும் நுட்பமான இன்னும் தீவிரமான இன்னும் விரிவான விஷயங்களை கற்க ஆரம்பிக்கிறேன். ஏற்றவற்றை கடந்துசெல்கிறேன்.
கல்வி என்பது நம்மை முன்னால் செலுத்திக்கொண்டே இருக்கக்கூடிய எலிவேட்டர் போன்றது. படிகளில் ஏறலாம். சும்மா நின்றாலும் அது மேலேதான் கொண்டுசென்றுகொண்டிருக்கிறது.

நம்முடைய கல்விக்கூடங்களில் கல்வி இல்லை, பயிற்சிதான் உள்ளது. ஆகவேதான் நம் இளைஞர்களால் எதையுமே அறிந்துகொள்ள முடியவில்லை. அவர்களால் மனப்பாடம் செய்ய திரும்பிச்சொல்ல மட்டுமே முடியும். மேற்கோள் காட்டமுடியும். எல்லா தரப்பையும் கருத்தில்கொண்டு சாராம்சத்தை உள்வாங்கி தன்னுடைய முந்தைய அறிதல்களுடன் இணைத்துப் பரிசீலித்து ஓர் ஒட்டுமொத்த அறிதலை உருவாக்கிக் கொள்ள அவர்களால் முடியாது. மிக உயர்ந்த கல்விகற்று மிக முக்கியமான வேலைகளைச் செய்யும் இளைஞர்களிடம் கூட இந்த ஆற்றல் இருப்பதில்லை. ஆகவேதான் நாம் அளிப்பது கல்வியை அல்ல பயிற்சியை மட்டுமே என நான் சொல்கிறேன்.

யோசித்துப்பாருங்கள், நம் பிள்ளைகள் எப்படி வளர்கிறார்கள்? எட்டாம் வகுப்புக்குப் பின் உக்கிரமான வெறிபிடித்ததுபோன்ற மனப்பாடக் கல்வி. டியூஷன் கல்வி. அப்படியே பிளஸ்டூ. அச்சுநகலாக பாடப்புத்தகத்தை திருப்பி எழுதும் பயிற்சி. உயர்கல்வி முடிப்பது வரை இதுதான் நம் கல்வி. இருபத்திரண்டு வயதில் கல்விமுடித்து நேரடியாக வேலை. சம்பளம். ஒரு முழு ஆண்மகனாக ஆகிவிட்டதாக அவனுக்கு நினைப்பு வருகிறது. ஆனால் அவன் மனவளர்ச்சி எட்டாம் வகுப்புடன் நின்றுவிடுகிறது.

நம் இளைஞர்கள் இணையத்தில் எழுதுவதை அவ்வப்போது பார்ப்பேன். அவர்கள் உலகமெங்கும் இருக்கிறார்கள். ஆனால் உலகத்தை அவர்கள் எழுத்தில் பார்க்கமுடியாது. எட்டாம் வகுப்பு படித்துவிட்டு கொத்தனார் வேலைக்குச் செல்லும் பையன்கள் மாலையில் பார்வதிபுரம் முனையில் நின்று பேசும் அதே விஷயங்களைத்தான் அவர்களும் பேசுவார்கள். அதாவது சினிமா. சரி, சினிமாவைத்தான் எப்படிப் பேசுகிறார்கள் என்று பார்த்தால் பரிதாபமாக இருக்கிறது. வணிகசினிமாவை அந்த சினிமாவின் தரத்தைவிட கீழே போய் பிய்த்துப்போடுவதுதான் இவர்களால் முடிகிறது.

இந்த இளையதலைமுறைதான் இன்றைய இந்தியாவின் சாபக்கேடு. சமீபத்தில் அண்ணா ஹசாரேயின் ஊழலுக்கு எதிரான போராட்டம் வேகம்கொண்டபோது தென்னிந்தியாவில் மட்டும் அது எந்த அலையையும் கிளப்பவில்லை. ஏனென்றால் இங்குள்ள படித்த நடுத்தரவர்க்கம் அப்படி ஒரு தார்மீகமான கோபத்தை புரிந்துகொள்ளும் ஆற்றல் கொண்டதே அல்ல. அவர்களுக்கு அண்ணா ஹசாரே ஒரு'காமெடியனாக'த்தான் தெரிந்தார்.

அரைலட்சம் சம்பளம் வாங்கி வார இறுதியில் மப்பபடிக்கும் தங்கள் வாழ்க்கை மிக உயர்வானதாகத் தோன்றியது. கேலிகள் ,கிண்டல்கள்.

அவர்கள் கல்விகற்றவர்கள் அல்ல. பயிற்சி பெற்றவர்கள். ஒரு குறிப்பிட்ட வேலைக்காக பயிற்றுவிக்கப்பட்டு வெளியே அனுப்பப்படும் உயிர்கள். ஒரு திரைப்படத்தில் சர்க்கஸ்புலிகள் இரண்டை அதன் உரிமையாளன் காட்டில் கொண்டுசென்று விட்டுவிடுவான். அவை வளையம் வழியாக பாய மட்டுமே கற்றவை. அது பயிற்சி, கல்வி அல்ல. ஆனால் காட்டுப்புலி தன் குழந்தைக்கு முழுமையான காட்டையே சொல்லித்தந்துவிடுகிறது. காட்டுப்புலிக்குள் இருப்பது காடு. சர்க்கஸ் புலிக்குள் இருப்பது வளையமும் சாட்டையும் மட்டுமே. நம் பிள்ளைகள் சர்க்கஸ்புலிகள்.

அந்த சினிமாவில் சர்க்கஸ்புலிகள் காட்டுக்குள் வாழத்தெரியாமல் ஊர் அருகே ஒண்டிக்கொள்கின்றன. ஊர்மக்களை வேட்டையாட ஆரம்பிக்கின்றன. அவற்றை கடைசியில் வேட்டைக்காரர்கள் சுட்டுத்தள்ளுகிறார்கள். இங்கே நம் சர்க்கஸ்புலிகளும் உண்மையான வாழ்க்கையை அதன் விரிவுடனும் வீச்சுடனும் எதிர்கொள்ளத்தெரியாமல் ஒரு சிறு வட்டத்துக்குள் ஒண்டிக்கொள்கின்றன. அதுதான் இணையவெளி. அங்கே நக்கல்கள் கொக்கரிப்புகள். பாவம், அய்யோ பாவம் என பரிதாபம் நெஞ்சை அடைக்க நினைத்துக்கொள்கிறேன்.

அந்த சினிமாவில் அந்த சர்க்கஸ் புலி குட்டிபோடும் இடம் ஒன்று உண்டு. சர்க்கஸ்புலியை கொல்ல வரும் வேட்டைக்காரன் அது குட்டிபோடுவதைக் கண்டு திரும்பிவிடுவான். அந்தக் குட்டி சர்க்கஸ்புலி அல்ல. அது காட்டுப்புலி. அபாரமான அர்த்தம் அளித்த காட்சி அது. எல்லா குட்டிக்குள்ளும் காடு இருக்கிறது. வளையத்தையும் சாட்டையையும் காட்டி நாம் அதை அழிக்கிறோம்,

மசானபு ஃபுகோகா இயற்கை வேளாண்மையின் தந்தை. அவரது புகழ்பெற்ற ஒற்றை வைக்கோல் புரட்சி என்ற நூல் இயற்கையின் விதிகளை மீறாமல் வேளாண்மை செய்வதைப்பற்றி சொல்லக்கூடியது. ஆனால் அந்நூலை வாசிக்கும் ஒரு பாடப்புத்தக வாசகன் ஆச்சரியமடைவான். அந்நூலில் வேளாண்மையைப்பற்றி மட்டும் பேசப்படவில்லை. வேளாண்மையில் தொடங்கி படிப்படியாக ஒரு மேலான வாழ்க்கை பற்றி அது பேசுகிறது. பிரபஞ்சவியலை பேசுகிறது. ஆன்மீகமான உச்சநிலை நோக்கி அந்த உரையாடலை அது கொண்டுசெல்கிறது.

ஒரு மேலைநாட்டு வேளாண்மை நூலில் நீங்கள் இதை எதிர்பார்க்கமுடியாது. அந்நூலை ஒரு ஐரோப்பிய நூல்தொகுப்பாளர் செப்பனிட்டிருந்தால் அந்நூலின் கால்பகுதி அது பேசும் பொருளைவிட்டு வெளியே செல்கிறது என்று சொல்லியிருப்பார். வேளாண்மை விஞ்ஞானிக்கு பிரபஞ்சவியல் பற்றிப் பேச அடிப்படை இல்லை என்று சொல்லியிருப்பார். ஆனால் அதுதான் கீழைமரபு.

நான் ஃபுகோகாவின் நூலை வாசித்த அதேவருடம் ஒரு நூலை மலையாளத்துக்கு மொழியாக்கம் செய்தேன். இயற்கைஉணவு விஞ்ஞானியாக இருந்த சிவசைலம் நல்வாழ்வு ஆசிரம நிறுவனர் ராமகிருஷ்ணன் அவர்களின் ‘நோயின்றி வாழமுடியாதா?’ என்ற நூலை. அதில் சமைக்காத உணவே உடலுக்கான இயல்பான உணவாகும் என வாதிடுகிறார் ஆசிரியர். ஆனால் அவரது பார்வை கலை இலக்கியம் தத்துவம் சிந்தனை எல்லாவற்றையும் தொட்டு ஆன்மீகமான ஒரு முழுமைநோக்கை முன்வைக்கிறது.

ஆம், நம் மரபு அதுதான். எந்தக் கல்வியானாலும் அது தனக்கான முழுமை நோக்கைக் கொண்டிருக்கவேண்டும். இளவயதில் நான் எங்களூரின் வர்மக்கலை நிபுணர்களின், சிலம்பக்கலை ஆசான்களின் கல்விக்கூடங்களை கவனித்திருக்கிறேன். அவர்கள் வர்மம் அல்லது சிலம்புசுற்றுதல் என்னும் ஒரு கலையை மட்டும் கற்பித்தவர்கள் அல்ல. அதன் வழியாக வாழ்க்கை பற்றிய ஒரு முழுமை நோக்கை அளித்தவர்கள்.

நம்முடைய மரபில் எந்த ஒரு கலையை கற்கச்சென்றாலும் அது கடைசியில் ஆன்மீகக் கல்வியை நோக்கிச் செல்வதைக் காணலாம். சிற்பமானாலும் மருத்துவமானாலும். பிறநூல்களில் உள்ள அதே ஆன்மஞானம் அந்தத் தொழில்நுட்ப நூல்களிலும் உள்ளது. ஏனென்றால் கல்வி என்பது ஞானத்துக்கான பாதை. ஆம், மெய்ஞானத்தை நோக்கி கொண்டுசெல்லும் திராணி அற்றது கல்வியே அல்ல.

பயிற்சி தெரிந்துகொள்ளுதலை அளிக்கிறது. கல்வி அறிவை அளிக்கிறது. பயிற்சி தேர்ச்சியை அளிக்கிறது. கல்வி ஆளுமை வளர்ச்சியை அளிக்கிறது. தெரிந்துகொள்ளுதல் அரைகுறையானது. அறிவு முழுமையும் சமநிலையும் கொண்டது.

ஞானம் என்ற ஒன்றை அதன் அடுத்தபடியாக முன்வைத்தார்கள் நம் முன்னோர். ஞானம் என்பது அறிவுதான். ஆனால் அறிதல் அல்ல. நாராயணகுரு அதை அறிவிலமர்தல் என்று சொல்கிறார். அறிதலும் அறிபடுபொருளும் அறிபவனும் ஒன்றாலும் நிலை. அதுவாதல். எதை அறிகிறோமோ அதுவேயாகும் நிலை. அதுவே அறிவின் முழுமை.

நாம் அறிவது மண் துளியாக இருக்கலாம், இலைநுனியாக இருக்கலாம், புழுவாக இருக்கலாம். அந்த அறிதல் ஏதோ ஒரு கட்டத்தில் நம்மை முழுமையறிதலை நோக்கிக் கொண்டு செல்லமுடிந்தால் அதுவே உண்மையான கல்வி.

நமக்கும் இப்பிரபஞ்சத்துக்கும் இடையே ஒரு பிரம்மாண்டமான திரை உள்ளது. நம் அறியாமையின் திரை இது. மிக விசித்திரமான திரை. இந்தத் திரை நம் அகங்காரத்தாலும் ஆசைகளாலும் ஊடுபாவாக நெய்யப்பட்டுள்ளது. நாம் நமக்குத் தேவையானதை, நாம் விரும்புவதை மட்டுமே அறிகிறோம். நாம் அறிந்ததை வைத்து மேலே அறியவேண்டியதை தடுத்துவிடுகிறோம்.

இளமையில் குழந்தை கல்விக்கான பேராசையுடன் இருக்கிறது. எதை புதியதாகச் சொன்னாலும் குழந்தை கவனிக்கும். ஆனால் வளர்ந்ததும் ஒரு கட்டத்தில் எந்தப் புதிய விஷயத்தையும் நாம் உள்வாங்காதவர்களாகிறோம். ஆசையாலும் அகங்காரத்தாலும் அறிதல் நிலைத்து நின்றுவிடுகிறது. அந்த அகங்காரத்தையும் ஆசையையும் கடந்துதான் அறியாமைத்திரையைக் கிழித்து முழுமையறிவை அடையமுடியும் என்று சொல்லப்பட்டுள்ளது. அதுவே ஞானத்தின் பாதை.

ஒருமனிதன் தன் வாழ்நாள் முழுக்க கடைப்பிடிக்கவேண்டிய தேடலையே கல்வி என நாம் சொல்கிறோம். கல்விக்கூடங்கள் மிகமிக ஆரம்ப நிலையில் உள்ளவை. ஒருவன் மிக அதிகமாக கற்றால்கூட இருபத்தைந்து வயதில் அக்கல்வி முடிந்துவிடுகிறது. அதன்பின்னர் ஆரம்பிப்பதே உண்மையான கல்வி. ஞானமளிக்கும் கல்வி.

நாம் கற்றிருப்பது கல்வியல்ல, பயிற்சி என அறிபவன் கல்வியை அடையாளம் காணமுடியும். கல்வி அவனுக்கு ஞானத்தை சுட்டிக்காட்டும்.

ஒரு விழியிழந்த மனிதர் ஞானியின் வீட்டைவிட்டுக் கிளம்பும்போது இரவாகி விட்டது. அவர் தனக்கு ஒரு கைவிளக்கு கேட்டார். 'பார்வையற்ற உனக்கு ஏன்

விளக்கு?' என்றார் ஞானி 'விளக்கொளியில் என்னை மற்றவர்கள் பார்ப்பார்களே, அவர்கள் என் மேல் மோதாமலிருப்பார்கள் அல்லவா?' என்றார் பார்வையற்றவர்.

வழியில் ஒருவர் பார்வையற்றவர் மேல் மோதிக்கொண்டார் 'மூடா, நீ விளக்கைப் பார்க்கவில்லையா?' என்றார் பார்வையற்றவர் கோபமாக. அவர் சொன்னார், 'சகோதரா விளக்கு ஏற்கனவே அணைந்துவிட்டிருக்கிறது.'

பார்வையற்றவர் விளக்கின் எல்லையை அப்போதுதான் உணர்ந்தார். ஞானியிடம் திரும்பிவந்தபோது அணையாத ஒரு விளக்கை அவர் அவருக்குச் சுட்டிக்காட்டினார்.

இந்த விஜயதசமி நாளில் அந்த அணையாவிளக்கை நாம் உணர்ந்துகொள்வோம்.

## (15) மும்மொழி கற்றல்

அன்புள்ள ஜெ

மும்மொழிக்கல்வி பற்றிய உங்கள் கருத்து என்ன? இந்தி கற்பிப்பதை இன்றியமையாத தேவை என நீங்கள் எண்ணுகிறீர்களா? இன்றைக்கு நிகழும் விவாதங்களில் எவரும் மாணவர்களைப் பற்றி, கல்வித்தரம் பற்றி கவலைப்படுவதே இல்லை. அவரவர் அரசியல்நிலைபாட்டைச்சார்ந்து மோதிக்கொள்கிறார்கள். ஒவ்வொருவரும் அவரவர் அஜெண்டாவுடன் இருக்கிறார்கள். ஒரு விவாதக்குழுமத்தில்கூட நடுநிலையான பார்வை, கல்விசார்ந்த பார்வை என்பதே இல்லை. எதிர்காலம் பற்றிய பார்வை இல்லை. எல்லாருமே கல்வியாளர்களைப்போல பேசுகிறார்கள்

ஒரு மாணவி நீட் தேர்வில் தோல்வியடைந்து தற்கொலைசெய்துகொண்டார். உண்மையில் அந்த மாணவியின் முகம் இரண்டுநாட்கள் தூக்கமிழக்கச் செய்தது. எனக்கும் ஒரு மகள் இருக்கிறாள். அந்த மாணவியின் வாழ்க்கையுடன் விளையாடியவர்கள் யார்? ஒரு கல்விமுறையை கட்டவிழ்த்துவிட்டு சீரழித்துவிட்டு திடீரென ஒரு தகுதித்தேர்வைக் கொண்டுவருவது என்பது பெரிய வன்முறை. அந்தத் தகுதியை அவர்களுக்கு அளிக்கும் வாய்ப்புள்ள கல்வி வழங்கப்பட்ட பின்னரே அந்தத் தகுதித்தேர்வு அளிக்கப்படவேண்டும். அந்த மாணவி எழுதிய தற்கொலைக் குறிப்பு அதிர்ச்சி அளித்தது. அது நாலாம்கிளாஸ் குழந்தை எழுதுவதுபோல தப்பும்தவறுமாக இருந்தது. அந்தத் தரத்தில்தான் கல்வி அளிக்கப்படுகிறது. ஆனால் தகுதித்தேர்வு வேறு தரத்தில். அந்த மாணவி தனக்கு தமிழே தெரியவில்லை என்றுகூட தெரியாத அளவுக்கு கல்விமுறை இருக்கிறது.

தேர்வில் உயர்மதிப்பெண் பெற்ற பெண்ணின் தமிழ்க்கல்வித் தரம் இப்படி இருக்க கூடவே இந்தியையும் அறிமுகம் செய்வதைப்போல கொடுமை வேறு ஒன்றுமில்லை என நினைக்கிறேன். இதைப்பற்றி உங்கள் எண்ணம் என்ன?

எஸ்.தர்மராஜன்

அன்புள்ள தர்மராஜன்,

நீங்கள் சொல்வதுபோல இது அரசியல்தரப்புகளின் விவாதமாக ஆகிவிட்டிருக்கிறது. இதில் எல்லாருமே கல்வியாளர்களாகக் கருத்து சொல்கிறார்கள். ஆகவே முடிந்தவரை சூடு அடங்கியபின் எழுத்தாளனாக என் கருத்தைச் சொல்கிறேன்.

இப்போது கருத்து சொல்பவர்கள் பெரும்பாலும் இதை இன்றைய அரசியல் சூழலில் நின்றோ இன்றைய பண்பாட்டுவிவாதச் சூழலில் நின்றோதான் பேசுகிறார்கள். இக்கொள்கைகளை வகுப்பவர்கள்கூட ஐம்பதாண்டுகளுக்கு முன் பள்ளிக்கல்வி பெற்ற பண்பாட்டு – கல்வித்துறைச் செயல்பாட்டாளர்கள். இவர்கள் பண்பாட்டு ஒற்றுமை, தேசிய ஒருமைப்பாடு என்றெல்லாம்தான் யோசிக்கிறார்கள். uண்மையில் இதை நடைமுறை சார்ந்து, நம் பள்ளிக்குழந்தைகளின் கோணத்தில் யோசிக்கவேண்டும்.

இதைப்பற்றிப் பேசும் எவருக்காவது இங்கே கல்வியின் உண்மையான நிலை என்னவாக இருக்கிறது என்று தெரியுமா? போலியான புள்ளிவிவரங்களை கொண்டு அறைகளில் அமர்ந்து முடிவுகளை எடுக்கிறார்கள் – எல்லாவற்றிலும் அப்படித்தான். தமிழ்நாட்டின் கல்விச்சூழல் உண்மையில் நாளுக்குநாள் அழிந்துகொண்டிருக்கிறது. உடனே பிகாருடன் ஒப்பிட்டு தமிழகம் எத்தனையாவது இடத்தில் இருக்கிறது என பேச ஆரம்பிக்கிறார்கள். ஓரிருமுறையேனும் பள்ளிகளுக்கோ கல்விநிலையங்களுக்கோ சென்றிருப்பவர்கள் நான் சொல்வதைப் புரிந்துகொள்வார்கள்

நம் கல்வித்துறை இரு பெரும்பிரிவுகளால் ஆனது. அரசுக்கல்வி, தனியார்க் கல்வி. அரசுக்கல்வித்துறையில் முப்பதாண்டுகளுக்குமுன்பே பணிநியமனம் முழுக்கமுழுக்க லஞ்சம்கொடுத்தால்தான் நிகழும் என்றாகியது. இன்று அது உச்சகட்டத்தில் உள்ளது. விளைவாக ஆசிரியராகக்கூடிய தகுதியும் மெய்யான ஆர்வமும் கொண்டவர்கள் ஆசிரியர்களாக ஆவது மிகமிககுறைந்தது. அது நன்றாகப் படித்தவர்கள் விரும்பும் தொழில் அல்ல இன்று. குறைந்த கல்வித்திறனும் பணமும் கொண்டவர்கள் 'வாங்கி' அமரும் ஒரு பணி.

அதன் விளைவுகளை அரசுசார் கல்விநிலையங்கள், அரசு உதவிபெறும் கல்விநிலையங்கள் அனைத்திலும் இன்று காணலாம். கல்லூரி ஆசிரியர் பணிக்கு கிட்டத்தட்ட 75 லட்சம் லஞ்சம் கொடுக்கப்படவேண்டும். அதன்பின் அந்த ஆசிரியரிடம் வேலைபார்க்கும்படி எவர் சொல்லமுடியும்? பெரும்பாலான அரசுநிறுவனங்களில் கல்வி என்பதே ஒருவகை ஒப்பேற்றல் மட்டும்தான். விதிவிலக்கான ஆசிரியர்கள் சிலரே.

இன்னொருபக்கம் தனியார்க் கல்வி. அங்கே ஆசிரியர்களுக்குச் சம்பளம் மிகமிகக் குறைவு. தனியார்க் கல்விநிலையம் ஒன்றில் முதுகலைப் பட்டம்பெற்று ஆசிரியராகப் பணியாற்றுபவர் பெறும் சராசரி ஊதியம் அரசுக்கல்விநிலையத்தில் ஆரம்பப் பள்ளி ஆசிரியர் பெறும் சம்பளத்தில் நான்கில் ஒன்று மட்டுமே. தமிழகத்தில் ஒரு கூலித்தொழிலாளி பெறும் சராசரி ஊதியத்தில் பாதி மட்டுமே. நம்பவேமுடியாத ஊதியத்தில் பணியாற்றுபவர்களைக் கண்டிருக்கிறேன் – ஒரு பொறியியல் கல்லூரி ஆசிரியர் அவர் மாதம் நாலாயிரம் ரூபாய் வாங்குவதாகச் சொன்னார். அவர்கள் வெறும் அடிமை உழைப்பாளிகள்.

இவ்விரு வகையிலும் கல்வி கைவிடப்பட்டிருக்கிறது. முதல்வகைக் கல்வியில் மாணவர்களுக்கு எதுவும் சொல்லித்தரப்படுவதில்லை.இரண்டாம் வகை கல்வியில் மாணவர்கள் மூர்க்கமாக தேர்வுக்குரிய பயிற்சி மட்டுமே அளிக்கப்படுகிறார்கள். இரண்டு இடங்களிலும் கல்வி என்பது இல்லை.

கல்லூரிகளுக்குச் சென்றால் நெஞ்சு பதைபதைக்கிறது. மாணவர்களுக்கு எதிலும் அடிப்படை அறிதலே கிடையாது. கவனிக்கும் பயிற்சியும் இல்லை. வெறும் முகங்களை நோக்கிப் பேசவேண்டியிருக்கிறது. உளம் கசந்து கல்விநிலையங்களுக்கு இனி செல்வதில்லை என முடிவெடுப்பேன். அப்படி முழுக்க தொடர்பு இல்லாமல் ஆகக்கூடாது என மீண்டும் செல்ல ஆரம்பிப்பேன். இந்த ஊசலாட்டத்திலேயே இருக்கிறேன்.

உங்கள் வினாவுக்கு வருகிறேன். இன்றைய கல்வித்தேவை தொடர்ச்சியாக மாறிக்கொண்டே இருக்கிறது. கல்வி மேலும் மேலும் விரிவானதாக, ஆழமானதாக, சவால்மிக்கதாக ஆகிறது. அது உலகநாகரீக வளர்ச்சியுடன் தொடர்புடையது. அறிவியல்கல்வி இன்னும் இன்னும் சவால்மிக்கதாகவே ஆகும். வேறுவழியே இல்லை.

நாம் இங்கே சரியான அறிவியல்கல்வியை அளிப்பதே இல்லை. நம் மாணவர்கள் அறிவியல்கருதுகோள்களை புரிந்துகொள்வதில்லை. அறிவியல்ரீதியான சிந்தனைக்குப் பழகுவதில்லை. அறிவியலை மனப்பாடம் செய்து எழுதிக்கொண்டிருக்கிறார்கள். மிகமிக அடிப்படையான அறிவியல் கொள்கைகள் கூட நம் மாணவர்களுக்கு, உயர்கல்வி மாணவர்களுக்குக்கூட புரிந்திருப்பதில்லை. அவற்றை அறிந்திருக்கிறார்கள், அவ்வளவுதான்.

இதற்கான காரணம் கல்வித்திட்டச் சுமைதான்.இங்கே இப்போது இருமொழிக் கல்வி உள்ளது. இதுவே நடைமுறையில் பெருஞ்சுமையாக உள்ளது என்றே நான் பத்தாண்டுகளாக எழுதி வருகிறேன். ஆங்கிலத்தை இனி எவரும் தவிர்க்க முடியாது. அது உலகமொழி, தொழில்நுட்பத்தின் மொழி. நாம் பெறும் வேலைவாய்ப்புகளில் 99 சதவீதமும் நாம் ஆங்கிலம் அறிந்தவர்கள் என்பதனால் அமைவதே. நம் தொழில்கள் அனைத்திலும் ஆங்கிலக் கல்வி இன்றியமையாதது. ஆங்கிலம் கற்றோர் கற்காதோர் என நாடே இரண்டாகப்பிரிவுண்டிருக்கிறது. ஆங்கிலம் கற்றவர்களுக்குரியது இன்றைய அனைத்து உலகியல்வெற்றிகளும்.

இன்று தங்கள் மொழிகளிலேயே உயர்கல்வியும் தொழில்நுட்பக் கல்வியும் வழங்கிவந்த ஐரோப்பிய நாடுகளும் சீனாவும் ஜப்பானும் எல்லாம்கூட ஆங்கிலம் நோக்கித் திரும்பிக்கொண்டிருக்கின்றன. ஆகவே தாய்மொழியில் உயர்கல்வி என்பதெல்லாம் இனி மிகமிக அபத்தமான பேச்சுக்கள். இனி அது நடக்கவே நடக்காது. ஆங்கிலமே அறிவியல்கல்வியின் மொழி.

ஆனால் தாய்மொழிக்கல்வியை நாம் தவிர்க்கமுடியாது. ஆகவே வேறுவழியின்றி இருமொழிக்கல்வி இங்கே உள்ளது. இது எந்த லட்சணத்தில் உள்ளது என அறியவேண்டும் என்றால் சில பள்ளிகளுக்குச் சென்றுபாருங்கள்: அரசுப்பள்ளி, தனியார்ப்பள்ளி இரண்டுக்கும். தமிழ்க்கல்வி மிகமிகப் பரிதாபகரமான நிலையில் இருக்கிறது. பன்னிரண்டாம் வகுப்பு படிக்கும் மாணவர்களிலேயே பெரும்பிழையில்லாமல் ஒரு பத்தி எழுதுபவர்கள், சொந்தமாக ஒரு கருத்தை எழுதத் தெரிந்தவர்கள் மிகமிகக்குறைவு. ஆயிரம் பல்லாயிரத்தில் ஒருவர். பிறர் தட்டுத்தடுமாறி படிப்பார்கள். மனப்பாடம் செய்து ஓரளவு எழுதுவார்கள்.

இங்கே மிகப்பெரும்பாலான மாணவர்கள் தமிழில் எதையும் வாசிப்பதில்லை. நாளிதழ்களைக்கூட. ஒரு கல்லூரியில் என்னுடன் வந்த குமுதம் நிருபர் சிந்துகுமார் 'இங்கே குமுதம் வாசகர் எவர்?" என்றார். எவருமே இல்லை. 'குமுதத்தை ஒருமுறையேனும் பார்த்தவர் எவர்?" என்றார் ஒரு பெண் ஒருமுறை பார்த்திருந்தாள். "ஏதேனும் வார இதழை வாசிப்பவர் யார்?" என்றார். எவருமில்லை. "தமிழ்நாளிதழ்களை தொடர்ச்சியாக வாசிப்பவர் எவர்?" என்றார். எவருமில்லை. இன்று இளையதலைமுறையிடம் தமிழ்க்கல்வி பெரும்பாலும் இல்லை. இதுவே உண்மை நிலை. தமிழில் சரளமாக வாசிப்பவர்க்ள் 30 வயதுக்கு மேற்பட்டவர்கள் மட்டுமே.

ஏன்? இதுதான் காரணம். இங்கே தனியார்ப்பள்ளிகளில் பயிற்றுமொழி ஆங்கிலம். தமிழ் இரண்டாம்பாடம். தமிழில் வெற்றிபெற்றால் மட்டும் போதும். ஒரு வாரத்தில் நான்கு அல்லது மூன்று மணிநேரம் தமிழ்

பயிற்றுவிக்கப்படுகிறது. அதுவும் விடைகளை மனப்பாடம் செய்து எழுதுவதற்கு மட்டும். தமிழ்ப்பயிற்சி முற்றாகவே இல்லை. மாணவர்களுக்கு தமிழ் பெரிய தொல்லை என்றே தோன்றுகிறது. அரசுப்பள்ளிகளில் முறையான பயிற்சி அளிக்கப்படுவது அரிது. ஆகவே தமிழகத்தில் தமிழ் ஓரளவுமட்டுமே தெரிந்த ஒரு தலைமுறையே உருவாகிவிட்டது. இன்னமும்கூட தமிழ் தமிழ் என கூச்சலிடுபவர்கள் இதைப் புரிந்துகொள்ளவில்லை.

நான் இதை தொடர்ச்சியாக அவதானித்துக் கொண்டிருக்கிறேன். நம் மாணவர்களால் தமிழில் நூல்கள் எதையும் வாசிப்பதில்லை. ஏனென்றால் தமிழை அவர்களால் முக்கிமுக்கித்தான் வாசிக்கமுடியும். அவர்களின் மொழித்தரத்துக்குரிய நூல்கள் அறிவுத்தரத்தை வைத்துப்பார்த்தால் மிகமிக கீழே இருக்கின்றன. அதாவது பன்னிரண்டாம் வகுப்பு மாணவன் ஐந்தாம் வகுப்புத்தர நூலையே வாசிக்க முடியும். ’முட்டாள் மட்டி மடையன்’ கதைகள் என்பதுபோல. ஆனால் அவன் இன்ஸெப்ஷன் படம் பார்க்கக்கூடியவனாக இருப்பான். ஆகவே அவனுக்கு அது ஆர்வமூட்டுவதில்லை. ஹாரிபாட்டர் அவனுக்கு எளிதாக இருக்கிறது.

இதை எண்ணியே நான் 'பனிமனிதன்', 'வெள்ளிநிலம்' போன்ற நூல்களை எழுதினேன். அவை குழந்தைநாவல்களுக்குரிய எளிமையான மொழி கொண்டவை. ஆனால் பரிணாமஅறிவியல், மதங்களின் இயங்கியல் போன்ற சிக்கலான, தீவிரமான விஷயங்களைப் பேசுபவை. இங்கே குழந்தை எழுத்தாளர்கள் எனப்படுபவர்கள் சிக்கலான தமிழில் ’அம்முவும் அம்பதுபைசாவும்’ போன்ற எளிமையான நீதிக்கதைகளை எழுதிக்கொண்டிருக்கிறார்கள். குழந்தைகள் அந்நூல்களை அருவருக்கின்றன. நான் எழுதியது ஒரு முன்னுதாரணமாக. இன்றுதேவை வரலாறு அறிவியல் என ஆய்வுசெய்து எழுதப்படும் நூல்கள் – ஆனால் ஐந்தாம்வகுப்புக்குரிய மொழிநடை கொண்டவை. அவற்றையே நம் பத்தாம் வகுப்பு மாணவன் வாசிப்பான். நான் ஒரு முன்னுதாரணமே எழுதிக்காட்டினேன். சரியான குழந்தை எழுத்தாளர்கள் இன்னும்கூட சிறப்பாக எழுதமுடியும்

ஆனால்  பல நண்பர்களின் ஆங்கிலம் வழிக்கல்விகொண்ட குழந்தைகள் பனிமனிதனையும் வெள்ளிநிலத்தையும் வாசிக்கும்படி தந்தையிடம் சொல்லி கேட்கவே விரும்புகின்றன. ஏனென்றால் அவற்றின் அறிவுத்தரம் அந்நூல்களை எளிதில் தொடுகிறது. ஐந்தாம்வகுப்புத்தமிழே கூட முக்கிமுக்கி வாசிக்கக்கூடியதாக உள்ளது. தமிழ் கேட்டால் நன்கு தெரியும். தமிழின் எழுத்துரு கண்ணுக்கும் உள்ளத்திற்கும் பழகாமல் அயலானதாக உள்ளது.

மொழிக்கல்வி இன்றைய நவீன உலகில் ஒரு முக்கியமான அறிவுத்தகுதி அல்ல. பலமொழிகள் அறிந்திருப்பதனால் பெரிய நன்மை ஏதும் இல்லை. ஒருவேளை இன்னும் பத்தாண்டுகளில் மொழிகளுக்கிடையேயான தானியங்கி மொழியாக்கம் முழுமையை அடைந்துவிடக்கூடும்..நான் இப்போதே சாதாரணமாக பிரெஞ்சு, ஸ்பானிஷ் இணையதளங்களை வாசிக்கிறேன். கன்னட  வங்க இணையதளங்களைக்கூட வாசிக்கிறேன். இச்சூழலில் மொழிக்கல்விக்கு மூளையுழைப்பின் பெரும்பகுதியைச் செலவிடுவது மாபெரும் வீணடிப்பு

அத்துடன் இன்று அறிவியலுக்குள்ளேயே பல மொழிகளை நாம் கற்றேயாகவேண்டியிருக்கிறது. யோசித்துப்பாருங்கள், அல்ஜிப்ரா ஒரு தனிமொழி. வேதியியல்குறியீடுகள் ஒரு தனிமொழி. அப்படி மொழிக்குள் பலமொழிகளை நாம் கற்றுக்கொள்ளவேண்டியிருக்கிறது. ஆகவே மேலதிகமாக ‘பண்பாட்டு ஒருமைப்பாட்டுக்காக’ மொழி கற்பது போல அபத்தம் வேறில்லை. அது ஒட்டுமொத்தமாகவே இந்தியாவை அறிவார்ந்த பின்னடைவுக்கே கொண்டுசெல்லும். உலகப்போட்டியில் நாம் தோற்போம்

இப்போதே நாம் பிள்ளைகள்மேல் மிகுசுமையை ஏற்றிக் கொண்டிருக்கிறோம். இளவயதில் இரண்டு எழுத்துருக்களை [லிபிகளை] படிக்கவும் எழுதவும் கற்பது மிகப்பெரிய சுமை. இளமையில் நாம் மொழியை எளிதாகக் கற்கிறோம். ஆனால் லிபி கற்பது மிகப்பெரிய உழைப்பு. யோசித்துப்பாருங்கள். நாம் கையில் எழுதுகோலை எடுப்பது

முதல்வகுப்பில் [இப்போதெல்லாம் இரண்டுவயதில்] ஓரளவு சரளமாக நாம் எழுத ஆரம்பிப்பது பத்தாம் வகுப்பில். பத்துப்பதினைந்தாண்டுக்கால கடும் உழைப்பு. ஒவ்வொரு நாளும் ஐந்தாறு மணிநேரம் பயின்றுதான் கைக்கு எழுத்துக்கள் பழகவேண்டியிருக்கிறது. மூளை எழுத்துருக்களை சரளமாக மொழியாக ஆக்கமுடிகிறது. மானுடம் அளிக்கும் மிகப்பெரிய அறிவுழைப்பு எழுதப்பழகுவதும் எழுத்துருவை மொழியாகப் பழகுவதும்தான்.

இரண்டுமொழியோ மூன்றுமொழியோ கடும் உழைப்பால் கற்கமுடியும்தான். ஆனால் இயல்பாகவே மூளை அவற்றில் ஒன்றைத்தான் தனக்குரியதாகத் தெரிவுசெய்யும். அதில்தான் திறன் வெளிப்படும். நான் கற்றகாலத்தில் எங்கள் மூளை தமிழைத் தெரிவுசெய்தது. 15 ஆண்டுக்காலம் ஆங்கிலம் கற்றபின்னரும் ஆங்கிலம் கைக்கும் மூளைக்கும் அயலானதாகவே இருந்தது. இன்றைய மாணவனுக்கு ஆங்கிலம் முதன்மையாக உள்ளது. தமிழ் அயலானதாக உள்ளது.

தமிழ் ஆங்கிலம் இரண்டுக்கும் எழுத்துவடிவங்கள் முழுக்கமுழுக்க வேறானவை. அதாவது அவற்றின் வளைவுத்தன்மைகள், கோட்டுவடிவங்கள் முற்றாக வேறுபட்டவை. அவற்றை மூளை எதிர்கொள்கையில் திகைக்கிறது. ஒருவன் இணையான கோட்டுவடிவம்கொண்ட தமிழ் எழுத்துருவையும் மலையாள எழுத்துருவையும் கற்பதுபோல அல்ல அது. முற்றிலும் வேறான கோட்டுவடிவம் ஒன்றை எதிர்கொள்வதை மூளை எத்தனை எதிர்ப்புடன் சந்திக்கிறது என்பதை பற்றி ஏராளமான ஆய்வுகள் இன்று வந்துள்ளன

எழுதுவது என்பது விரல்களை ஒரு ஆக்ரோபேட்டிக்ஸுக்குப் பழக்குவது என்று பூஃக்கோ சொல்கிறார். இரண்டு லிபிகளை எழுதுவது என்பது இரண்டுவகை ஆக்ரோபாட்டிக்ஸ்கலைகளை ஒரே சமயம் பழகுவது. அதுவே நம் மூளையைச் சோர்வடையச் செய்து இந்நூற்றாண்டுக்குரிய மெய்யான கல்வியை அடையமுடியாமல் ஆக்கிவிடுகிறது என்பதே என் தரப்பு. இதில் மூன்றாவது ஆக்ரோபாட்டிக்ஸை புகுத்த நினைக்கிறார்கள்.

இந்தியோ வேறுமொழியோ தேவை என்றால் கற்றுக்கொள்ள இன்று எளிய வழிகள் உள்ளன. தேவையான அளவு மட்டுமே கற்றுக்கொள்ளவும் வழிகள் உள்ளன. ஜப்பான் சென்று மிகச்சிக்கலான ஜப்பானியமொழியைக் கற்ற நண்பர்கள் பலரை சமீபத்தில் சந்தித்தேன். கற்காமல் மொழியாக்கம் செய்யவும் வாய்ப்புகள் மிகுதியாகி வருகின்றன. இன்று அறிவியலை, பண்பாட்டைக் கற்றுக்கொள்ளவேண்டிய அரியபருவத்தை மொழிகளையும் எழுத்துருக்களையும் கற்று பயில செலவழிப்பது ஓர் அறிவுத்தற்கொலை.

இன்னொன்று உண்டு. மொழிகற்கும் திறன் அனைவருக்கும் ஒன்று அல்ல. காட்சிநுண்ணுணர்வு, கணித நுண்ணுணர்வு போல மொழிநுண்ணுணர்வும் ஒரு மூளைத்தனித்தன்மை. சிலரால் மொழிகளை எளிதில் கற்கமுடியும். காட்சி நுண்ணுணர்வுள்ளவர்கள் மொழிகளைக் கற்பது மிக அரிது. என்னால் மொழிகளை கற்கமுடியும். மூன்றுமொழிகளில் நாளும் புழங்குகிறேன். ஆனால் என்னால் கணிதத்துக்குள் நுழையவே முடியாது. மூன்றுமொழிகளை கற்பித்து அதனடிப்படையில் மாணவர்களை தெரிவுசெய்வது என்பது மாபெரும் வன்முறை.

இந்தியை திணிக்க நினைப்பது வட இந்திய அறிஞர்களின் உளக்கோளாறு. அரசியல்வாதிகளின் ஆதிக்க எண்ணம். 1994 ல் நான் சாகித்ய அக்காதமியின் ஒரு நிகழ்ச்சிக்காகச் சென்றிருந்தேன். நான் ஒரு கட்டுரைமேல் கருத்துரை ஆற்றவேண்டும். அக்கட்டுரை இந்தியில் இருந்தது. அதன் மொழியாக்கம் அளிக்கப்படவுமில்லை. என்னை கருத்துரை ஆற்ற அழைத்தனர். நான் மிகக்கடுமையாக எதிர்வினை ஆற்றினேன். ‘இந்தி கற்றால்தான் இந்தியன் எனில் நான் இந்தியன் அல்ல என்றே சொல்வேன்’ என்றேன்.அதைப்பற்றி பலமுறை எழுதியிருக்கிறேன்.. நானும் மலையாளக் கவிஞர் பாலசந்திரன் சுள்ளிக்காடும் இணைந்து சாகித்ய அக்காதமிக்கு ஒரு கண்டனக் கடிதமும் அனுப்பினோம். இன்றும் என் எண்ணம் அதுவே

ஆனால் இத்தரப்பை எதிர்ப்பவர்களும் எந்த அறிவியல்நோக்கும் கொண்டவர்கள் அல்ல. வெறும் அரசியல்வாதிகள். சில மாதங்களுக்கு முன் தமிழின் ஒரு பதிப்பாளர் என்னிடம் ஒரு கோரிக்கை வைத்தார். சில

ஆண்டுகளுக்கு முன் நான் தமிழை ஆங்கில எழுத்துக்களில் எழுதலாமே என தமிழ் ஹிந்து நாளிதழில் எழுதிய கட்டுரையை பயன்படுத்திக்கொள்ள அனுமதி கோரினார். எதற்கு என்று கேட்டேன். மொரிஷியஸ்,தென்னாப்ரிக்கா முதலிய நாடுகளில் வாழும் தமிழர்கள் தமிழில் வாசிப்பதற்காக அவர் ஆங்கில எழுத்துக்களில் தமிழ்நூல்களை வெளியிடுகிறாராம். அதன் முன்னுரையாகப் பயன்படுத்திக்கொள்ள அக்கட்டுரையை கோரியிருந்தார். ஏனென்றால் அவர்கள் தமிழில் வாசிப்பதென்றால் அது ஒன்றே வழி. ஆனால் அதை சொல்லவும் அச்சம். ஏனென்றால் இங்குள்ள கலாச்சாரக் காவலர்கள் கிளம்பிவிடுவார்கள், தமிழை அழிக்கிறாய் என்று.

அக்கட்டுரை வெளிவந்தபோது எழுந்த எதிர்ப்புகளை நினைவுகூர்கிறேன். அந்த யோசனை ஈவேரா அவர்களால் முன்வைக்கப்பட்டது என்பதுகூட அவர்களை சிந்திக்கவைக்கவில்லை. தமிழ்நாட்டு தமிழ்க்கல்வியில் இருக்கும் அச்சமூட்டும் தேக்கநிலையைக் கண்டு நான் எண்ணியது அது. இன்றும் என் எண்ணம் அது மட்டுமே ஒரே வழி என்பதே. அன்றிருந்த அச்சம் பலமடங்காகப் பெருகிக்கொண்டே இருக்கிறது. இனி தமிழ்மாணவர்கள் ஆங்கிலத்தையே கற்பார்கள். ஆங்கில எழுத்துவடிவமே எழுதும்பயிற்சிகொண்டதாக அவர்களுக்குள் இருக்கும். தமிழ் எழுத்து வடிவம் ஓர் உபரி அறிதலாக, முக்கிமுக்கி வாசிக்ககூடியதாகவே எஞ்சும். ஆகவே இங்குள்ள இலக்கியங்கள் எவையும் இனிமேல் மெல்லமெல்ல வாசிக்கப்படாமல் ஆகும். குறளும் கம்பராமாயணமும் மட்டுமல்ல சுந்தர ராமசாமியும் ஜெயமோகனும்கூடத்தான். நாங்கள் தொல்லடையாளங்களாக மாறி மறக்கப்படலாம்.

இரண்டு எழுத்து வடிவங்களைப் பயில்தல் என்னும் சுமையை எதிர்காலத்தின் அறிவுச்சூழல் ஏற்றுக்கொள்ளாது. ஆங்கிலம் போல உலகப்பொதுவான எழுத்துரு ஏற்கப்படலாம். அல்லது எல்லா எழுத்துருக்களிலும் எல்லாவற்றையும் மாற்றிக்கொள்ளும் வசதி வரலாம். ஆனால் இன்றிருக்கும் சூழல் இப்படியே தொடர்ந்தால் தமிழ் ஒரு வகை பேச்சுமொழியாக மட்டுமே எஞ்சும்

ஆகவே நான் மும்மொழியை ஏற்கவில்லை. ஒற்றை எழுத்துருக்களுக்குமேல் கற்கலாகாது என்று நினைக்கிறேன். அந்த உழைப்பு நவீன அறிவுத்துறைகள் அறிவியல் ஆகியவற்றை கற்கச் செலவிடப்படவேண்டும்

பிகு. இங்கே விவாதங்கள் நிகழும் அழகுக்கு சிறந்த உதாரணம். நான் அக்கட்டுரையை எழுதியபோது பலரும் கேட்ட ;அறிவார்ந்த; கேள்வி, ”அப்படியானா விஷ்ணுபுரத்தை தங்கிலீஷ்லே அச்சிடவேண்டியதுதானே, ஏன் தமிழில் அச்சடிக்கிறே?” பலருக்கும் மாய்ந்து மாய்ந்து பதில் சொன்னேன். “இன்றைக்கு தமிழை ஆங்கிலத்தில் எழுதலாம், எல்லாரும் வாசிப்பார்கள் என்று சொல்லவில்லை. ஆங்கில லிபியில் எழுதுவதை படிப்படியாக கல்விவழியாக கொண்டுவரலாம் என்றுதான் சொல்கிறேன். அப்படி ஒரு கல்வியும் வாசிப்பும் வந்தால் அதன்பின் விஷ்ணுபுரத்தை அதில் அச்சிடலாம்” ஆனால் என்னால் அவர்களிடம் சொல்லிப் புரியவைக்கவே முடியவில்லை.

இரண்டுநாட்களுக்கு முன் வாசிக்கும்பழக்கம் கொண்ட இளம்நண்பர் அதே கேள்வியை கேட்டார். திகைப்பாக இருந்தது. நாம் சிந்தனைப் பயிற்சியை அடையவே இன்னும் எவ்வளவு தொலைவு செல்லவேண்டியிருக்கிறது. பண்பாட்டு விஷயங்களை மிகையுணர்ச்சியுடன் அரசியல்காழ்ப்புகளுடன் அணுகுகிறோம். பண்பாடே அழிந்தாலும் கண்டுகொள்வதுமில்லை.

இதனால் உடனே ஏதேனும் நடக்குமா, எதிர்ப்பவர்களின் மிகையுணர்ச்சிகளை நோக்கிப் பேசமுடியுமா, ஒருவரையேனும் புரியவைக்க முடியுமா என்று என்னிடம் கேட்டீர்கள் என்றால் வாய்ப்பில்லை என்பதே என் மறுமொழி..ஆனால் இதைச் சொல்லிக்கொண்டே இருக்கவேண்டுமென்றும் படுகிறது.

## (16) சமணமும் கல்வியும்

அன்புள்ள ஜெமோ,

உங்களை அட்லாண்டாவில் சந்தித்து அளாவளாவியது குறித்து மிக்க மகிழ்ச்சி. உங்களின் எழுத்துக்களின் வாயிலாக உங்களை சில ஆண்டுகளாக தெரியும் ஆதலால் தயக்கமின்றி உரையாட முடிந்தது. உங்களிடம் கேள்விகளை நேரில் கேட்டு பதில் பெறுவேன் என்று கனவிலும் நினைத்ததில்லை; இரண்டரை மணி நேர உரையாடல் பத்தவில்லை. உங்களின் விரல் மற்றும் தாடைகுணமாகி இருக்கும் என்று நம்புகிறேன்.

பௌத்தம் மற்றும் சமணம் குறித்து அன்று உங்களிடம் மூன்று கேள்விகள் கேட்டு பதில்கள் பெற்றேன். உங்களிடம் அன்று நேரமின்மையால் கேட்டக முடியாத கேள்விகள். நேரம் இருந்து பதில் கொடுத்தீர்களானால் மகிழ்வேன்.

1. சமணர்கள்சமணப்பள்ளிகள் அமைத்து கல்வி அளித்தார்கள் என்று ஒரு புறம் கேள்விப்படும்பொழுது, சுதந்தரத்திக்கு முன் கிட்ட தட்ட 90 சதவிகித மக்களுக்கு கல்வி அறிவு இல்லை என்றும் , குறிப்பிட்ட வெகு சில சமூகமே கல்வியில் முன்னுரிமை பெற்று இருந்தார்கள் என்றும் தரவுகள் உள்ளன . இன்றளவும் சமண மடங்கள் உள்ளது என்றால் , சமணர்கள் யாருக்கு கல்வி அளித்தார்கள்? ஏன் படிப்பறிவு மறுக்கப்பட்ட ஒரு பெரிய திரள் இருந்துள்ளது?

2. ஆசீவகம் பற்றியும் இந்த சில நாட்களாக கேள்விப்படுகிறேன். பல தரப்பட்ட விஷயங்கள் , முடிவில் குழப்பமே எஞ்சுகிறது. ஆசீவகம் என்பது என்ன ? ஆசீவகத்திற்கும் சமணத்திற்கும் தொடர்பு ஏதும் உண்டா? இவை இரண்டின் கொள்கைகள்என்ன?

உங்களின் விளக்கங்கள் எனக்கு இந்த இரண்டு சமயங்களை பற்றி புரிந்து கொள்ள உதவும் என்று நம்புகிறேன். உதவுங்கள்.

நன்றி
கவிதா

***

அன்புள்ள கவிதா

வரலாறு என்பது இருவகை பிழைகளால் நமக்கு திரிபுபட்ட நிலையிலேயே கிடைக்கிறது. நம் சார்புநிலைகளைக் கடந்து மெய்யான வரலாற்றைச் சென்றடைவதென்பது பெரிய அறைகூவல்.

முதல் பிழை என்பது ஒரு காலகட்டத்தின் பொதுவான வரலாற்றுப்புரிதல், ஓர் ஆசிரியரின் வரலாற்றுப் புரிதல் வரலாற்றுக் கருதுகோள்களில் உருவாக்கும் திரிபு. இரண்டாம் பிழை என்பது ஆதிக்க நோக்கத்திற்காக வேண்டுமென்றெ உருவாக்கப்படும் திரிபுகள்.

இவ்விரு திரிபுகளுமே இந்தியக் கல்வி குறித்த பேச்சுக்களில் உள்ளன. அக்காலகட்டத்தின் பொதுவான பிழை என்பது கல்வி என்பது இப்படித்தான் இருக்கமுடியும் என்னும் ஐரோப்பியமைய நோக்கு. ஆகவே இங்கே கல்வி இருக்கவில்லை என்னும் முடிவை ஐரோப்பிய வரலாற்றாசிரியர்களும் அவர்களைத் தொடர்ந்தவர்களும் சென்றடைந்தனர்

இரண்டாவது பிழையும் கல்வி சார்ந்த விவாதங்களில் உண்டு. இந்தியா ஐரோப்பியர்களின் ஆதிக்கநிலம். இங்கே பண்பாட்டை அவர்கள்தான் கொண்டுவந்தார்கள் என்னும் நிலைபாடு அவர்களின் ஆதிக்கத்தை நிலைநிறுத்த இன்றியமையாதது. ஆகவே அதை எப்போதுமே முன்வைத்தனர். திரும்பத்திரும்ப வலியுறுத்தினர். அதற்கான பதிவுகளை உருவாக்கினர். அதனுடன் ஒத்துப்போகும் தரவுகளை மட்டும் தொகுத்தனர்.

இவ்விரு பிழைகளையும் இன்றுகூட நம் கல்வித்துறை கடக்கவில்லை. நம் பொதுப்புத்தியில் இப்பிழைகள் சார்ந்த பார்வை நிலைகொண்டுள்ளது

முதல் பிழை சார்ந்து சிலவற்றைச் சொல்லலாம். ஐரோப்பா பதினேழாம் நூற்றாண்டில்தான் பொதுக்கல்வி என்னும் கருத்தை வந்தடைந்தது. அதாவது ஒரு நாட்டில் உள்ள அனைவருக்குமே ஒரேவகையான பொதுக்கல்வியை அளிப்பது. அது பொதுத்தன்மை கொண்ட சமூகத்தை உருவாக்க இன்றியமையாதது என ஐரோப்பா கண்டடைந்தது

உண்மையில் பொதுக்கல்வி என்பது முதலாளித்துவ [capitalist] சமூகப் பொருளியல் அமைப்பின் தேவைகளில் ஒன்று. முதலாளித்துவம் ஒட்டுமொத்தமாக சமூகத்தை பொதுத்தரப்படுத்துகிறது [standardization ] பொதுத்தரப்படுத்தல் இல்லாமல் முதலாளித்துவம் நிலைகொள்ள முடியாது. ஏனென்றால் முதலாளித்துவ அமைப்புக்கு தேவையான உழைப்பாளர் –

நுகர்வாளர் என்னும் பொதுவான ஒரு மானுடநிலை அந்தப் பொதுக்கல்வி வழியாகவே உருவாக முடியும்

முதலாளித்துவம் உருவாக்கிய பொதுக்கல்வியே அனைவருக்கும் ஒரேவகை கல்வியை அளித்தது. அதுவே ஜனநாயகத்தின் அடித்தளமாக அமைந்தது. முதலாளித்துவம் உருவாக்கியதே நவீன ஜனநாயகம்.

அதற்கு முன்பிருந்த நிலப்பிரபுத்துவ அமைப்பில் பொதுக்கல்வி என்ற அமைப்பே இல்லை. இங்கல்ல, ஐரோப்பாவிலும்கூட இல்லை. நிலப்பிரபுத்துவம் செயல்படுவதே சமூகத்தை பல அடுக்குகளாகவும் பல குழுக்களாகவும் பிரிப்பதன் வழியாகத்தான்.

ஐரோப்பாவில் பதினேழாம் நூற்றாண்டில் வந்த முதலாளித்துவம் இங்கே நூறாண்டு பிந்தியே வந்தது. ஆனா பொதுக்கல்வி ஐம்பதாண்டுகளுக்குள்ளாகவே இங்கே அவர்களால் அறிமுகம் செய்யப்பட்டது. இந்தியாவை முதலாளித்துவப்படுத்துவது இங்கிலாந்து என்னும் முதலாளித்துவ நாட்டுக்கு அவசியமாக இருந்தது. அது இந்தியாவை ஆள, இந்தியாவை சுரண்ட அவர்களுக்கு தேவை. நவீன பொதுக்கல்வி, நவீன போக்குவரத்து, நவீன செய்தித்தொடர்பு ஆகியவை நவீன நிர்வாகத்தின் அடிப்படைத்தேவைகள்.

அவ்வாறு இங்கே பொதுக்கல்வி அறிமுகம் செய்யப்பட்டது. அது ஐரோப்பியர் நமக்கு அளித்த கொடை என்பதை நான் மறுக்கவில்லை. நாம் நிலப்பிரபுத்துவத்தில் இருந்து முதலாளித்துவத்திற்கு வந்தது அவர்களால்தான், அது மாபெரும் முன்னோக்கிய நகர்வு. முதலாளித்துவம் அளித்த பொதுக்கல்வி, பொதுப்போக்குவரத்து, செய்தித்தொடர்பு ஆகியவையே நம்மை ஜனநாயகம் நோக்கி கொண்டுவந்தன

ஆனால் அதற்கு முன்னர் இங்கே கல்வி இல்லை என்றோ, சில உயர்சாதியினருக்கு மட்டுமே கல்வி இருந்தது என்றோ பொருளில்லை. இங்கே நிலப்பிரபுத்துவ அமைப்புக்குள் என்ன கல்வி இருக்க முடியுமோ அந்த கல்வி மிகச்சிறப்பாகவே இருந்தது. சொல்லப்போனால் அக்கால ஐரோப்பாவைவிட மிகமிகச் சிறப்பாக இருந்தது. இது தரவுகள் மூலம் நிரூபிக்கப்பட்ட உண்மை

நிலப்பிரபுத்துவக் கல்வி என்பது அந்தந்த தொழிற்குழுவினருக்கு அவர்களுக்குத் தேவையான கல்வியை அளிப்பதுதான். அந்தணர்களுக்கு

மதக்கல்வி அளிக்கப்பட்டது. சிற்பிகளுக்கும் தச்சர்களுக்கும் அவர்களுக்குரிய கல்விகள் இருந்தன. வணிகர்களுக்கு வணிகத்திற்குரிய கல்வி. இவ்வாறு ஒவ்வொரு சாதியினருக்கும் அவர்களுக்குரிய கல்வி அளிக்கப்பட்டது

உதாரணமாக உழவர்களுக்கு உழவுத்தொழிலுக்குத் தேவையான கல்வி அளிக்கப்பட்டது. இக்கல்வி அடிப்படை அளவீடுகள், கணக்குகள், பருவகாலம் குறித்த செய்திகள், விவசாயம் குறித்த செய்திகள் என விரிந்திருந்தது. நானே இதைக் கண்டிருக்கிறேன். விவசாயிகளுக்கு அவர்களுக்கே உரிய நில அளவுகள், எடை அளவுகள், பருவ அளவுகள் குமரிமாவட்டத்தில் இருந்தன. சில கணக்குகள் சோதிடநூலுடன் தொடர்புள்ளவை. நானே இவற்றைப்பற்றி எழுதியிருக்கிறேன்[முகில்வண்ணம்]

இவை எப்படி கற்பிக்கப்பட்டன? இளஞ்சிறுவர்களுக்கு திண்ணைப்பள்ளிக்கூடம் போன்ற அமைப்புகள் கற்பித்தன. பின்னர் தொழிலிடங்களே கல்விநிலைகளுமாக செயல்பட்டன. மூத்தவர்களிடமிருந்து அவர்கள் கற்றுக்கொண்டார்கள். இதைத்தவிர அவ்வப்போது ஆலயங்கள், சாவடிகள் சார்ந்து கல்வி அளிக்கப்பட்டது. ஒரு புலவரோ துறவியோ ஊருக்கு வந்தால் அவர் சிலநாட்கள் தங்கி கல்விகற்பித்து திரும்பிச்செல்வது வழக்கமாக இருந்தது. இதற்காகவே ஊர்ச்சாவடிகள் உருவாக்கப்பட்டன.

இந்தியாவில் வெள்ளையர் வருவதற்கு முன்பு கல்வி எப்படி இருந்தது? அதை தெளிவாக விளக்கும் ஆய்வுநூல் காந்தியரான தரம்பால் எழுதியது. A Beautyful Tree. அழகியமரம் என்ற பேரில் தமிழிலும் வெளிவந்துள்ளது. தமிழகத்தில் செங்கல்பட்டு , காஞ்சிபுரம் வட்டாரங்களில் கிடைத்த தரவுகளைக்கொண்டு இந்த நூல் எழுதப்பட்டது. தரவுகளில் பெரும்பாலானவை ஐரோப்பியர்களால் பதிவுசெய்யப்பட்டவை.

தரம்பாலின் நூல் பதினேழாம்நூற்றாண்டு இந்தியாவில் ஒவ்வொருவருக்கும் அவரவருக்குரிய கல்வி அளிக்கப்பட்டதை நிறுவுகிறது. அதை இன்றைய பொதுக்கல்வியுடன் ஒப்பிடக்கூடாது. அது வேறுவகை கல்வி, நிலப்பிரபுத்துவ காலகட்டத்திற்குரியது, அவ்வளவுதான்.

தமிழ் வரலாற்றை எடுத்து நோக்கினால் சங்ககால கவிஞர்களில் கொல்லன் அழிசி என்னும் பெயர் காணக்கிடைக்கிறது. இரும்புக்கொல்லன் பெருங்கவிஞனாக இருந்திருக்கிறான். எல்லாவகை உடலுழைப்பாளர்களும் கவிஞர்களாக இருந்திருக்கிறார்கள். அதுவே சமணத்தின் கொடை.

சமணம் எந்த வகையான கல்வியை அளித்தது? அது நெறிநூல்களை உருவாக்கியது. பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள்போல. இலக்கண நூல்களையும் அகராதிகளையும் உருவாக்கியது. நன்னூல் , வீரசோழியம், திவாகரம் போல. இவ்வாறு கல்விக்குரிய அடிப்படைகளை உருவாக்கியது சமணம். அது தன் கல்விநிலைகளில் உயர்தத்துவத்தைக் கற்பித்தது. அங்கே கற்றவர்கள் சிற்றூர்களில் ஆசிரியர்களாக ஆனார்கள். அன்றிருந்த சிறந்த கல்வியை மக்களுக்கு அளித்தனர். ஒவ்வொருவருக்கும் அவரவருக்குரிய கல்வி.

இதில் தலித்துக்கள் கற்றிருந்தார்களா? தலித் மக்களின் கல்வி உயர்நிலையில் இருந்தது என்பதற்கான இலக்கிய சான்றுகள் ஏராளமாக இருக்கின்றன. சமணர் காலகட்டத்தில் தலித்துக்களின் கல்வி மிகச்சிறப்பாக இருந்தது என்றும் பின்னர் அது வீழ்ச்சி அடைந்தது என்றும் விரிவாக நிறுவும் அயோத்திதாசர் பின்னர் அவருடைய காலகட்டத்திலும்கூட தலித் மக்களிடையே கல்விக்குரிய ஏராளமான பாரம்பரிய அமைப்புக்கள் இருந்ததை பதிவு செய்கிறார். அவரே அத்தகைய அமைப்புக்களை நடத்தியிருக்கிறார்

அக்காலகட்டத்தில் உலகின் பிற பகுதிகளில் இருந்ததை விட இங்கே கல்விநிலை உயர்வாகவே இருந்திருக்கிறது. அதற்கு பெரும்பங்களிப்பை சமணர்கள் ஆற்றினார்கள்.

# (17) கல்விச்சாலையில் இந்திய மரபிலக்கியங்கள்

அன்புள்ள ஜெ,

நலமாக இருக்கிறீர்களா ?

நேற்று ஸ்ம்ரித்தி இரானியின் அறிக்கையில் இந்திய அரசு கல்விமுறையில் புராதன இந்திய நூல்களான வேதங்களையும் புராணங்களையும் கற்பிக்கவிருப்பதைப் பற்றி நானும் என் நண்பரும் விவாதித்தோம்.

என் நண்பரின் தரப்பு இது தான்.

1) இந்து கொள்கைகளை (values) எல்லோரிடம் (மற்ற மதத்தினரிடம் திணிப்பது தவறு தானே)

2) இது கிறுத்துவ மிஷ்னரிகள் செய்வது போலத்தானே உள்ளது

3) இது அரசாங்கத்தின் வேலையா ?

4) அரசாங்கம் எல்லா மதத்தினருக்கும் நடுநிலையாக(neutral) இருக்க வேண்டாமா ?

5) இதனை படிக்க நேரிடும் கிறுத்துவ முஸ்லிம் குழந்தகளுக்கு தேவையில்லாத குழப்பம் வராதா (எதை பின்பற்றுவது என்று) ?

6) அரசாங்கம் தன்னை (சிறுப்பான்மையர்) கைவிட்டதாக என்னக் கூடாது அல்லவா ?

7) எல்லோரும் நடுநிலையாக இருப்பது அரசின் கடமை 8) நாத்திகர்கள் கூட படிக்க நேரிடுமே.

எனது பதில், உபநிஷதிதிலும், வேதத்திலும் கடவுள் எங்கே இருக்கிறார். மனுஷன் தானே இருக்கிறார் என்றேன். அதில் நல்லவைத் தானே இருக்கிறது. அது மட்டும் இல்லாமல் அறிக்கையில் சொன்னதுப் போல் ' relevant material for teaching' என்பதனால் க்ருஷ்ணர், சிவன் எல்லாம் வராமல் பாத்துப்பாங்கனு சொன்னேன்.

இன்றைய காலகட்டத்தில் பக்தி வழிபாடு முறைகளைத்தானே சொல்லிதருகிறார்கள் பெற்றோர்கள். கீதையும், ராமாயணமும் 60 வயசு

பாட்டித் தாத்தா படிக்கும் நூலாக எண்ணவைத்துவிட்டார்களே. ஏன், திருக்குறள் படித்தாலும் பார்வை வேறு மாதிரி (அதெல்லாம் இந்த காலத்துக்கு உதவாது,அதுல சொல்ற மாதிரி நடப்பது மிக கடினம் என்கிறார்கள். இவுரு பெரிய "வாழும் வள்ளுவர்" என்று ஏளனம் வேறு).

அது மட்டுமின்றி ஒரு (பெரும்பாண்மையான) கிறுத்துவ நண்பரிடம் பைபில் பற்றி பேசினால் அவரால் அதில் இருந்து சில வற்றை குறியிட்டு சொல்ல முடியும். ஆனால் பெரும்பாண்மையான் இந்துக்களால் ஒரு நூலை குறியிட்டு சொல்ல முடியாது.

எனக்கு தெரிந்த ஒரு சிறந்த உதாரணம்: சபரிமலையில் 18 படிகள் ஏறியவுடன் கோயிலின் கோபுர மேட்டின் மேல் தத்வமஸி என்று எழுதி இருக்கும். சில ஆண்டுகளுக்கு முன் 30-38 ஆண்டுகாலம் சபரிமலைக்கு சென்ற குருசாமிகளிடம், அப்படி என்றால் என்ன என்று கேட்டேன், தெரியாது என்றனர், சில 15+ ஆண்டு சென்றவர்களிடம் கேட்டேன், அப்படி ஏதாச்சும் எழுதி இருக்குமா'னு தான் கேட்டார்கள்.

இன்னும் சொல்லப்போனால் (தமிழ் எழுத்துக்களில்) தத்வமஸி என்று பல கேசட்டுகளின் போஸ்டர்கள் சபரிமலை தோறும் உள்ள பல கேசட்/CD கடைகளில் வெளியே தோறனமாக இருக்கும். 20-30 ஆண்டுகாலம் ஆண்டுதோறும் சென்று வரும் கோயிலில் மைய கருத்தாக (ஒரு வார்த்தை தான்) என்ன சொல்லியிருக்கிறார்கள் என்றே பலருக்கு தெரியவில்லை. அது தான் இன்றைய நிலைமை.

ஆதலால் நமது ஆக்கங்களை மீட்டு எடுக்க இது ஒரு நல்ல துவக்கம். இளமையில் கற்க நல்ல நூல்கள் தான் என்பதற்கு இது நல்துவக்கமாகும்.

எல்லாம் கேட்டு விட்டு நண்பர் சொன்னார் – அதெல்லாம் கண் துடைப்பு. இவையாவும் மறைமுகமாக ஹிந்துத்துவா (BJP-RSS) தானே திணிக்கிறது என்றார். அரசாங்கம் மதத்திற்கு அப்பால் இருக்க வேண்டும். வளர்ச்சிக்கும் அமைதிக்கும் மட்டுமே பாடுப்பட வேண்டும்

அவர், அப்படி சொன்னப் பிறகு பேச்சை தொடர் விருப்பம் இல்லை. ஆதலால் நிறுத்திவிட்டேன். உண்மையில் பல சிறுபான்மையில் சேர்ந்து ஒரு 15%-20% இருக்கும் நாட்டில் பெரும்பாண்மையர் அவர்களின் நூல்களைக் கூட படிக்க முடியாதா ? எனக்கு தோன்றிய வழி : பள்ளிகளில் அவரவருக்கு விருப்பமான மொழியை பயிற்றுவிப்பதுப்போல் மத ரீதியான நூல்களை கற்று

கொடுக்கலாம் ('திராவிட' தமிழ்நாட்டில் ஒரு வேளை நாம் இதை அடைந்தாலே அது ஒரு பெரிய மையில் கல்). அதற்கு மேல் ஏதாவது வழி உண்டா ?

அன்புடன்,
ராஜேஷ்

http://rajeshbalaa.blogspot.in/

அன்புள்ள ராஜேஷ்,

உங்கள் கிறித்தவ நண்பரின் கூற்றை அப்படியே எடுத்துக்கொண்டால் நம் கல்விக்கூடங்களில் சிலப்பதிகாரத்தையும் மணிமேகலையையும் திருக்குறளையும் நாலடியாரையும் கற்றுக்கொடுக்கக் கூடாது. அவையும் மத இலக்கியங்களே. கம்பராமாயணமும் பெரியபுராணமும் ஒதுக்கப்படவேண்டும். அவை இந்து புராணங்கள். காளிதாசனின் சாகுந்தலமும் பாரதியின் பாஞ்சாலி சபதமும் கூடாது. அவையெல்லாம் இதிகாசத்தை அடியொற்றியவை.

சரி, அவர் சொல்வதையே இந்துக்களும் சொல்லலாமே. சாக்ரடீஸ், பிளேட்டோ, அரிஸ்டாடில் இங்கே பாடமாக அமையக்கூடாது. அவை கிரேக்க மதம் சார்ந்தவை. தாந்தேயை கற்பிக்கக் கூடாது அவர் கிறித்தவ இலக்கியவாதி. இரண்டாயிரம் ஆண்டு மேலைநாட்டு தத்துவ சிந்தனைகளில் பெரும்பகுதியை தூக்கிவீசிவிடவேண்டும்.ஆக, கடைசியில் என்னதான் எஞ்சும்? வெறும் தொழில்நுட்பப் பயிற்சி. தகவல் மனப்பாடம். சிந்தனைக்கான மரபார்ந்த அடிப்படைகள் அனைத்தையும் நிராகரித்துவிடவேண்டும். அரிஸ்டாட்டில் முதல் தன் மரபின் அனைத்துச் சிந்தனைகளையும் கற்றுக்கொண்டிருக்கும் வெள்ளைக்காரனிடம் சிந்திக்கும் பொறுப்பை விட்டுவிடலாம். நாம் அவனுக்கு குமாஸ்தா வேலை செய்தால்போதும்.

மதச்சார்பின்மை என்ற பேரில் சென்ற ஐம்பதாண்டுகாலமாக ஒரு போலி அறிவுஜீவிக் கும்பல் இந்த தேசத்தை பணயக் கைதியாக வைத்திருந்தது என்பதற்கு இதைவிடச் சிறந்த ஆதாரம் வேறில்லை. நமது கல்வியமைப்பில், நமது கலாச்சார அமைப்புகளில் சென்றகாலத்தின் வண்டலாகப் படிந்திருக்கும் தேங்கிப்போன இடதுசாரிகள் உடனடியாகக் களையப்பட்டாகவேண்டும்.எதையுமே புரிந்துகொள்ளாத மூர்க்கமான

பிடிவாதத்தையே கொள்கை என கொண்டிருப்பது, மாற்றுக்கருத்து எதையும் அறிவின்மை என சொல்லி எள்ளலும் நக்கலும் செய்வது அன்றி எதுவும் அறியாத குப்பைக்குவியல் என்றே இவர்களை மதிப்பிடுகிறேன்.

எந்த ஒரு பண்பாட்டுக்கும் அதற்கான சிந்தனை மரபென்று ஒன்று உண்டு. பல்லாயிரம்கால பரிணாம வரலாறுள்ளது அது. சிந்தனைக்கு அடிப்படையான மூலக்கருத்துக்கள், ஆழ்படிமங்கள் [archetypes,] உருவகங்கள் [metaphors] அந்த சிந்தனைமரபால்தான் உருவாக்கி அளிக்கப்படுகின்றன. அந்தப் பரிணாமத்தின் நுனியில் வந்து நின்று அதை தொடர்ந்து மேலே சிந்திப்பவனே புதிய சிந்தனைகளை உருவாக்குகிறான். அனைத்துத் தளத்திலும். ஏதேனும் காரணத்தால் அந்த மரபு அறுந்துபோகும்போது அப்பண்பாடு சிந்தனையில் பெருந்தேக்கத்தை அடைகிறது.

ஒரு பண்பாட்டில் பிறந்து அந்த மொழிப்பரப்பில், குறியீட்டுவெளியில், வாழ்க்கைச்சூழலில் வளர்ந்த ஒருவர் அந்த மரபில் இருந்து சிந்தனைக்குரிய கருவிகளைப் பெறுவதே இயல்பானதும் எளியதுமாகும். ஜப்பானோ இன்று சீனாவோ அவர்களின் தனிப்பண்பாட்டிலிருந்து அடைந்த தனித்தன்மைகளாலேயே சிந்தனைத்துறையில் வெற்றி கொள்கிறார்கள். ஜென் இன்றி ஜப்பான் இல்லை என்பதையே ஜப்பான் முழுக்க கண்டேன். ஜென் மதசிந்தனை என அங்கே எந்த இடதுசாரியும் கூக்குரலிடவில்லை. கன்ஃபூஷியஸுக்கு இன்றைய சீனாவின் கல்வியில் என்ன இடம் என்பதை எவரேனும் சென்று பார்க்கட்டும்.

ஆனால் இந்தியாவில் நமக்கு ஆங்கில ஆட்சி காரணமாக அந்த பண்பாட்டுத் தொடர்பு ,வேர்ப்பற்று முற்றிலும் அறுந்து போயிற்று.ஏனென்றால் அன்றைய ஐரோப்பியரின் சிந்தனை முறை அது. அவர்கள் தங்கள் சிந்தனைமுறையே மெய்யானது, உலகளாவியது என நம்பினர். ஆகவே அதை உலகமெங்கும் கொண்டுசென்றனர். விளைவாக நமது மரபான சிந்தனையின் தொடர்ச்சியை நாம் இழந்தோம். நமக்கு அன்னியமான சிந்தனைக்கருவிகளைக் கையாண்டு சிந்திக்க கட்டாயப்படுத்தப்பட்டோம். அனைத்துத் தளங்களிலும் நாம் இரண்டாமிடத்தையே இலக்காக்க முடிவதற்கு இதுவே காரணம்.

இந்தியமறுமலர்ச்சிக் காலகட்டத்தில் இந்தியாவின் மாபெரும் சிந்தனைமரபை மீட்டெடுக்கும் பெருமுயற்சிகள் தொடங்கின. அதைத் தொடங்கியவர்கள் ஐரோப்பியப் பேரறிஞர்கள். அவர்கள் தங்கள்

சிந்தனைமரபை வளர்த்து முழுமையாக்கிக் கொள்ளும் நோக்குடனேயே இந்தியச் சிந்தனை மரபை மீட்டனர். மோனியர் வில்லியம்ஸ், ரிச்சர்ட் கர்பே, ஷெர்பாட்ஸ்கி, மக்ஸ்முல்லர் போன்ற அறிஞர்களால் இந்திய ஞானமரபு ஐரோப்பிய மொழிகளை அடைந்தது.

அந்த ஐரோப்பிய மொழிகள் வழியாக நாம் அவற்றை கற்றுக்கொள்ளத் தொடங்கினோம். தயானந்த சரஸ்வதி, ராஜா ராம் மோகன் ராய், விவேகானந்தர், அரவிந்தர், தாஸ்குப்தா போன்ற அறிஞர்கள் உருவானார்கள். அதன் விளைவே காந்தி அம்பேத்கர், எம்.என்.ராய், ராம் மனோகர் லோகியா போன்றவர்களெல்லாம்.

ஆனால் சுதந்திரத்துக்குப்பின் நமக்கு ஒரு மாபெரும் பின்னடைவு ஏற்பட்டது. அதற்குக் காரணம் நேருவின் பண்பாட்டுக்கொள்கைகள்தான். முதிர்ச்சியற்ற ஓர் இடதுசாரிக்கும்பலால் நேரு சூழப்பட்டார். பி.என்.ஹக்ஸர் போன்றவர்களின் தலைமையில் நமது கல்விக்கொள்கை வகுக்கப்பட்டது. அதில் இந்தியஞானமரபை முழுமையாகவே கல்வியில் இருந்து அகற்றும் முடிவு எடுக்கப்பட்டது. இந்தியப் பண்பாட்டின் எந்த அம்சமும் கல்விக்குள் வரவேண்டியதில்லை என்று முடிவெடுக்கப்பட்டது. அதுவே மதச்சார்பின்மையாகும் என்று பிரச்சாரம் செய்தனர். ஐரோப்பியவரலாறுக்கு கொடுக்கப்படும் முக்கியத்துவம்கூட இந்திய வரலாறுக்கு அளிக்கப்படவில்லை.

இந்தியப்பண்பாட்டுக் கூறுகள் முஸ்லீம்களை அன்னியப்படுத்தும் என்றும் ஒட்டுமொத்தமாக பண்பாட்டுக்கல்வியே பயனற்றது, பயன்தரு கல்வியே உகந்தது என்றும் இரு அடிப்படை நம்பிக்கைகளின் அடிப்படையில் அந்தப் பாடத்திட்டம் அமைக்கப்பட்டது. அதன் விளைவாகவே நாம் இன்று கற்கும் மொண்ணையான கல்விமுறை உருவாகியது. ஐம்பதாண்டுகாலம் அசலாகச் சிந்திக்கும் எவரும் இக்கல்விமுறையை மீறிச்சென்றே எதையும் அடையமுடியுமென்ற நிலை வந்தது.

சியாமப்பிரசாத் முக்கர்ஜியின் காலம் முதல் பாரதிய ஜனசங்கமும் பாரதிய ஜனதாவும் இந்த அடிப்படையற்ற கல்வி முறைக்கு எதிராகப் போராடி வந்துள்ளன. அவர்களின் அரசியல் செயல்பாட்டின் இறுதிவெற்றியாக இந்திய மக்களால் வாக்களிக்கப்பட்டு அவர்கள் அதிகாரம் அடைந்திருக்கின்றனர். ஆகவே அவர்கள் எதை முன்வைத்து போராடினார்களோ அதை அவர்கள் நடைமுறைப்படுத்துவதே முறையானது.

அதற்கான உரிமை மட்டுமல்ல கடமையும் அவர்களுக்குள்ளது. எப்படி நேரு தான் விரும்பிய 'மதச்சார்பற்ற' கல்வியை அமலாக்கும் உரிமையை ஜனநாயகபூர்வமாக பெற்றாரோ அதே ஜனநாயக உரிமையை இப்போது இவர்களும் பெற்றிருக்கிறார்கள்.

உங்கள் நண்பரின் புரிதலில் உள்ள குறைகள் என்னென்ன? ஒன்று, அவர் இந்து மரபு சார்ந்த சிந்தனைகள் என்பதை இந்துமதம் சார்ந்த நம்பிக்கை என்று புரிந்துகொண்டிருக்கிறார். இந்து மரபின் தத்துவக்கருவிகளை, சிந்தனைகளை பயிற்றுவிப்பதை இந்து மதப்பிரச்சாரம் என்று எடுத்துக்கொள்கிறார். ஆகவேதான் 'பின்பற்றுவது' பற்றிப் பேசுகிறார். இது 'தெரிந்துகொள்வது' 'கற்றறிவது' என்ற அடிபப்டையிலேயே கூறப்படுகிறது எர் அவர் புரிந்துகொள்ளவில்லை.

இந்துமத நம்பிக்கைகள் வேறு, இந்துமதத்தின் பொதுக்கட்டமைப்புக்குள் வரலாற்றுக்காலம் முதல் திரட்டப்பட்டுள்ள சிந்தனைகள் வேறு. ஐரோப்பிய மறுமலர்ச்சிக்காலத்துக்கு முன்பு இருந்த பெரும்பாலான உலக சிந்தனையாளர்கள் ஏதேனும் மதத்தைச் சார்ந்தவர்களே. அவர்களின் சிந்தனைகளை அந்த மதத்தைச் சார்ந்தவை என்று பார்ப்பதில்லை. அவற்றை தத்துவ, பண்பாட்டுச் சிந்தனைகளாகவே அணுகுகிறார்கள்.

இரண்டு, மதச்சார்பின்மை என்பதை மதம் சார்ந்த அனைத்தையும் முற்றாகத் தவிர்த்துவிடுதல் என்ற பொருளிலேயே இன்று போலி அறிவுஜீவிகள் பயன்படுத்துகின்றனர். அரசும் நீதிமுறையும் எந்த மதத்தையும் சாராதிருத்தல் என்றே அதன் பொருளாக இருக்கமுடியும். மதம் சார்ந்த அனைத்தையும் தவிர்த்துவிடுவதென்பது நேற்றைய சிந்தனைகளை முழுக்க நிராகரிக்கும் மொண்ணைத்தனத்துக்கே இட்டுச்செல்லும். நல்லவேளையாக நம் போலி இடதுசாரிகள் இந்துமதம் சார்ந்த அனைத்தையும் நிராகரிப்பதைப்பற்றி மட்டுமே பேசுகிறார்கள். மற்றமதங்கள், குறிப்பாக கிறித்தவமும் இஸ்லாமும் 'மதச்சார்பற்ற மதங்கள்' என்று நினைக்கிறார்கள்.

கண்டிப்பாக பாடத்திட்டத்தில் இந்து சிந்தனை மரபின் வரலாறும், அதன் முதன்மையான சிந்தனைக்கூறுகளும் கலைக்கூறுகளும் இடம்பெற்றாகவேண்டும். அவை உருவாகி வந்த விதமும் , அவை செயல்படும் தர்க்கமும் பயிற்றுவிக்கப்படவேண்டும். அதன் மூலம் சிந்தனையின் அடிப்படைகளை நம் மாணவர்கள் கற்றுக்கொள்ள முடியும்.

சிந்திக்கும் பயிற்சியைப் பெற முடியும். கருதுகோள்களையே புரிந்துகொள்ளாமல் மொண்ணையாக படிப்பை முடிக்கும் நிலையை மாற்ற சில ஆண்டுகளில் முடியலாம்.

என் நோக்கில், இஸ்லாமியச் சிந்தனை மரபும் கிறித்தவச் சிந்தனை மரபும் கூட இன்னும் தெளிவாகவும் விரிவாகவும் நம் பாடத்திட்டத்தில் சேர்க்கப்பட்டாகவேண்டும். கடல் படம் வெளிவந்தபோது நான் அறிந்த உண்மை ஒன்றுண்டு. கிறித்தவ இறையியலின் ஆரம்ப அடிப்படைகள் கூட இங்குள்ள படித்தவர்களுக்கும் அறிவுஜீவிகளுக்கும் தெரியவில்லை. அவற்றை அறியாமல் ஃபிராய்டையோ யுங்கையோ ஏன் மார்க்ஸையோ கூட சரிவர அறிந்துகொள்ள முடியாதென்பதே உண்மை. நவீன தர்க்கவியலில் கிறித்தவ இறையியல் அடைந்த வெற்றிகள் ஐரோப்பிய நவீன சிந்தனைக்கு அடித்தளமிட்டன. அவற்றை நம் பாடத்திட்டத்தில் இன்னும் விரிவாகவே சேர்க்கலாம் .

கல்வியை காவிமயமாக்குதல் என்றெல்லாம் கூச்சலிட்டு இதை எதிர்ப்பவர்கள் செய்வது உண்மையில் என்ன? எத்தனை உயர்ந்தவை என்றாலும் எத்தனை மகத்தானவை என்றாலும் தன்னுடைய மதம் சாராத எதையும் எக்காரணம் கொண்டும் கற்றுக்கொள்ளமாட்டோம் என்று பிடிவாதம் பிடிக்கும் இஸ்லாமிய, கிறித்தவ மதவெறியை ஆதரித்து வளர்ப்பதை மட்டுமே. அதற்கான கூலியைப்பெற்றுச் செயல்படும் ஐந்தாம்படையினர் இவர்கள்.

உண்மையான கிறித்தவர்கள் ஒருபோதும் இந்த மூளைச்சலவைக்கு ஆளாகமாட்டார்கள். இந்திய மெய்ஞான மரபின் பேரறிஞர்கள் பலர் கிறித்தவர்களே. வெட்டம் மாணி, ராவ் பகதூர் செறியான் முதல் பேராசிரியர் ஜேசுதாசன் வரை. இங்குள்ள மாபெரும் கிறித்தவ அறிஞர்களான வீரமாமுனிவர் முதல் மாயூரம் வேதநாயகம் பிள்ளை வரை இந்து ஞானமரபை கற்றறிந்தவர்களே. மதத்தையும் சிந்தனையையும் பிரித்தறிய அவர்களால் முடிந்தது.

ஆனால் இந்தச் சிந்தனைத்தெளிவு பாரதிய ஜனதாவிடமும் இருக்கவேண்டும். இந்திய சிந்தனை மரபைக் கற்றுக்கொடுப்பதென்பது இந்து மதநம்பிக்கைகளை கற்பிப்பதல்ல என்று அவர்கள் அறிந்திருக்கவேண்டும். இந்து ஆசாரங்களையும் சிந்தனைகளையும் வேறுவேறென பிரித்தறியும் விவேகம் அவர்களுக்கிருக்கவேண்டும்.

இந்துசிந்தனையை முன்வைக்கையில் அது மதத்தை வலியுறுத்துதல் ஆக ஆகிவிடலாகாது என அவர்கள் உணரவேண்டும். அத்துடன் கடந்தகாலச் சிந்தனைகளைக் கற்பிக்கும்போது அவற்றை சமகால அறவுணர்வு சார்ந்த கூரிய விமர்சனத்துடன் கற்பிக்கும் நிலைப்பாடு அவர்களிடமிருக்கவேண்டும். மதநம்பிக்கையாகவும் மரபுவழிபாடாகவும் சிந்தனைகள் கொண்ட்செல்லப்படக்கூடாது. அதற்குத்தகுதியான ஆசிரியர்கள், அறிஞர்கள் கண்டடையப்படவேண்டும். தங்கள் அணியிலுள்ள கீழ்மட்டப்பிரச்சாரகர்களை அங்கே கொண்டு சென்று வைக்கக்கூடாது.

அத்துடன் இந்து சிந்தனை மரபு என்பது வெறும் ஆன்மீக, வைதிக, வேதாந்த மரபு மட்டும் அல்ல என்றும் சார்வாகர்கள் போன்ற நாத்திகர்களையும் சாங்கியர் வைசேடிகர் போன்ற உலகியலாளர்களையும் உள்ள்டக்கிய மாபெரும் விவாதக்களமாகவே அது இருந்தது என்றும் அவர்கள் அறிந்திருக்கவேண்டும். இந்து சிந்தனையின் மறுபக்கமாக திகழ்ந்த சமண, பௌத்த சிந்தனைகளையும் கற்காமல் அக்கல்வி முழுமையடையாதென்றும் அவர்கள் உணர்ந்திருக்கவேண்டும்.அப்படி இல்லை என்றால் அதைச் சுட்டிக்காட்டும்பொறுப்பு சிந்தனையாளர்களுக்கு உள்ளது.

உண்மையில் ஸ்மிரிதி இரானியின் அறிவிப்பு அதை உணர்ந்ததாகவே தோன்றுகிறது. [The ministry is planning to set up a committee to study the ancient Hindu texts, Vedas, Upanishads and other epics to select relevant material for teaching.] கல்வித்துறை சார்ந்த அறிஞர்களினாலான குழு தேவையான பகுதிகளை பாடமாக ஆக்குவதைப்பற்றி சிந்திக்குமென்றே அவர் சொல்லியிருக்கிறார்.

நம் கல்விமுறையில் உள்ள இந்தப் போதாமையையும், இந்திய ஞானமரபை உள்ளிட்டு அதை நீக்கும் வழிகளையும் பற்றி தொடர்ந்து நடராஜகுருவும் நித்ய சைதன்ய யதியும் பேசிவந்திருக்கிறார்கள். நடராஜகுரு அதற்கென்றே ஈஸ்ட்வெஸ்ட் யூனிவர்சிட்டி என்னும் அமைப்பையும் உருவாக்கினார். ஆனால் தனியார் எவரும் செய்துவிடமுடியாத பெரும்பணி அது. அதுசார்ந்த விழிப்புணர்வு கல்விச்சூழலில் உருவாகுமெனில் நன்று.

ஆனால் தனிப்பட்ட முறையில் எனக்கு உடனடியாக பெரிய நம்பிக்கைகள் ஏதுமில்லை. இந்திய அறிவுச்சூழல் ஒருபக்கம் வறட்டு மார்க்ஸியம் மறுபக்கம் மூடத்தனமான மரபுவழிபாடு என்று பிளவுண்டுள்ளது. நடுவே

இருக்கும் அறிவார்ந்த நடுநிலைத்தளம் மிகமிக வலுவற்றிருக்கிறது. அதற்கு கல்வித்துறையில் இடம் கிடைப்பதற்கான வாய்ப்பே இன்றில்லை. ஏனென்றால் இன்றிருப்பது ஒரு துருவப்படுத்தல். இந்திய மரபுசார் மெய்யியலையும் தத்துவத்தையும் கற்பிப்பதே வன்முறை என எதையுமே அறிந்துகொள்ள முயலாத ஒரு தரப்பு கூச்சலிடும். அப்படித்தான் கற்பிப்போம் என இன்னொரு தரப்பு தன் பழைமைவாதத்துடன் கிளம்பி வரும்.

அறுதியாக இன்றைய அரசியல் சூழலில் வெறும் சம்பிரதாய மதநூல்களை அப்படியே பாடத்தில் புகுத்தி சில பழம்பஞ்சாங்கங்களை அதற்கு காவலாக நியமிப்பது மட்டுமே நிகழுமென நான் எதிர்பார்க்கிறேன். என் எதிர்பார்ப்புகள் பொய்க்குமெனில் அதைவிட மகிழ்ச்சிக்குரியது ஏதுமில்லை.

**********